ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சி ப்ரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசார்ய ஸ்வாமியால்
எழுதப்பட்ட

# அறுபத்துமூன்று உபந்யாஸமாலை.

ஸ்ரீஸ்வாமியின் அறுபத்துமூன்றாவது திருநக்ஷத்ரபூர்த்திக்கு
ஸ்மாரக சின்னமாக வெளியிடப்பட்டது.



விஜய பங்குனி விசாகத்திருநாள்



ஸ்ரீரங்கம் ஸ்ரீவிலாஸம் பிரெஸ்ஸில் முற்பகுதியும்,
ஸ்ரீகாஞ்சி வேங்கடேச்வரப் பிரெஸ்ஸில் பிற்பகுதியுமாக
அச்சிடப்பட்டது.





கிடைக்குமிடம்:—

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

விலை 1—8—0

1954

ஸ்ரீ:

# உபந்யாஸ விஷயங்களின் அட்டவணை.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அறுபத்துமூன்று உபந்யாஸமாலை

ஸ்ரீகாஞ்சீ. ப்ர. அண்ணங்கராசார்யஸ்வாமி.

## 1. எது சாஸ்த்ரார்த்தம்?

நம் ஆசாரியர்கள் எடுத்துக்காட்டும் பிரமாண வசனங்களுள் * शास्त्रज्ञानं बहुक्लेशं बुद्धेश्चलनकारणम् । उपदेशाद्धरिं बुद्ध्वा विरमेत्सर्वकर्मसु–சாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேசம் புத்தேச் சலநகாரணம், உபதேசாத் ஹரிம் புத்த்வா விரமேத் ஸர்வகர்மஸு. * என்பது மொன்று. இதன் பொருளாவது, சாஸ்த்ரங்களை வாசித்து ஞானம் பெறுவதென்பது மிகவும் கடினமானது; சிரமப்பட்டுப் பெற்றாலும் புத்தி சலிப்பதற்கே ஹேது வாகும்; தெளிவு உண்டாகாது. ஆகவே மஹாசார்யர்களின் திருவடிவாரத்தில் காத்திருந்து அவர்களிடம் உபதேசங்கள் கேட்டு அவ்வழியாலே பகவானையறிந்து கொண்டு ஸகலகர்மங்களிலும் ஓய்ந்திருக்கவேண்டும்—என்பதாம். இதனால் சாஸ்த்ரங்களை வாசிக்கக் கூடாதென்று கட்டளையிடுவதாக நினைக்கலாகாது. எத்தனை சாஸ்த்ரங்கள் வாசித்தாலும் ஆசார்யர்கள் ஸாரமான பொருளைத் திரட்டி யெடுத்து உபதேசிக்கக் கேட்டாலொழியத் தெளிவு பிறவாது, ஆகவே உபதேசம் கேட்பது தான் முக்கியம் என்னுமிவ்வளவே இந்த வசனத்தின் கருத்தாகத் தேறும். நமது ஸம்பிரதாயத்தில் ஆசாரியர்கள் பரம்பரையாக வந்துகொண்டிருக்கிறார்கள்; இவர்கள் சிஷ்யர்களுக்கு உபதேசங்கள் செய்யவேணுமானால் சாஸ்த்ரஜ்ஞான ஸம்பந்நர்களா யிருந்தாலொழியச் செய்யமுடியாது. உபதேசம் கேட்கிற சிஷ்யர்கள் பிறகு ஆசார்ய பதவியில் அமர்ந்து தாங்கள் தம் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்ய வேணுமானால் தாம் சாஸ்த்ரஜ்ஞான ஸம்பந்நர்களா யிருந்தாலொழியச் செய்ய முடியாது. இப்படி சிஷ்யாசார்ய க்ரமம் தொடர்ந்து வருமிடத்து சாஸ்த்ரஜ்ஞான ஸம்பத்து இன்றியமையாததாகும். ஆகவே * சாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேசம் * என்கிற இந்த வசனமானது சாஸ்த்ரஜ்ஞானம் ஸம்பாதிக்கவேண்டாமென்று சொல்லவந்ததன்றென்றும் உபதேசம் பெறவேண்டியது ஆவச்யகம் என்பதை வற்புறுத்தவே வந்ததென்றும் கொள்ளத்தக்கது.

நம்முடைய ஸம்ப்ரதாயத்தில் உபதேச க்ரந்தங்களென்று சில அருமை பெருமைவாய்ந்த நூல்கள் வழங்குவதுண்டே; முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசநபூஷணம், ஆசார்ய ஹ்ருதயம் என்றாற்போன்ற திவ்யக்ரந்தங்களுக்கு உபதேச க்ரந்தங்களென்று பெயர். இவற்றால் உண்டாகும் ஞானம் மிகத் தெளிவாகவே யிருக்கும். இவற்றில் அருளிச் செய்யப்படுகிற அர்த்தங்களெல்லாம் நாநாசாஸ்த்ரங்களிலிருந்து தொகுக்கப்பட்டனவேயன்றி ஒன்றுகூட ஸ்வகபோலகல்பிதமாக அருளிச் செய்ததன்று. அந்த சாஸ்த்ரங்களிலிருந்தே நாமும் தெரிந்துகொள்வோமே யென்று நம்போன்றவர்கள் நினைக்கலாகாது. அந்த சாஸ்த்ரங்கள் நமக்குத் தெளிவான ஞானத்தைப் பிறப்பிக்கமாட்டா. கடல்நீரைக் கொண்டுதான் மேகம் வர்ஷிக்கிறது; ஆனாலும் அந்தக்கடல்நீர் நமக்கு உபஜீவ்யமாகிறதில்லை. அது பாநத்துக்கும் உதவுவதில்லை, அபாநத்துக்கும் உதவுவதில்லை. அதுபோல சாஸ்த்ரங்களிலிருந்து நாம் நேராகக் கொள்ளும் பொருள்கள் நமக்குத் தெளிந்த ஞானத்திற்கு ஸாதனமாகமாட்டா. பரமகாருணிகர்களான பிள்ளை லோகாசாரியர் மணவாள மாமுனிகள் போன்ற பேராசிரியர்கள் ஸ்வயம் ஸகல சாஸ்த்ரஜ்ஞான ஸம்பந்நர்களாயிருந்து நம்போன்ற மந்தமதிகளை உஜ்ஜீவிப்பிக்கக் கோலியே உபதேச க்ரந்தங்களென்று சிலவற்றை அவதரிப்பித்தருளினார்கள். நாம் தெளிந்த ஞானம் பெற வேணுமானால் நமக்கு அவையே தஞ்சம். அந்த க்ரந்தங்களை நாம் வரியடைவே கற்றாலுங்கூட உபதேஷ்டாக்களான ஆசாரியர்களிடமிருந்து ஸாரஸங்க்ரஹமான சில உபதேசங்களைத் தனிப்படவும் கேட்டே தெளிவுபெற வேண்டியதாகும்.

ஒரு விஷயத்தை இரண்டொரு வார்த்தைகளாகச் சொல்லாமல் பல வார்த்தைகளாகச் சொன்னால் அவற்றில் பூர்வோத்தர விரோதமிருப்பது போல் தோன்றும். உண்மையில், மஹான்களுடைய திருவாக்குக்களில் விரோத லேசமுமிராது, மந்தமதிகளுக்கு விரோதமிருப்பதுபோல் தோன்றும். ஒரு சிறிய நிதர்சனம் காட்டுகிறோமிங்கு. பிள்ளை லோகாசாரியர் முமுக்ஷுப்படியில் (ஆரம்பத்தில்) "மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்குள்ளீடான வஸ்துவிலும் மந்த்ரப்ரதனான ஆசார்யன் பக்கலிலும் ப்ரேமம் கனக்கவுண்டானால் கார்யகரமாவது" என்றருளிச் செய்திருப்பது ப்ரஸித்தம். இதன் கீழும் "திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி ப்ரேமத்தோடே பேணியநுஸந்திக்கவேணும்" என்றார். அவ்விடத்து வியாக்யானத்தில் "இப்படி யநுஸந்திக்கவேணுமென்கையாலே ப்ரகாராந்தரேண அநுஸந்திக்கலாகாதென்கிற நியமம் தோற்றுகிறது" என்று மணவாள மாமுனிகள் அருளிச் செய்தார். இவற்றால், ஸக்ரமமாக அநுஸந்தித்தாலொழிய மந்த்ரம் கார்யகரமாகாதென்று தெரிவிக்கப்பட்டதாகிறது. இது இப்படியிருக்க, மேலே (17ம் சூர்ணிகை.) "சொல்லும் க்ரமமொழியச் சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெடநில்லாது" என்றருளிச் செய்யப்படுகிறது. 'ப்ரேமத்தோடே பேணியநுஸந்தித்தால் கார்ய கரமாகும்' என்ற முந்தின வார்த்தைக்கும், அக்ரமமாகச் சொன்னாலும் கார்யகரமாகும் என்கிற பிந்தின வாக்யத்திற்கும் பரஸ்பரம் விரோதமுள்ளதாக ஸ்பஷ்டமாய்க் காண்கிறது. இப்படியே மற்றொன்றும் காணலாம். ஸ்ரீவசநபூஷணத்தில் ப்ரபத்திக்குப் பல நியமமில்லாமையை விவரிக்கும் சூர்ணையில் "த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்" என்றருளிச் செய்தார். முமுக்ஷுப்படியிலே "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது திரு

நாமயிரே" என்றருளிச்செய்கிறார்; த்ரௌபதிக்கு ஸித்தித்த வஸ்த்ர வ்ருத்தியானது ப்ரபத்தியின் பலனென்று ஓரிடத்தில் சொல்லி, அதுதன்னையே நாமஸங்கீர்த்தனத்தின் பலனாக மற்றோரிடத்தில் சொல்லுவது விருத்தமென்று தோன்றக்கூடியது.

இதெல்லாம் மந்தமதிகளுக்குத் தோன்றக்கூடிய விரோத சங்கைகளே யொழிய மஹாப்ராஜ்ஞர்களுக்குத் தோன்றக் கூடியவையல்ல. இவற்றுக்குப் பரிஹாரங்களை உபதேசமுகத்தாலேயே கேட்டறியவேண்டும். இங்கு நாம் ப்ரஸ்தாவித்த விரோதங்களுக்குப் பரிஹாரமுறை எங்ஙனே யென்று சிலர் கேட்கக்கூடும். ப்ரஸக்தமான படியால் இதைப்பற்றிச் சிறிது எழுதுகிறோ மிங்கு. 'திருமந்த்ரத்தை ப்ரேமத்தோடே பேணியநுஸந்திக்கவேணும்' என்றும், '...ப்ரேமம் கனக்கவுண்டானால் கார்யகரமாவது' என்றும் அருளிச் செய்ததானது, மந்த்ரத்தை யநுஸந்திக்க வேண்டிய அதிகாரிகளை நோக்கிச் சொன்னது. 'சொல்லும் க்ரமமொழியச் சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெட லில்லாது' என்றது மந்த்ரத்தின் பெருமை சொன்னது. இவை பரஸ்பர விருத்தங்களாகமாட்டா. இதற்கு இணங்க ஒரு லௌகிகத்ருஷ்டாந்தம் காட்டுகிறோம் காண்மின்; புக்ககம் செல்லுகிற பெண்ணைக் குறித்துத் தாய்தந்தையர் ஹிதோபதேசம் பண்ணும்போது 'பெண்ணே! நீ புக்ககத்தில் மிகவும் குணசாலினியாய் வாழவேண்டும்; தளிகை செய்கையில் மிகுந்த கவனிப்புடனிருக்க வேண்டும்; உப்புப் புளி காரங்களை திட்டமாகச் சேர்க்க வேண்டும்; இல்லையாகில் மாமியார் மாமனார் பர்த்தாமுதலானவர்களின் அன்பை நீ பெறமுடியாது' என்று நன்மை சொல்லுகிறார்கள். இதில் ஒரு தவறு மில்லை; யுக்தமான வார்த்தைதானே இது. மற்றொருகால் மாமியார் மாமனார் முதலானோருடைய நற்குணநற்செய்கைகளைப் புகழ்ந்து பேசும்போது 'இவர்கள் எமது பெண் தளிகையைச் சிறிதும் தூஷிப்பதில்லை; உப்புப் புளிகாரங்களை இரட்டிப்பாக விட்டு அவள் தளிகை செய்தாலும் பரம போக்யமாக அமுது செய்கிறார்கள்' என்று சொல்லுகிறார்களென்று வைத்துக் கொள்வோம். இதிலும் தவறில்லை. இவ்வார்த்தைகளில் பரஸ்பரவிரோதம் ஏது மில்லையன்றோ. மகளிருக்கவேண்டிய விதத்தை சிக்ஷிப்பது முந்தின வார்த்தை; பெரியார்களின் கம்பீர ஸ்வபாவத்தைத் தெரிவிப்பது பிந்தினவார்த்தை. நம்முடைய தோஷங்களையும் பெரியார்கள் குணமாகக் கொள்ளுகிறார்களென்பதைக் கொண்டு நாம் குற்றஞ்செய்யலாகாதன்றோ. சாஸ்த்ரார்த்தங்களில் தெளிவு பிறப்பது எளிதன்று. அடுத்தது த்ரௌபதீவஸ்த்ரவ்ருத்தி விஷயம். அவள் திருநாமஸங்கீர்த்தந பூர்வகமாக ப்ரபத்தி பண்ணினாள். இரண்டும் சேர்ந்து ஒரே செயல். ஒரு க்ரந்தத்தில் வஸ்த்ரவ்ருத்தியை ப்ரபத்தியின் பலனாகச் சொல்லி மற்றொரு க்ரந்தத்தில் அதைத் திருநாமஸங்கீர்த்தனத்தின் பலனாகச் சொன்னதனால் யாதொரு விரோதமுமில்லை. இவ்விதமாகச் சில சங்கைகளுக்கு லகுவாகப் பரிஹாரம் கிடைக்கும். சில சங்கைகளுக்கு ச்ரமப்பட்டே பரிஹார முணரவேண்டியதாகும்.

ஏது சாஸ்த்ரார்த்தம்? என்று மகுட மிட்டு வியாஸ மெழுதத் தொடங்கிய நமது நெஞ்சில் ஓடுகின்ற முக்கியமான வொருவிஷயம் இனி ப்ரஸ்தாவிக்கப்படுகின்றது. எம்பெருமானை நிர்ஹேதுக க்ருபாளு வென்றும் அவ்யாஜதயாளுவென்றும் சொல்லிவருகிறோம். ஸ்வாமி யெம்பெருமானார் * अनालोचितविशेषाशेषलोकशरण्य! – அநா

லோசித விசேஷா சேஷ லோகசரண்ய! * என்று அடிக்கடி எம்பெருமானை ஸம்போதிக்கிறார். இதன் பொருள் என்ன? சிலரிடத்தில் ஏற்றமும் சிலரிடத்தில் தாழ்வுமாகிய வாசி பாராமல் எல்லாரையும் ஒருங்கே ரக்ஷிக்கவல்லவனே! என்பதுதானே இதன் பொருள். வேதாந்ததேசிகனும் * निष्किञ्चनजनस्य रक्षादीक्षा समधिकसमिन्धानयशसे– நிஷ்கிஞ்சநஜநஸ்ய ரக்ஷா தீக்ஷா ஸமதிகஸமிந்தாநயசஸே * என்று ஓலமிடுகிறார். ஒரு கைம்முதலுமில்லாதவர்களைத் தானாகவே மேல் விழுந்து ரக்ஷிப்பதிலேயே தீக்ஷைகொண்டு அதனால் புகழ்மிக்கவன் எம்பெருமான்– என்பதன்றோ இதன் பொருள். இங்ஙனே நம் முன்னோர்கள் ஏககண்டமாக அருளிச்செய்யுமவற்றை உற்று நோக்குமிடத்து நம்மிடத்தில் ஒருவகையான கைம் முதலும் இருக்கலாகாதென்றும், ஏதாவது இருந்தால் அது எம்பெருமானுடைய திருவருளுக்கு இடையூறாகு மென்றும் தெரியவருகிறதல்லவா? இதுவே சாஸ்த்ரார்த்தமானால் * मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु-மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு * இத்யாதிகளான பல்லாயிரம் விதிகள் பழுதாகியொழியுமன்றோ? குருவியின் கழுத்திலே பனங்காயைக்கட்டினாற்போலே எத்தனை கர்த்தவ்யங்களையேறிட்டு சாஸ்த்ரங்கள் விதித்திருக்கின்றனவென்று பார்த்தால் அவை கங்குகரையில்லாமலன்றோ காண்கின்றன. அவை யெல்லாம் அர்த்தமில்லாதவார்த்தைகளென்று சொல்லி விடுவது? நாம் அகிஞ்சநர்களாகவே யிருக்கவேண்டுமென்பது சாஸ்த்ரார்த்தமா? விதி சாஸ்த்ரங்களுக்குக் கட்டுப்பட்டு விஹிதங்களைக் குறையறச் செய்யவேணுமென்பது சாஸ்த்ரார்த்தமா? என்று வேதாந்திகளுக்கும் விசிகித்ஸை தோன்றக்கூடியதுண்டு. இதைப் பற்றியே இங்கு முக்கியமாக விமர்சிக்கிறோம்.

பகவத் விஷயம் ஈடு முப்பத்தாறுயிரப்படியில் (5–7–3.) * கருளப்புட் கொடி சக்கரப்படை * என்கிற வானமாமலைப் பாசுரத்திற்கு அவதாரிகை இங்ஙனேயுள்ளது;—"அருளாய் என்றீர்; அருளக்கடவோம்; அதிலொரு தட்டில்லை; ஆனாலும் * சாஸ்த்ரபலம் ப்ரயோக்த்ரி * கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத் * அன்றோ. அருள்பெறுவார் பக்கலிலேயும் சிறிது உண்டாக வேணுங்காணுமேயென்ன; இது மேலுத்தைக்கு இட்ட மர்யாதையோ? கீழுத்தைக்கு ஏதேனுமுண்டோ? ஆனபின்பு இத்தலையில் கிஞ்சித்காரத்தை விட்டு உன்க்ருபையாலே செய்தருளா யென்கிறார். இவ்வளவும் வர இதுக்கு முன்பு நீ நிர்ஹேதுகமாக விஷயீகரித்த பின்பு மேலும் நீ செய்தருள வேணு மென்கிறார்"— என்று.

ஸகல சாஸ்த்ர தத்வஜ்ஞர்களில் தலைவரான நம்பிள்ளையினுடைய இந்த ஸ்ரீஸூக்தியினால் என்னவிதமான சாஸ்த்ரார்த்தம் தேறுகிற தென்று பார்க்கவேணும். இதில் எம்பெருமானுடைய வொருவாதமும் ஆழ்வாருடைய வொரு பிரதிவாதமும் அமைக்கப்பட்டிருக்கின்றது. எம்பெருமானுடைய வாதம் எவ்விதமானது? ஆழ்வாருடைய பிரதிவாதம் எவ்விதமானது? என்று முன்னம் பார்க்கவேணும்; ஆழ்வாருடைய பிரதிவாதம் யுக்தமான முறையிலுள்ளதா? என்று பிறகு பார்க்கவேணும். எம்பெருமானுடைய வாதம் என்னவென்றால்; பேறு பெற வேண்டியவர்கள் ஒரு கைம்முதலுமில்லாமல் வாளா பெற்று விடமுடியாது; பேறு பெறுதற்குரிய வழிகளை [ஸாதனங்களை] நான் சாஸ்த்ரங்களை பலமுகமாகத் தெரிவித்திருக்கிறேன்; அவற்றையநுஷ்டிக்குமவர்களுக்குப் பேறுகிடைக்குமே யொழிய 'என் பக்

கல் ஒன்றுமில்லை' என்பார்க்கு ஒரு பேறும் கிடைக்காது. ஒரு முதலுமில்லாதவர்களும் பேறு பெற்றுவிடுவதென்றால் ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வரும். சாஸ்த்ரார்த்தங்களும் கலங்கிப்போகும். அப்படியாகாமைக்காக நான் நூல்வரம்பு இட்டிருக்கிறேன்; அதைக் கடக்கலாகாது. அதைப் பரிபாலனம் பண்ணினார்க்கொழிய மற்றையோர்க்குப் பேறு கிடைக்காது; ஆழ்வீர்! நீர் என்பக்கலில் ஒன்றுமில்லையென்று சொல்லிக் கொண்டு பேறு பெற விரும்புவது பயனற்றது—என்கிறவிது எம்பெருமானுடைய வாதம். இதில் ஒருவிதமான குறையும் சொல்லமுடியாது. * மயர்வற மதிநல மருளப் பெற்ற ஆழ்வார் இதை உள்ளபடி தெரிந்து கொள்ளாதவருமல்லர். * வணக்குடைத் தவநெறி வழிநின்று புறநெறி களை கட்டு, உணக்குமின் பசையற அவனுடையுணர்வு கொண்டுணர்ந்தே * [திருவாய்மொழி 1–3–5] என்பது முதலான பாசுரங்களில் இதனை ஆழ்வார்தாமே வெளியிட்டிருக்கிறார். ஆனால் எம்பெருமானுடைய வாதத்திற்கு ஆழ்வார் செய்யும் பிரதிவாதமென்னவென்றால்; கேண்மின்;

பிரானே! எமக்கு நீ கரணகளேபரப்ரதானம் பண்ணி எம்மை நீயுண்டாக்கினது நாங்கள் பிரார்த்தித்தோ? அல்லவே; * अचिदविशेषितान् प्रलयसीमनि संसरतः करणकलेवरैर्घटयितुं दयमानमनाः—அசிதவிசேஷிதாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரத: கரணகலேபரைர் கடயிதும் தயமாநமநா: * என்றும், * अचिद्विशिष्टान् प्रलये जन्तूनवलोक्य जातनिर्वेदा । करणकलेवरयोगं वितरसि वृषशैलनाथकरुणे । त्वम्— அசிதவிசிஷ்டாந் ப்ரலயே ஜந்தூநவலோக்ய ஜாதநிர்வேதா, கரணகலேபரயோகம் விதரஸி வ்ருஷசைலநாதகருணே! த்வம் * என்றும் சொல்லுகிறபடியே உன்னுடைய நிர்ஹேதுக க்ருபையினாலன்றோ கரணகளேபரப்ரதானம் பண்ணிற்று. இதனால் ஸம்ஸாரிகள் பக்கலிலே உனக்கொரு நிர்ஹேதுக கருணையுண்டென்று தெரியவருகிறது. அந்த கருணை நித்யஸ்ரீர் நித்யமங்கலமாக எப்போதும் விளங்கக் கடவதேயன்றி ஒருகாலிருந்து மற்றொருகால் மறையுமதன்றே. அந்த க்ருபையைக் கொண்டே பரமபுருஷார்த்தத்தையும் தந்தருளத் தட்டென்ன? முதலில் ஒரு கைம்முதலையும் எதிர்பாராமல் காரியம் செய்த நீ இப்போது மாத்திரம் பேற்றுக்குக் கைம்முதல் வேணுமென்கை யுக்தமாகுமோ?-என்கிறவிது ஆழ்வார் செய்யும் பிரதிவாதம்.

ஆழ்வாருடைய இந்த ப்ரதிவாதம் யுக்தந்தானோ வென்று இனி விமர்சிக்க வேண்டும். ஆதியில் எம்பெருமான் நமக்குக் கரணகளேபரப்ரதானம் பண்ணினது நிர்ஹேதுகமானவொரு அநுக்ரஹத்தின் கார்யமேயாயினும், கரணகளேபரங்களைக் கொடுத்து சாஸ்த்ரங்களையும் காட்டிக்கொடுத்து, அவற்றில் ஸ்வப்ராப்தி ஸாதனங்களையும் தெரிவித்து அவ்வழியாகத் தன்னைப்பற்றுவார்க்கே பேறு தருவதாக வெளியிட்டிருக்கிறானென்னுமிடம் அபலபிக்க வொண்ணாது. இதுதன்னை ஆழ்வார் அறியாதவரல்லர். அறிந்து வைத்து வழியல்லாவழியில் ப்ரதிவாதம் செய்வது எங்ஙனே யுக்தமாகும்? ஆகையாலே ஆழ்வாருடைய ப்ரதிவாதம் அயுக்தந்தானோ வென்ன வேண்டா. ஆழ்வாருடைய திருவுள்ளம் என்னவென்றால்—இதுதான் முக்கியமாகக் குறிக் கொள்ளத்தக்கது. இப்போது நாம் தெரிவிக்கப் போகிற விஷயம் ஆழ்வாருடைய திருவுள்ளம் மாத்திரமன்று; ஸகல ஆசாரியர்களுடையவும் ஸகல மஹர்ஷிகளுடையவும் ஸகலசாஸ்த்ரங்களினுடையவும் கருத்து இதுவே காணீர். எதுவென்னில்; இரண்டு விஷயங்கள் தெரிவிக்கிறோமிங்கு; கேண்மின்.

பேற்றின் கனத்தையும் நாம் செய்யும் ஸாதநாநுஷ்டானத்தின் புன்மையையும் ஒற்று நோக்குமிடத்து அந்த கனத்த பேற்றுக்கு எதையும் ஸாதனமாக நினைக்கத்தகாது. அதற்கு ஏற்ற ஸாதனம் உலகில் கிடையவே கிடையாது. ஸர்வசக்தனான சரண்யன் இதையொரு வியாஜமாகக் கொண்டு காரியம் செய்கிறானென்று நாம் நினைக்கலாமே யொழிய இதை ஸாதனமாகக் கொண்டு செய்கிறானென்று நினைக்கவே தகாது. கீதையில் * न हि कश्चित् क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत्– ந ஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத் * என்று சொன்னபடியே நம்முடைய கரணக்ராமங்கள் குர்வத்ரூபங்களாகையாலே எப்போதும் ஏதேனுமொரு செய்கையைச் செய்துகொண்டே யிருப்பனவாதலால் நாம் வெறுமனேயிருக்கப் போகிறதில்லை. செய்கிற காரியங்களில் சூது சதுரங்கம் பொருவது முதலியனவாகச் சில செய்கைகளும், பகவத் பாகவத கைங்கர்யம் செய்தல் ஸத்க்ரந்த காலக்ஷேபங்கள் செய்தல் முதலியனவாகச் சில செய்கைகளும் நேறுகின்றன. நன்மைகளையே செய்து வருகிறோமென்றுமில்லை, தீமைகளையே செய்துவருகிறோமென்றுமில்லை. எல்லாவற்றையும் கலந்த கட்டியாகச் செய்து வருகிறோம். நன்மைகளைச் செய்யும் போது நமக்கே ஒரு ஆத்மத்ருப்தியுண்டாகிறது. நம்முடைய ஜன்மஸாபல்யம் பெற்றதாகவும் நினைக்கிறோம். புழு குறித்தது எழுத்தாமாபோலே நம்முடைய செயல்கள் அவன் திருவுள்ளத்திலே நல்லதாகப்பட்டு விட்டால் இது அவனது கருணையின் திறமென்று கொள்ள வேணுமேயல்லது வேறொன்றும் கொள்ளத்தகாது. ஜ்ஞானசக்திகளில் குறையற்ற மஹான்களும் 'அகிஞ்சநோஹம்' என்றுதான் உள்ளபடி யநுஸந்திக்கிறார்கள். * ந தர்மநிஷ்டோஸ்மி ந சாத்மவேதீ ந பக்திமாந்—அகிஞ்சந: * என்கிறார் ஆளவந்தார்; * ந்யஸ்யாமி அகிஞ்சந: ஸ்ரீமந்! * என்கிறார் தேசிகன். ஆகிஞ்சந்யமாவது என்ன? தங்களிடம் ஒருவிதமான கைம்முதலுமில்லாமைதானே. இப்படி தங்களை அகிஞ்சநர்களாகச் சொல்லிக் கொள்ளும் பரிபூர்ணர்களுடைய கருத்து என்ன? கனத்த பேற்றுக்குத் தகுதியான கைம்முதல் உண்மையில் ஒன்றுமில்லை யென்பதுதானே. ஒரு சிறிதளவு இருந்தாலுங் கூட 'அதுதானும், * अन्यथा कृतम् अकृतं भवति * [அடைவுகேடாகச் செய்தது செய்யாததோடொக்கும்] என்கிற நியாயத்தின்படி அஸத்கல்பமேயாகும்.

இனி மற்றொரு விஷயமாவது— * जायमानं हि पुरुषं यं पश्येन्मधुसूदनः। सात्त्विकस्स तु विज्ञेयस्स वै मोक्षार्थचिन्तकः– ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மதுஸூதந: , ஸாத்விகஸ்ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக: * என்கிற ப்ரமாணத்தினால் ஜாயமான கடாக்ஷம் பெறாதவர்களுக்கு மோக்ஷார்த்த சிந்தையே உண்டாகமாட்டாதென்று தெளிவிக்கப்படுகிறது. ஜாயமாநகடாக்ஷமாவது- கருக்குழியில் கிடக்கும் போதோ, கருக்குழியினின்று வெளிவரும் போதோ நேருகிற பகவத் கடாக்ஷம். அது உள்ளவர்களுக்கே ஸத்ப்ரவ்ருத்தி ஏற்படும்; அது இல்லாதவர்களுக்கு ஒருகாலும் ஸத்ப்ரவ்ருத்தி யுண்டாகாது என்பது நூற்கொள்கை. இதையடியொற்றியே 'கருவிலே திருவிலாதீர்! * என்று திருமாலையிலருளிச் செய்தது. ரஹஸ்யத்ரய ஸாரத்தில் * निदानं तत्रापि स्वयमखिलनिर्माणनिपुणः — நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாணநிபுண: * என்று தேசிகன் பணித்ததும் இதை யடியொற்றியே. நிதாநம் என்பதற்கு ஆதிகாரணம் என்று பொருள். * निदानं त्वादिकारणम् * என்று

அமரம். சேதநர்களுக்கு விளையும் ஸகல ஸுக்ருதங்களுக்கும் பகவானே மூலகாரணமென்று முடிந்த பின்பு, நம்மிடத்தில் ஏதோ ஸுக்ருதமிருப்பதாகவும், அது பேற்றுக்கு ஸாதனமான கைம்முதலாகவும் கொள்வதற்கு நியாயமேயில்லை—என்பதுதான் ஸகலசாஸ்த்ர ஸாரார்த்தம். ஆகவே ஆழ்வாருடைய ப்ரதிவாதம் மிகவும் ஸமஞ்ஜஸமானதேயென்று முடிந்தது. எது சாஸ்த்ரார்த்தம்? என்கிற கேள்விக்கு இவ்வளவே உத்தரம்;— நமக்கு நன்மைகளில் குறையிருக்கக்கூடாது; நன்மை குறையற்றிருப்பதனால்தான் பேறு கிடைக்கிறது என்று நினைக்கவும் கூடாது. அவனது நிர்ஹேதுகக்ருபையே நமக்குத் தஞ்சமென்கிற அத்யவஸாயமொன்றே நமக்குப் புகல்—என்கிற விதுதான் சாஸ்த்ரார்த்தம். ... ... ...

---

## 2. அசித்ஸம்பந்தம் அநாதியா?

முமுக்ஷுப்படியில் (5) "ஸம்ஸாரிகள் தங்களையும் ஈச்வரனையும் மறந்து" இத்யாதியான சூர்ணையின் வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள்—"ஸம்ஸாரிகளாகிறார்- அநாத்யசித்ஸம்பந்தத்தாலே ப்ரவாஹரூபேண வருகிற அவித்யாகர்மவாஸநாருசிவிவசராய் ஜந்மமரணாதி க்லேசபாகிகளாய்த் திரிகிற பத்த சேதநர்" என்றருளிச் செய்துள்ளார். இங்கு அநாத்யசித்ஸம்பந்தமென்று சப்தப்ரயோகமிருப்பதால் ஆத்மாவுக்குண்டான அசித்ஸம்பந்தத்திற்கு ஆதியே இல்லையென்று சொன்னதாக ஆகிறது. ஆத்மாவுக்கு அசித்ஸம்பந்தம் வந்தேறியன்று, ஸ்வரூபஸித்தம் என்றல்லவா தேறிவிடுகிறது. இது வாஸ்தவமன்றே. ஆத்மாவுக்கு அசித்ஸம்பந்தம் வந்தேறியே யொழிய ஸ்வரூபமன்றே. அப்படியிருக்க அதனை அநாதியென்று எங்ஙனே சொல்லலாம்? என்று சிலர் சங்கிக்க நேரும்.

இதைப் பற்றி விசதவாக்சிகாமணிகளான ஸ்வாமி தாமே ஆசார்யஹ்ருதய வியாக்கியானத்தில் மிக விளக்கமாக விவரித்துள்ளார். அதில் (10) "ஏதத்விதம் தம் முன்னமே முதல் முன்னேயான அசித்யநாதிஸம்பந்தங்கள்" என்னும் சூர்ணையில், ஆத்மாவுக்கு அசித்ஸம்பந்தமும் பகவத்ஸம்பந்தமுமாகிற இரண்டும் அநாதியென்று காட்டப்பட்டது. மேல் (12) "ஒன்று கூடினதாய் பற்றறுக்க மீண்டொழிகையாலே பழவடியேனென்னுமதொன்றுமே ஒழிக்க வொழியாதது" என்னும் சூர்ணையில் ஆத்மாவுக்கு அசித்ஸம்பந்தம் வந்தேறியென்னுமிடம் ப்ரதிபாதிக்கப்படுகிறது. இவ்விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகள் இவை;—"அசித்ஸம்பந்தம் * பெருந்துயரிடும்பையில் பிறந்து கூடினேனென்னையாலே ஆத்மாவுக்கு ஸ்வரூபமன்றிக்கே வந்தேறியாய் * வினை பற்றறுக்கும் * என்று ஒரு ஸர்வசக்தி ஸங்கல்பமாகப் போக்க அடைந்த வருவினையோடல்லல் நோய் பாவம் மிடைந்தவை மீண்டொழிய * என்கிறபடியே நிவ்ருத்தமாய் விடுகையாலே * திருமாலே நானுமுனக்குப் பழவடியேன் * என்னும்படி அநாதியாயிருக்கிற சேஷசேஷிபாவரூப, பகவத்ஸம்பந்தமொன்றுமே * உறவேல் நமக்கு இங்கொழிக்க வொழியாது * என்கிறபடியே ஈச்வரனாலும்

அமரம். சேதநர்களுக்கு வினையும் ஸகல ஸுக்ருதங்களுக்கும் பகவானே மூலகாரணமென்று முடிந்த பின்பு, நம்மிடத்தில் ஏதோ ஸுக்ருதமிருப்பதாகவும், அது பேற்றுக்கு ஸாதனமான கைம்முதலாகவும் கொள்வதற்கு நியாயமேயில்லை—என்பதுதான் ஸகலசாஸ்த்ர ஸாரார்த்தம். ஆகவே ஆழ்வாருடைய ப்ரதிவாதம் மிகவும் ஸமஞ்ஜஸமானதே யென்று முடிந்தது. எது சாஸ்த்ரார்த்தம்? என்கிற கேள்விக்கு இவ்வளவே உத்தரம்;— நமக்கு நன்மைகளில் குறையிருக்கக்கூடாது; நன்மை குறையற்றிருப்பதனுல்தான் பேறு கிடைக்கிறது என்று நினைக்கவும் கூடாது. அவனது நிர்ஹேதுகக்ருபையையே நமக்குத் தஞ்சமென்கிற அத்யவஸாய மொன்றே நமக்குப் புகல்—என்கிற விதுதான் சாஸ்த்ரார்த்தம். ... ... ...

# 2. அசித்ஸம்பந்தம் அநாதியா?

மூமுக்ஷுப்படியில் (5) "ஸம்ஸாரிகள் தங்களையும் ஈச்வரனையும் மறந்து" இத்யாதியான சூர்ணையின் வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள்—"ஸம்ஸாரிகளாகிறார்–அநாத்யசித்ஸம்பந்தத்தாலே ப்ரவாஹரூபேண வருகிற அவித்யாகர்மவாஸநாருசிவிவசராய் ஜந்மமரணாதி க்லேசபாகிகளாய்த் திரிகிற பத்த சேதநர்" என்றருளிச் செய்துள்ளார். இங்கு அநாத்யசித்ஸம்பந்தமென்று சப்தப்ரயோகமிருப்பதால் ஆத்மாவுக்குண்டான அசித்ஸம்பந்தத்திற்கு ஆதியே இல்லை யென்று சொன்னதாக ஆகிறது. ஆத்மாவுக்கு அசித்ஸம்பந்தம் வந்தேறியன்று, ஸ்வரூபஸித்தம் என்றல்லவா தேறிவிடுகிறது. இது வாஸ்தவமன்றே. ஆத்மாவுக்கு அசித்ஸம்பந்தம் வந்தேறியே யொழிய ஸ்வரூபமன்றே. அப்படியிருக்க அதனை அநாதி யென்று எங்ஙனே சொல்லலாம்? என்று சிலர் சங்கிக்க நேரும்.

இதைப் பற்றி விசதவாக்சிகாமணிகளான ஸ்வாமி தாமே ஆசார்யஹ்ருதய வியாக்கியானத்தில் மிக விளக்கமாக விவரித்துள்ளார். அதில் (10) "ஏதந்நிமித்தம் முன்னமே முதல் முன்னேயான அசித்யநாதிஸம்பந்தங்கள்" என்னும் சூர்ணையில், ஆத்மாவுக்கு அசித்ஸம்பந்தமும் பகவத்ஸம்பந்தமுமாகிற இரண்டும் அநாதியென்று காட்டப்பட்டது. மேல் (12) "ஒன்று கூடினதாய் பற்றறுக்க மீண்டொழிகையாலே பழவடியேனென்னுமதொன்றுமே ஒழிக்க வொழியாதது" என்னும் சூர்ணையில் ஆத்மாவுக்கு அசித்ஸம்பந்தம் வந்தேறியென்னுமிடம் மூதலிக்கப்படுகிறது. இவ்விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகள் இவை;—"அசித்ஸம்பந்தம் * பெருந்துயரிடும்பையில் பிறந்து கூடினேனென்கையாலே ஆத்மாவுக்கு ஸ்வரூபமன்றிக்கே வந்தேறியாய் * வினை பற்றறுக்கும் * என்று ஒரு ஸர்வசக்தி ஸவாஸநமாகப் போக்க அடைந்த வருவினையோடல்லல் நோய் பாவம் மிடைந்தவை மீண்டொழிய * என்கிறபடியே நிவ்ருத்தமாய் விடுகையாலே * திருமாலே நானுமுனக்குப் பழவடியேன் * என்னும்படி அநாதியாயிருக்கிற சேஷசேஷிபாவரூப பகவத்ஸம்பந்தமொன்றுமே * உறவேல் நமக்கு இங்கொழிக்க வொழியாது * என்கிறபடியே ஈச்வரனுலும்

சேதநனாலும் கழிக்கப் பார்த்தாலும் கழிக்கப்போகாததென்கை. இத்தால், அசித்ஸம்பந்தம் [அதாவது நாராயண ஸம்பந்தம்] அநாதியாய் நிருபாதிகமாகையாலே நித்யமாயிருக்குமென்றதாயிற்று. ஆனால் ஆகந்துகமான இத்தை [அசித்ஸம்பந்தத்தை] அநாதியென்பானென்னில், வந்தேறின காலத்துக்கு அடி தெரியாமையாலே அநாதியென்று ப்ரமாணங்கள் சொல்லுகையாலே. ஒருநாள் வரையிலே பகவத்ப்ரஸாதத்தாலே அது கழியக் காண்கையாலே வந்தேறியென்னுமிடம் நிச்சிதமிறே" என்று.

இந்த ஸ்ரீஸூக்தியில், அந்த ஸம்பந்தம் ஆத்மாவுக்கு ஸ்வரூபமன்றிக்கே வந்தேறியாயிருக்க, அதனை அநாதியென்று வழங்குவதன் கருத்து நன்கு விசதமாக்கப்பட்டிருக்கையாலே சங்கைக்கு இடமில்லை.



## 3. एतदुक्तं भवति— ஏததுக்தம் பவதி.

ஸ்ரீபாஷ்யம் முதலிய உயர்ந்த ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களில் விசாரரூபமான பெரிய விஷயங்களை யெழுதிக் கொண்டு போகையில் இடையிலோ முடிவிலோ "एतदुक्तं भवति– 'ஏததுக்தம் பவதி' என்று தொடங்கிச் சில பங்க்திகளை யெழுதுவதைக் காண்கிறோம். அப்படியே மணவாளமாமுனிகள் போல்வார் அருளிச்செய்யும் வியாக்கியான திவ்யக்ரந்தங்களிலும் "இத்தால் சொல்லிற்றாயிற்றதென்னென்னில்" என்று தொடங்கிச் சில ஸ்ரீஸூக்திகளருளிச் செய்வதையும் காண்கிறோம். அப்படிப்பட்ட ஸ்தலங்களில் மூன்று விஷயங்கள் தெரிவிக்கப்படும். இதை ஒரு காரிகையினால் மஹான்கள் தெரிவிக்கிறார்கள்—

"प्रपंचितस्य संक्षेपः संक्षिप्तस्य प्रपञ्चनम्। एतदुक्तं भवतिना समाधिर्व्याकुलस्य च ॥

[ப்ரபஞ்சிதஸ்ய ஸம்க்ஷேப: ஸம்க்ஷிப்தஸ்ய ப்ரபஞ்சநம்,

ஏததுக்தம் பவதிநா ஸமாதிர் வ்யாகுலஸ்ய ச"] (தத்வடீகை) என்கிற விதனை அநுஸந்திப்பது.

கீழே மிகவும் விரிவாக உபபாதிக்கப்பட்டு வந்த விஷயங்கள் சில கோமல மதிகளுக்கு நெஞ்சில் தரிக்க முடியாமலிருக்கும்; ப்ரதிபத்திக்கு அவிஷயமாயிருக்கும். அப்படிப்பட்ட விஷயங்களை ஸங்க்ரஹமாக ஸம்க்ஷேபித்து நிகமிக்குமிடங்களில் 'ஏததுக்தம் பவதி' என்று தொடங்குவதுண்டு. கீழே ஸம்க்ஷேபமாக விஷயம் நிரூபிக்கப்பட்டிருந்து, அது சில மந்தமதிகளுக்கு ப்ரதிபத்தி கோசரமன்றிக்கேயிருக்குமென்று தோன்றினால் அதை ப்ரகாராந்தரேண விசதமாக்கக் கோலி 'ஏததுக்தம் பவதி' என்று தொடங்குவதுண்டு. ஆக, ப்ரபஞ்சித ஸம்க்ஷேபம், ஸம்க்ஷிப்தப்ரபஞ்சநம் என்கிற இவ்விரண்டு வகைகள் தவிர மூன்றாவதான தொன்று முண்டு. அதாவது, [வ்யாகுலஸ்ய ஸமாதி:] கீழே உபபாதித்த விஷயங்களில் சில சங்கைகள் தோன்றக் கூடியதாக இருந்தால் அவற்றை யெடுத்துக் கழிக்கும் வகையில் நிகமநம் செய்வது. இம் மூன்று வகையான ப்ரயோஜனங்களில்லாமல் * ஏததுக்தம்

பவதீ யென்று தொடங்கி யெழுதமாட்டார்கள் சாஸ்த்ரஜ்ஞர்கள். கீழே சொன்ன மூன்று ப்ரயோஜனங்களும் சேர்ந்து ஓரிடத்தில் அமைவது அரிது. ஸம்க்ஷிப்த விஸ்தரமிருக்குமிடத்தில் விஸ்த்ருத ஸம்க்ஷேப மிருக்கமுடியாது. (அதாவது) சுருக்கமாகக் கீழே சொன்னதை விரித்துரைக்குமிடத்தில் சுருங்கச் சொல்லுவதென்பது இருக்க முடியாது. அப்படியே, விரித்துரைத்ததைச் சுருக்கிச் சொல்லுமிடத்தில் விரித்துரைப்பதென்பது இருக்கமுடியாது. இரண்டத்தொன்றுதான் ஓரிடத்தில் இருக்கமுடியும். அதனோடு கூட சங்காபரிஹாரமென்பது சேர்ந்திருக்கமுடியும்.

ஸ்ரீபாஷ்யத்தில், லகுபூர்வபக்ஷம், லகுஸித்தாந்தம், மஹாபூர்வபக்ஷம், மஹாஸித்தாந்தம் ஆகிய இவற்றில் 'ஏததுக்தம் பவதியை' விசேஷமாகக் காணலாம். லகுபூர்வபக்ஷத்தில் ஓரிடமெடுத்துக் காட்டுவோமிங்கு; அங்கு முடிவில்,

"एतदुक्तं भवति–ब्रह्मस्वरूपाच्छादकाविद्यामूलमपारमार्थिकं भेददर्शनमेव बन्धमूलम्"

என்று தொடங்கியுள்ள வாக்கிய ராசியை உற்று நோக்குக. இதில் சங்காபரிஹாரமும் காண்கிறது. கீழே கண்டோக்தமானதையும் திருவுள்ளத்திலிருப்பதையும் சேரப்பிடித்து அருளிச்செய்வதும் இங்குள்ளது.

இந்த ப்ரஸங்கத்தில் மற்றொரு விஷயமும் விஜ்ஞாபித்துக்கொள்ளுகிறோம். மணவாளமாமுனிகளின் ரஹஸ்யவ்யாக்கியானங்களில் பலவிடங்களில், அதவா என்று தொடங்கியும், அன்றிக்கே யென்று தொடங்கியும் யோஜநாந்தரம் காட்டப்படுகிறது. அங்கு தாத்பர்யத்தில் எள்ளளவும் பேதமில்லை போல் காணப்படும். அதனால் இந்த பக்ஷாந்தரம் எதற்காக ப்ரஸ்தாவிக்கப்படுகிறதென்று தெரிந்துகொள்ள முடியாமலிருக்கும். இதற்கு ஓரிடம் எடுத்துக்காட்டுவோம். ஆசார்யஹ்ருதயத்தில் (76) "பேச்சுப் பார்க்கில்" கள்ளப் பொய்ந்நூல்களும் க்ராஹ்யங்கள்; பிறவி பார்க்கில் அஞ்சாமோத்தும் அறுபதினாயிரம் கழிப்பதும்" என்கிற சூர்ணையின் வியாக்கியானத்தில் இரண்டு வகையான யோஜனைகள் காட்டப்பட்டிருக்கின்றன. இரண்டிலும் "அநிஷ்டப்ரஸஞ்ஜநம் பண்ணுகிறார்" என்கிற அவதாரிகையுள்ளது. அதை மாத்திரம் பார்ப்பவர்கள் முந்தின யோஜனைக்கும் பிந்தின யோஜனைக்கும் வாசி தெரியவில்லையே யென்று திகைப்பார்கள். பங்க்திகளைப் பூர்த்தியாக ஸேவித்தாலுங் கூட இரண்டு யோஜனைகளுக்கு விஷயம் விளங்கவில்லையே யென்று திகைப்பர்கள் சிலர். இங்ஙனே திகைக்கவேண்டுமிடங்கள் மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்களில் பலபலவுள்ளன. மாமுனிகளின் அஸாதாரணமான ஜ்ஞானவைசத்யமடியான இப்படிப்பட்ட ஸ்தலங்களில் ஸாதாரணப்ரஜ்ஞர்கள் திகைப்பது வியப்பன்று. எடுத்துக்கொண்ட இவ்விடத்தை விளக்குகிறோம்.

மூலஸ்ரீஸூக்திக்கு என்ன அர்த்தமாகிறதென்று பார்ப்போம். (மூலம்) "பேச்சுப்பார்க்கில் கள்ளப்பொய்ந்நூல்களும் க்ராஹ்யங்கள்." இத்யாதி. திருவாய்மொழியின் ஏற்றமும் ஆழ்வாருடைய வைபவமும் நிரூபிக்கப்பட்டுவரும் கட்டமிது. ஸம்ஸ்க்ருதபாஷையிலுள்ள க்ரந்தந்தானுயர்ந்தது, தமிழ்ப்பாஷையிலுள்ளது இழிவானதே என்று கொள்கையுடையார்க்கு ஆபத்தி கூறுகிறார் [மூலகாரர்] முதல் வாக்யத்தினால். "கள்ளப்பொய்ந்நூல்களும் க்ராஹ்யங்கள்" என்றது ஜைந பௌத்தாதிகளின் க்ரந்தங்களும் உபாதேயமாக வேண்டிவரும் என்றபடி. இரண்டு

யோஜனைகளிலும் இப்பொருளில் வாசியில்லை. ‘பேச்சுப்பார்க்கில்’ என்கிற வார்த்தையானது இரண்டு விதமான பொருளை ஸஹிக்கிறது. ஸம்ஸ்க்ருத பாஷைதான் உயர்ந்தது என்று சொல்லப் பார்த்தால்-என்கிற பொருளும், த்ராவிடபாஷை மட்டமானது என்று சொல்லப்பார்த்தால் - என்கிற பொருளும் கொள்ளக்கூடிய நிலைமையில் மூலம் அமைந்திருக்கிறது. மூலகாரருக்கு எந்தப் பொருள் விவக்ஷிதமென்றால் இரண்டும் விவக்ஷிதமாகக் குறையில்லை. பேச்சு என்கிற சொல் பொதுச்சொல்லாகையாலே ஸம்ஸ்க்ருதப்பேச்சு என்றும் அர்த்தமாகும். தமிழ்ப்பேச்சு என்றும் அர்த்தமாகும். மேலே ‘பிறவி பார்க்கில்’ என்றவிடத்திலும் பிறவியென்னுஞ்சொல் பொதுச்சொல்லாகையாலே உத்தமஜாதியிற் பிறவியையுங் காட்டும், கீழ்ச்சாதிகளிற் பிறவியையும் காட்டும். பாஷையிலும் ஜாதியிலும் கண்வைக்காமல், விஷயத்தை மாத்திரமே பார்ப்பவர்களுக்கு வக்தவ்யமானது ஒன்றுமில்லை. விஷயத்தைப் பாராமல் பாஷையையும் ஜாதியையுமே பார்ப்பவர்களுக்கு அநிஷ்டப்ரஸஞ்ஜநம் செய்யப்படுகிறதிங்கு. பாஷையைப் பார்ப்பவர்கள் இருவகைப் படுவர்-த்ராவிட பாஷையிலுள்ளது அநுபாதேயம் என்பவர் ஒருவகை; ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ளது உபாதேயம் என்பவர் மற்றொரு வகை. இவ்விருவகுப்பினர்க்கும் உத்தேச்யம் ஒன்றேயாகிலும் ப்ரகாரபேதமுள்ளதுதான். இதற்குச் சேர இரண்டு யோஜனைகள் காட்டப்பட்டன. பேச்சுப்பார்க்கில்- (1) பேச்சுப்பார்த்து இகழ்வதானால், (2) பேச்சுப் பார்த்து கௌரவிப்பதானால். பிறவிபார்க்கில்-(1) பிறவியைப்பார்த்து இகழ்வதானால்; (2) பிறவியைப்பார்த்து கௌரவிப்பதானால்.

இப்படியாக ஆழ்ந்து வியாக்கியானம் செய்தருளும் திறமை மணவாள மாமுனிகளிடத்தன்றி மற்றையோரிடத்துக் காண வரிது.

# 4. பணத்திற்குப் பங்காளிகள்.

நமக்குப் பித்ரு பிதாமஹ பரம்பரா ப்ராப்தமும் ஸ்வயார்ஜிதமுமாக இருவகைப்பட்ட பணங்களுண்டு. இவற்றைக் கொள்பவர்கள் புத்ராதிகளும் ஜ்ஞாதிகளுமென்று நாம் நினைக்கிறோம். சாஸ்த்ரம் சொல்லுகிறது என்னவென்று பார்ப்போம்.

“चत्वारो धनदायादाः धर्माग्निनृपतस्कराः । ज्येष्ठपुत्रावमानेन त्रयः कुप्यन्ति सोदराः ॥

(சத்வாரோ தநதாயாதா: தர்மாக்நி ந்ருபதஸ்கரா:, ஜ்யேஷ்ட புத்ராவமாநேந த்ரய: குப்யந்தி ஸோதரா:)” என்கிற ச்லோகம் ப்ரஸித்தமானது. பணத்தைக் கொள்ளை கொள்ளுமவர்கள் நால்வர்; தர்மம், அக்நி, அரசர், கள்ளர்— ஆக இந்நால்வரும் ஸஹோதரர்கள்— பணம் படைத்தவர்க்குப் புத்திரர்கள் என்று கொள்க. இவர்களுள் ஜ்யேஷ்ட புத்திரன் (அல்லது, ஜ்யேஷ்ட ப்ராதா) தர்மமென்பவன். யஜுர்வேதத்தில் இரண்டாவது காண்டத்தில் ஐந்தாவது ப்ரச்நத்தில் “तस्माज्ज्येष्ठं पुत्रं धनेन निरवसाययन्ति” என்று ஓதியிருக்கையாலே ஜ்யேஷ்டபுத்ரனே தனங் கொள்ள ப்ராப்தனாகையாலே, மேலே சொன்ன ஜ்யேஷ்டனாகிய தர்ம விஷயத்தில் தனத்தை யிட்டால்

மற்ற ப்ராதாக்கள் மூவரும் சீற்றங் கொள்ளாமல் ஸமாஹிதமாஸ்களாயிருப்பர்கள். பிதாவானவர் [பணம் படைத்தவர்] ஜ்யேஷ்ட புத்ரனை அவமானப்படுத்தினால், (அதாவது, தர்மவிஷயத்தில் பணச் செலவு செய்யாமற்போனால்) மற்ற ப்ராதாக்கள் மூவரும் [அக்நி, அரசர், கள்ளர் ஆகிய மூவரும்] சீற்றங் கொண்டு தாங்கள் அராக்ருதமாய் மேல் விழுந்து கொள்ளை—கொள்ளுகிறார்கள்— என்பது இந்த ச்லோகத்தினால் சொல்லப்படுகிறது.

இதன் கருத்து எளிதாகத் தெரியவருமன்றோ. எவனுடைய பணம் தருமத்தில் விசேஷமாகச் செலவிடப்படுகிறதோ அவனுக்கு விபரீதமான பீடைகள் நேரமாட்டா; தருமத்தில் கண் செலுத்தாதவனுடைய பணத்தை நெருப்பு கொள்ளை கொள்ளும்; அரசர்கள் அனேக விதமான வரிகளை விதித்துக் கொள்ளை கொள்வர்கள். கள்ளர்களும் இரவிலும் பகலிலும் புகுந்து தெரியாமலும் தெரிந்தும் கொள்ளை கொள்வர். நெருப்பு கொள்ளை கொள்வதாவது—வீடு நெருப்புப் பற்றி யெரிந்து வஸ்த்ர பூஷண வ்ரீஹி தண்டுலாதிகள் நிச்சேஷமாக அழிந்துபோகை. அரசர் கொள்ளை கொள்வதைப் பற்றி இக்காலத்தில் அதிகமாக எழுத அவசியமில்லையன்றோ! ஒருவனுக்கு எத்தனை விதமான வரிகள் [சுங்கங்கள்] விதிக்கப்படுகின்றன வென்பது நம்போல்வாரிற் காட்டிலும் பணம் படைத்தார்க்கு விசேஷமாகத் தெரியும். கள்ளர் கொள்ளை கொள்வது அனைவர்க்கும் அநுபவத்திலுள்ளது.

இந்த ச்லோகத்திற்கு—அவரவர்கள் தருமம் செய்யவேண்டியது ஆவச்யகமென்று ப்ரபோதநம் செய்வதில் முக்கியமான நோக்கு.

---

# 5—10. ஜீவாத்ம பரமாத்ம விவாஹம்.

---

## 5. ஜீவாத்மக் குழந்தையின் மாதாபிதாக்கள்.

---

ஸம்ஸாரிசேதநன் ஸம்ஸாரபந்தத்தில் நின்றும் விடுபட்டுத் திருநாடு சென்று சேர்வதானது பரமபுருஷனோடு பெறும் பரமபோக மஹோத்ஸவமென்று கொண்டு மகிழ்ந்திருக்கவேணுமே யொழிய, சிறிதும் வருந்தவேண்டியதில்லை யென்று தத்வஜ்ஞானிகள் தெளிந்திருப்பர்கள். உண்மையில் இது பாணிக்ரஹண பூர்வகபரமபோக மஹோத்ஸவந்தானென்பதை இங்கு விரிவாக நிரூபிக்கிறோம். பெண்மகளுக்கும் புருஷனுக்கும் விவாஹம் நடப்பது உலகவியற்கை. எம்பெருமான் பரமபுருஷனென்று பேர்பெற்றவனாகையாலே அவன் புருஷனென்பது நிர்விவாதம். இங்கே பெண்களாய்ப் பிறந்தவர்களுக்கு அப்பரமபுருஷனோடு விவாஹமும் போகமும் ப்ராப்தமாகலாம்; இங்கு ஆண்களாயுள்ளவர்களுக்குப் பரமபுருஷனோடு விவாஹமோ போகமோ ப்ராப்தமாவதற்குத் தகுதியில்லையே யென்று முன்னம் ஒரு சங்கை யுண்டாகக்கூடும். அது வேண்டா. ஆண்மை பெண்மையென்னும் வாசியானது அழியுந்தன்மையதான உடலிற் காணப்படுமதே யொழிய சாச்வதமான ஆத்மாவில்

காணப்படுமதன்று. ஆத்மஸ்வரூபத்தை யுற்று நோக்கினல் அதற்கு பெண்மையே இயற்கையான வடிவென்று தேறலாம். எங்ஙனே யென்னில்; திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தில் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் ஒன்பது வகையான உறவுகள் [நவவிதஸம்பந்தம்] உள்ளனவாக நிரூபிக்கப்படுகிறது. அவற்றுள் भर्तृभार्याभावरूप (பர்த்ருபார்யாபாவரூப) ஸம்பந்தம் ப்ரணவத்தில் இடைச் சொல்லான உகாரத்தில் தேறுவதாகும். அவதாரணார்த்தகமான உகாரத்தினல் தேறுவது அநந்யார்ஹ சேஷத்வம். அதாவது எம்பெருமானொருத்தனுக்கே உரிமைப்பட்டிருத்தல். இது வாயிற்று ஸ்த்ரீதர்மம். *கண்டாரிகழ்வனவே காதலன்தான் செய்திடினும், கொண்டானையல்லா லறியாக் குலமகள் போல்* என்று ஸ்ரீகுலசேகரப் பெருமாள் [பெருமாள் திருமொழி 5-2.] இது தன்னை வெளியிட்டருளினர். ஆகவே ஜீவாத்மாவை ஒரு பெண்மகளாகவே நினைக்கவேணும். ஆழ்வார்கள் அடிக்கடி பெண்பாவனையோடு பாசுரம் பேசுவதும் இதுபற்றியே. ஆண்களாய்ப் பிறந்த ஆழ்வார்கள் எதற்காகப் பெண்மையை ஏறிட்டுக் கொள்ளுகிறர்களென்று சில அறிவிலிகள் நினைப்பதும் கேட்பதுமுண்டு; அது தவறு. ஆத்மாவுக்குப் பெண்மை வந்தேறியாயிருந்தாலன்றோ அதனை ஏறிட்டுக்கொள்ளுவதாக நினைக்கலாம். அது வந்தேறியன்றிக்கே இயற்கை வடிவமாகவேயுள்ளதென்பதும் இந்த வியாஸத்தினல் தெளியப் பெறலாகும்.

சரீரத்திற்குப் பிறப்பு உண்டே யொழிய ஆத்மாவுக்குப் பிறப்புமிறப்புமில்லை யென்பது ஸாதாரணமான நூற்கொள்கை. *असन्नेव स भवति असद् ब्रह्मेति वेद चेत्* [தைத்திரீயஉபநிஷத்] என்கிற ச்ருதிவாக்யத்தையும், *அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்* (திருச்சந்தவிருத்தம்-64) என்கிற திருமழிசைப் பிரான் பாசுரத்தையும் உற்றுநோக்குமிடத்து ஆத்மாவுக்கும் பிறப்பிறப்புகளுண்டென்று உணரலாம். ஆத்மா பிறக்கும்போது பெண்ணுகத் தான் பிறக்கின்றதென்று அறியக்கிடக்கின்றது. உடலைப் பிறப்பிக்க ஒரு தாயும் ஒரு தகப்பனும் ஏற்படுகிறர்கள். அப்படியே ஆத்மாவைப் பிறப்பிக்கவும் ஒரு தாயும் தகப்பனுமுளர். இதை மஹர்ஷிகளே சொல்லிவைத்தார்கள்— *शरीरमेव मातापितरौ जनयतः; स हि विद्यातस्तं जनयति, तत् श्रेष्ठं जन्म—சரீரமேவ மாதாபிதரௌ ஜநயத:, ஸ ஹி வித்யாதஸ் தம் ஜநயதி தத் ச்ரேஷ்டம் ஜந்ம* என்றார்கள். இதனல் ஆத்மாவுக்கு ஆசார்யன் பிதாவென்றும் 'வித்யா' மாதாவென்றும் விளங்கிற்று. வித்யா என்று சொல்லப்படுவது திருமந்த்ரமேயாகும். ஆசார்யன் திருமந்த்ரமுகேந ஸ்வரூபஜ்ஞானத்தை யுண்டாக்கினபோது இவ்வாத்மஸத்பாவமாகையாலே (ஸ்த்ரீலிங்கசப்தமான) வித்யையை மாதாவாகவும் ஆசார்யனைப் பிதாவாகவும் கொள்ளவடுக்கும். நம்மாழ்வார் ஆசார்யனை *தஞ்சமாகிய தந்தை* [திருவாய்மொழி 3.6.9.] என்கிற சொல்லால் குறிப்பிட்டனர். 1. தந்தை 2. ஆகிய தந்தை, 3. தஞ்சமாகிய தந்தை என்று மூவகைப் படுவர்கள் பிதாக்கள். 1. சரீரோத்பத்திக்கு மாத்திரம் ஹேதுவாயிருந்து *स पित्रा च परित्यक्तः— ஸ பித்ரா ச பரித்யக்த:* [ஸ்ரீராமா-ஸுந்.] இத்யாதிப்படியே ஆபத்காலங்களிலே கைவிடுகின்ற பிதா வெறும் தந்தை. 2. உலகுக்கெல்லாம் தந்தை யென்று பேர்படைத்து ஆபத்துக்களிலும் ரக்ஷிக்குமவனான ஸர்வேச்வரன் 'ஆகிய தந்தை' எனத்தகுவன். 3. அவனுங்கூட *ஸம்ஸாரபந்தஸ்திதிமோக்ஷஹேது:* என்கிறபடியே ஸம்ஸாரமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிருப்பன்: அப்படியன்றியே ஸ்வரூபத்தை யுண்டாக்கு

மனாய் ஒரு தசையிலும் கைவிடாதே ஹிதைஷியாய் உஜ்ஜீவனத்திலேயே ஊன்றிப் போருமவனாயிருந்துகொண்டு மோக்ஷைகஹேதுவாய் ஸர்வாத்மநா சரண்யனாயிருக்குமாசார்யன் 'தஞ்சமாகிய தந்தை' எனத்தகுவன். ஆக, ஜீவாத்மாவாகிற பெண் குழந்தைக்கு வித்யை தாயென்றும், ஆசார்யன் தந்தையென்றும் தேறிற்று.

---

# 6. ஜீவாத்மக் குழந்தையின் வளர்ச்சி.

---

இப்படி வித்யை என்கிற தாயினிடத்தில் ஆசார்யனாகிற தந்தையினால் பெறுவிக்கப்பட்ட ஆத்மக் குழந்தையானது வளர்ந்துவருகிற விதம் இனிச் சொல்லப்படவேண்டும். உலகில் குழந்தையை வளர்ப்பவர்கள் தேனும் பாலுமமுதுமான போக்கியவஸ்துக்களையிட்டு வளர்ப்பர்கள். இங்கும் அவ்வண்ணமாகவே * எனக்கென்றும் தேனும் பாலுமமுதுமாய திருமால் திருநாமம் * (பெரியதிருமொழி 6-10-6) என்றும், * எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே திருமாலிருஞ்சோலைக் கோனே * என்றும் சொல்லுகிறபடியே தேனும் பாலுமமுதும் போலே பரமபோக்யமான பகவந்நாமங்களையும் பகவத்விஷயத்தையுமிட்டு ஆசார்ய பிதாவால் இக்குழந்தை வளர்க்கப்படுகிறது. * ஒரு மகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால்தான் கொண்டுபோனான் * [பெரியாழ்வார் திருமொழி. 3.8.4.] என்கிற பாசுரத்தையும் சேர்த்து நோக்கினால் இக்குழந்தையானது அநந்யார்ஹ சேஷத்வாதிகளாலே ஸ்ரீமஹாலக்ஷ்மியோடொக்க வளர்க்கப்படுகிறதென்னுமிடமும் திருமாலாகிற நாயகனால் கைக்கொள்ளப்படுகிறதென்னுமிடமும் தெரியவரும்.

இப்படி குழந்தை வளர்ந்துகொண்டே செல்லுகின்றது. விவாஹத்திற்கு ஏற்ற வயதும் வருகின்றது. உலகில் விவாஹத்தை நடத்த முற்படுமவர்கள் பல விஷயங்களைப்பார்க்கிறார்கள்; *कन्या वरयते रूपं माता वित्तं श्रुतं पिता। बान्धवाः कुलमिच्छन्ति मृष्टान्नमितरे जनाः— கந்யா வரயதே ரூபம் மாதா வித்தம் ச்ருதம் பிதா, பாந்தவா: குலமிச்சந்தி ம்ருஷ்டாந்நமிதரே ஜநா: * என்று சொல்லுகிறபடியே பெண்ணானவள் அழகைப்பார்ப்பள்; பெண்ணைப் பெற்றவள் ஐச்வர்யத்தை விரும்புவள்; பிதாவானவர் ஜ்ஞாநஸம்பத்தியை நோக்குவர்; உற்றுறவினர் தாங்கள் கலந்து பரிமாறுகைக்குரிய குலத்தை யபேக்ஷிப்பர்கள்; மற்றைப்படி வழிப்போக்கர்களாயிருப்பவர்கள் வயிறார நல்லுணவு கிடைப்பதை நோக்கியிருப்பர்கள். அழகும் செல்வமும் அறிவும் குலமுமுணவுமெல்லாம் ஒருங்கே ஒன்றுசேரப் பெற்ற வரன் உலகில் வாய்ப்பது அரிதே. ஏதோ ஒன்றிரண்டு நலம் ஒன்றுசேரும். இவையெல்லாம் பரிபூர்த்தியாக ஒன்றுசேர்ந்த விடம் எம்பெருமானேயாம். அழகைப்பற்றிச் சொல்லில், * எழிலுடையவம்மனைமீர்! என்னரங்கத்தின்னமுதர் குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழிலெழுகமலப் பூவழகர் * [நாச்சியார் திருமொழி 11-2.] என்னும்படியிருப்பன். செல்வத்தைப் பற்றிச் சொல்லில் * பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும், அங்காதும் சோராமே ஆள்கின்ற வெம்பெருமான், செங்கோலுடைய

திருவரங்கச் செல்வனார் * (ஷை 10-3.) என்னும்படியே உபயவிபூதிநாயகத்வமாகிற செல்வம் அநந்யஸாமாந்யமானது. கல்விச் செல்வத்தைப் பற்றிச் சொல்லில் * கலைகளும் வேதமும் நீதிநூலும் கற்பமும் சொற்பொருள்தானும் மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினாலருள் செய்தவராய், * இவர் வாயில் நல்வேதமோதும் வேதியர் வானவராவர் தோழீ. * (பெரியதிருமொழி 9-2-1) என்னும்படியிருப்பவராகையாலே அதிலும் உயர்வறவுயர்ந்தவர். இனி குலத்தைப்பற்றிச் சொல்லிலோ *குலந்தரும்...... நாராயணாவென்னும் நாமம் * (பெரியதிருமொழி 1-1-9.) என்று தன் பெயரைச் சொன்னவர்களுக்கெல்லாம் மாசில் குடிப் பிறப்பைத் தருமவன் ஸ்வயம் ஸத்குலப்ரஸூதனென்பது சொல்லவேணுமோ? இனி ம்ருஷ்டான்னத்தில்தான் குறையுண்டோ? * கணைநாணிலோவாத் தொழில் சார்ங்கன் தொல்சீரை நன்னெஞ்சே! ஓவாத ஊணாக வுண் * [பெரியதிருவந்தாதி,] உண்டுகளித்தேற்கு உம்பரென்குறை * (திருவாய்மொழி 10-8-7.) என்னும்படியாக கல்யாணகுணம்ருஷ்டான்னம் அபரிமிதம். ஆகவிப்படி ஒன்றிலும் குறையில்லாத வரன் ஸர்வேச்வரனேயாகையாலே அந்த வரனுக்கு வாழ்க்கைப்படுவதற்காகவே இந்த ஜீவாத்மக்குழந்தை வளர்க்கப்பட்டுவருகிறது. ஆனதுபற்றியே இக் குழந்தையை நோக்கிச் சொல்லுமிடத்து * பின்னை கொல் நிலமாமகள் கொல் திருமகள் கொல் பிறந்திட்டாள்! * [திருவாய்மொழி 6-5-10.] என்றும், * காவியங்கண்ணியெண்ணில் கடிமாமலர்ப்பாவையொப்பாள் * [பெரியதிருமொழி 3.7.9] என்றும் சொல்லப்படுகிறது.

---

## 7. ஜீவாத்ம விவாஹம்.

ஜநகசக்ரவர்த்தியால் பெற்று வளர்க்கப்பட்டுவந்த ஸீதாபிராட்டியானவள் * पति संयोगसुलभं वयो दृष्ट्वा च मे पिता । चिन्तार्णवगतः पारं नाससादाप्लवो यथा— பதிஸம்யோகஸுலபம் வயோ த்ருஷ்ட்வா ச மே பிதா, சிந்தார்ணவகத: பாரம் நாஸஸாத அப்லவோ யதா* [ஸ்ரீராமா. அயோ. 11-8-34.] என்று தானே தன்வாயாற் சொல்லும்படியாக அவளுடைய பிதா அநுரூபவரன் காணாமையாலே சிந்தைக்கடலில் ஆழ்ந்திருந்தானென்று தெரியவருகின்றது. இந்த ஜீவாத்மக் குழந்தையைப் பெற்ற ஆசார்ய பிதா அப்படி சிந்தைக்கடலில் ஆழவேண்டிய அவசியமில்லை; தகுந்த வரனை முன்னடியே தான் ஸங்கல்பித்திருக்கையாலே அந்த வரன் இக்குழந்தைக்கும் ஸ்ப்ருஹணீயனாயிருக்கிறானா? என்பதொன்றே பார்க்கவேண்டியதாயிற்று. குழந்தையைக் கேட்கிறார் பிதா— 'அம்மா! உனக்கு விவாஹத்திற்குரிய வயது வாய்த்து விட்டதே, இனி விவாஹம் நடக்கவேணுமே; யாரை நீ மணந்து கொள்ள விரும்புகிறாய்?' என்று. அதற்குக் குழந்தை சொல்லுகிற விடை யாதெனில்; * வானிடை வாழுமவ்வானவர்க்கு மறையவர் வேள்வியில் வகுத்தவவி கானிடைத் திரிவதோர் நரி புகுந்து கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப, ஊனிடையாழி சங்குத்தமற்கென்று உன்னித்தெழுந்த வென்தடமுலைகள், மானிடவர்க்கென்று பேச்சுப் படில் வாழகில்லேன் * (நாச்சியார் திருமொழி 1-5) என்றும், * அங்கைத்தலத்திடையாழிகொண்டானவன் முகத்தன்றி விழியேனென்று, செங்கச்சுக்கொண்டு கண்ணாடையார்த்துச் சிறுமானிட

வரைக்காணில் நாளும் கொங்கைத்தலமிவை நோக்கிக் காணீர் கோவிந்தனுக்கல்லால் வாயில் போகா (ஷை 12-4.) என்றும், * அன்றிப்பின் மற்றொருவற்கென்னைப் பேசலொட்டேன் மாலிருஞ்சோலை யெம்மாயற்கல்லால், கொற்றவனுக்கிவளாமென்றெண்ணிக் கொடுமின்கள் கொடீராகில் கோழம்பமே * (பெரியாழ்வார் திருமொழி 3-4-5.) என்றும் இங்ஙனேயாயிற்று விடை கூறுவது. இதுகேட்டுப் பிதாவுக்குப் பரமஸந்தோஷம்; நம் எண்ணமே இக்குழந்தைக்கு முள்ளதாயிற்றே; நாமொன்று நினைக்க இவள் வேறொன்று நினையாதபடி நாம் நினைத்த வரனையே இவளும் வரிக்கும்படியாக நேர்ந்ததே யென்று பரமானந்தமடைந்து பின்னையும் குழந்தையைக் கேட்கிறார்— குழந்தாய்! நீ பகவானை மணந்துகொள்வதாகச் சொல்லுகிறாயே; அவர் மணந்துகொள்வாரா? ஸகல ஜகத்பிதாவான அவர் ஒருவர்க்கும் பதியாகவோ பர்த்தாவாகவோ ஆகக்கூடியவரன்றே; அவரை நீ விரும்பிப் பயனென்? என்கிறார். அதற்குக் குழந்தையின் விடை;—' பிதாவே! ஏன் அப்படிச் சொல்லுகிறீர்? நீர் எனக்குக் கற்பித்த முதுமொழிகளில் * पतिं विश्वस्यात्मेश्वरम्— பதிம் விச்வஸ்யாத்மேச்வரம் * (நாராயணாநுவாகம்) என்றும், * कौसल्या लोकभर्तारं सुषुवे यं मनस्विनी கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவே யம் மநஸ்விநீ * (ஸ்ரீராமா-ஸுந். 38-56.) என்றும், * பணவாளரவணைப் பற்பல காலமும் பள்ளிகொள் மணவாளர் * (நாச்சியார் திருமொழி 10.6.) என்றும் அந்தப் பரமபுருஷரை விச்வபதியென்றும் லோகபர்த்தாவென்றும் மணவாளப்பிள்ளை யென்றும் தெரிவித்திருக்கவில்லையா? என்னைப் போல் எத்தனையோ பேர்களுக்கு அவர் பதியாகவும் பர்த்தாவாகவும், மணவாளராகவும் வாழ்கின்றவரல்லரோ? அவர் எனக்கு பர்த்தாவாகத் தடையென்? என்றாள். அது கேட்டு உள்களிந்த தந்தை மீண்டும் சொல்லுகிறார்—' குழந்தாய்! பல கோடி நூறாயிரம் பேர்களை மனைவிமாராகக் கொண்டிருக்கின்ற விச்வபதி லோகபர்த்தாவை நீ மணந்துகொண்டாயாகில் பட்டமஹிஷிகளான முன்னைத் தேவிமார்கள் பலரிருக்க உன்னை அவர் கண்ணெடுத்துப் பார்ப்பாரோ? ஏகதாரவ்ரதனானொரு வரனை மணந்துகொண்டாலல்லவோ நெஞ்சு குளிர வாழலாம்; ஆலோசித்துப் பார்' என்றார்; அதற்குக் குழந்தை கூறுகின்றது—' அப்பா! என்னை நீர் பரீக்ஷிக்கிறீர் போலும்!, " அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி முன்னணைக் கன்றையும் புல்லிட வந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலுமேற்குமாபோலே பெரியபிராட்டியாரையும் ஸூரிகளையும் விட்டு ஸ்நேஹித்துக்கொண்டு போரும்" (தத்வத்ரயம். 3-11.) என்கிற அற்புதமான சூர்ணையை நீரே சந்தை சொல்லிக் கொடுத்துவைத்து இப்போது இங்ஙனே சொல்லுகிறீரே; பசுவானது அன்று தான் ப்ரஸவித்த கன்றுக்கு இரங்கி முன்பு தான் ஸ்நேஹித்துக் கொண்டுபோந்த முன்னணைக்கன்றை முட்டித் தள்ளுவதும், தனக்கு போக்யமான புல்லையிட வந்தவர்களையுங்கூட கொம்பிலே கோத்தெடுத்துக் குளம்பாலே மிதித்துத் தள்ளுவதும் செய்யுமா போலே [illegible]போகங்களுக்கு உறுப்பான பெரியபிராட்டியாரையும், முன்பு ஸ்நேஹித்துக் கொண்டுபோந்த நித்யஸூரிகளையும் தள்ளிவிட்டு, இன்று கைக்கொண்டவர்களை ஸ்நேஹித்துக்கொண்டுபோகிறவரன்றோ அவர், அப்படிப்பட்ட வத்ஸலரையன்றி வேறொருவரை என் மனம் பற்றாது' என்று.

இது கேட்ட தஞ்சமாகிய தந்தை பரமகுதூஹலங்கொண்டு பாணிக்ரஹண மங்களத்தை நிறைவேற்றத்தொடங்கினார். * பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி

வந்து * (பெரியாழ்வார் 4-2-8.) என்கிறபடியே ஆசாரியர் பரமாத்வாவினுடைய ப்ரதிநிதியாகையாலே "எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கலஸூத்ரம் போலே திருமந்த்ரம்" (முமுக்ஷுப்படி--113.) என்று திருமங்கலியமாகிய திருமந்த்ரத்தை (அல்லது) திருமந்த்ரமாகிற திருமங்கலியத்தைக் குழந்தைக்குக் கண்டஸ்தமாக்கினார். * பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா * என்று பாணிக்ரஹண ப்ரகரணம் வந்தவாறே *பறவை யேறு பரம்புருடா! நீயென்னைக் கைக்கொண்டபின் *(பெரியாழ்வார் 5-4-2.) என்னும்படியாகப் பெரியதிருவடியை மேற்கொண்டு பரமபுருஷன் வந்து கைக்கொண்டு பாணிக்ரஹணமங்கலத்தை நிறைவேற்றினாயிற்று.



# 8. ஜீவாத்ம வதூ பிறந்தகத்தில் வாழ்வது.

ஜீவாத்ம மணாட்டிக்குப் பாணிக்ரஹணமங்களம் நிறைவேறிற்று. இக்காலத்து விவாஹமாக இருந்தால் உடனே புக்ககம் புக்கு பர்த்தாவோடே கூடிக்களிக்க ப்ராப்தமாய்விடும். இது ப்ராசீந சாஸ்த்ரரீதியின் கட்டளையான விவாஹமாகையாலே பருவம் நிரம்பின பின்பே பர்த்தாவோடு சேரவேண்டுமாதலால் பருவம் நிரம்புங்காலத்தை யெதிர்பார்த்து மணமகள் பிறந்தகத்திலேயே வாழவேண்டியதாகின்றது. அப்படி வாழுங்காலத்திலே குலமகள் நல்ல நாயகன் நமக்கு வாய்த்ததும் அவனை இப்போதே யநுபவிக்க ப்ராப்தியில்லையே யென்று வருந்திக் கிடப்பதும் பரபுருஷனைக்கண்ணெடுத்தும் பாராதே தன் கணவனுடைய பெருமைகளையே சிந்தித்துப் பேசிக்கொண்டிருப்பதும், கணவனிடத்து அன்புமிக்க உறவினரிடத்து அன்புபூண்டொழுகுவதும், அடிக்கடி கணவன் வந்து ஆசையைப் பெருக்கப் பெறுவதும், தானும் இடையிடையே புக்ககம் சென்று வருவதும், கணவனோடு இடைவீடின்றிக் கூடிவாழுங்காலம் எப்போது வாய்க்குமோ வென்று பாரித்துக் கொண்டிருப்பதும் அப்படிப்பட்ட நாள் குறுகக் குறுகக் குதூஹலம் விஞ்சி 'புக்ககம் போய் வருகிறேன்; பர்த்ருக்ருஹம் சென்று வருகிறேன்' என்று சிரபரிசய முள்ளவர்களிடத்தே சொல்லிக் கொள்வது மாயிருப்பள். இந்த ஜீவாத்ம மணவாட்டியும் அங்ஙனே யாயிற்று இருப்பது. [இவட்குப் பிறந்தகம்—லீலா விபூதி; புக்ககம்–நித்ய விபூதி.] பிறந்தகத்தில் வாழுமளவும் இந்த ஜீவாத்மக் குழந்தையின் போதுபோக்கின் ப்ரகாரம் இனித் தெரிவிக்கப்படுகிறது.

கணவனைக் கிட்டிப் பரிமாறப் பெறாமைக்கு வருந்தியிருக்கும் குலமகள்போல, இவளும் * கண்ணபிரானை விண்ணோர் கருமாணிக்கத்தையமுதை நண்ணியும் நண்ணகில்லேன் நடுவேயோருடம்பிலிட்டு * (திருவாய் 5-1-5) என்று, சேர்ந்து பரிமாறவொண்ணாதபடி அநுபவவிரோதியான சரீரம் இடைச்சுவராயிருக்கிற படிக்கு வருந்தித் துடித்துக் கிடப்பள்.



குலமகள் தனக்கு வாய்த்த புருஷனையன்றி மற்றொருவனை நெஞ்சாலும் நினையாள், கண்ணெடுத்தும் பாராள். இவளும் * மறந்தும் புறந்தொழா மாந்தர் * (நான்

முகன் திருவந்தாதி) என்னும்படிக்கு ப்ரதமோதாஹரணமாயிருந்து கொண்டு * மற்றோர் தெய்வம் தேறேனுன்னையல்லால் திருவிண்ணகரானே! * (பெரியதிரு. 6-3.7.) என்றும், * கல்லாதவரிலங்கை கட்டழித்த காகுத்தனல்லா லொரு தெய்வம் யானிலேன் * (நான்முகன்—53) என்றும், * தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே * (திருவாய் 3.6-8.) என்றும் * உன்னித்து மற்றொரு தெய்வந் தொழாளவனையல்லால் * (டி 4.6-10.) என்றும், சிலையினா லிலங்கை செற்ற தேவனே தேவனாவான் * (திருமாலை-7.) என்றும், * அண்டர் கோனணியரங்க னென்னமுதினைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே. * (அமல-10) என்றும், * விழிக்குங் கண்ணிலேன் நின் கண் மற்றல்லால் வேறொருவரோ டென்மனம் பற்றாது *(பெரியாழ் 5-1.2) என்றிப்படிப்பட்ட பாசுரங்களினால் தேவதாந்தரங்களினிடத்தில் வைராக்யத்தைக் காட்டி நிற்பள்.

தனது கணவனுடைய பெருமைகளையே சிந்தித்தும் பேசியும் போதுபோக்கும் குலமகள் போல இவளும் * குரவையாய்ச்சியரோடு கோத்ததும் குன்றமொன்றேந்தியது முட்பட மற்றும் பலவும், * கேயத் தீங்குழலூதிற்றும் நிரை மேய்த்ததும் கெண்டையொண்கண் வாசப் பூங்குழல் பின்னை தோள்கள் மணந்ததும் மற்றும் பலவும், பாரிடந்து பாரையுண்டு பாருமிழ்ந்து பாரளந்து பாரையாண்டது முதலியனவும் இரவு நண்பகலும் தவிர்கிலாது சிந்தித்தும் பேசியும் போதுபோக்குவள். கணவனிடத்தில் அன்பு மிக்கு உறவினரிடத்தே அன்பு பூண்டொழுகும் குலமகள் போல இவளும் * மெய்யடியார்கள் தம் ஈட்டங்கண்டிடக் கூடுமேல் அது காணுங்கண் பயனாவதே * (பெருமாள் திரு-2-1.) என்றும், * நம்பனை நரசிங்கனை நவின்றேத்துவார்களைக் கண்டக்கால், எம்பிரான் தன சின்னங்கள் இவரிவரென்றாசைகள் தீர்வனே * (பெரியாழ். 4-4-9.) என்றும் பாகவத ப்ராவண்யாதிசயத்தைப் பேசியலற்றிக் கொண்டிருப்பள்.

குலமகளானவள் அடிக்கடி கணவன் தன்னிடம் வந்து காதலைப் பெருக்கப் பெறுவதுபோல இவளும் * தேவார் கோலத்தொடும் திருச்சக்கரம் சங்கினொடும் ஆவாவென்றருள் செய்து அடியேனொடுமானானே * (திருவாய் 5.1-9.) என்றும், * அந்தாமத்தன்பு செய்து என்னாவி சேரம்மானுக்கு * (டி 2-5.1.) என்றும், * வைகுந்தா மணிவண்ணனே என்பொல்லாத் திருக்குறளாவென்னுள் மன்னி வைகும் வைகல் தோறுமமுதாயவானேறே * (டி 2-6-1.) என்றும் சொல்லும்படி அடிக்கடி எம்பெருமான் வந்து கலக்கப் பெறுவள்; * ஊரவர் கவ்வை யெருவிட்டு அன்னை சொல் நீர்படுத்து ஈரநெல்வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ் செய்யுள், பேரமர் காதல் கடல் புரைய விளைவித்த காரமர் மேனி * (டி 5.3-4.) என்னும்படி அவன் வரும்போதெல்லாம் வடிவழகைக்காட்டிக் காதலை வளர்க்கவும் பெறுவள். சில விசேஷ காலங்களில் இவள் புக்ககத்திற்குஞ் சென்று வருவது போல இவளும் * ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்பக் கண்ட சதிர் கண்டு * (திருவாய். 4-9-10) என்னும்படி திருநாட்டுச் சதிரையும் காண்பள். கணவனோடு நித்யஸம்ஶ்லேஷம் வாய்ப்பது என்றைக்கோ வென்று அவள் பாரித்திருப்பதுபோல இவளும் * கூவிக்கொள்ளுங்காலம் இன்னங் குறுகாதோ? * (டி 6.9-9.) என்றும் * என்றே யென்னை உன்னேரார் கோலத்

திருந்தடிக்கீழ் நின்றே யாட்செய்ய நீ கொண்டருள நினைப்பதுதான் * (திரு. 8-3-8.) என்றும் பாரித்துக்கொண்டே யிருப்பள்.

குலமகள் கணவனோடு நிரந்தரமாகக் கூடப் பெறும் நாள் குறுகக் குறுகக் குதூஹலம் விஞ்சியிருக்குமாபோல, இவளும் * நாமுமக்கறியச் சொன்ன நாள்களும் நணியவான * என்னும்படி அந்நாள் ஸமீபித்தவாறே * நானேறப் பெறுகின்றேன் நரகத்தை நகு நெஞ்சே! * என்றும் * உற்றேனுகந்து பணிசெய்து உனபாதம் பெற்றேன் * என்றும் சொல்லிக் குதூஹலம் விஞ்சியிருப்பள். மணமகள் புக்ககத்திற்குப் புறப்படும் போது சிரபரிசயமுள்ளவர்களிடம் சென்று சொல்லிக்கொள்ளுமாபோலே இவளும் [பெரிய திருமொழியில் 10—1.] * ஒருநல் சுற்றமென்னும் பதிகத்திலே * பெருநெல் கண்டது நீர்மலை, இன்று கண்ண மங்கையுட் காண்டுமே * வேங்கடத்துச் சியில் கண்டுபோய்—சென்றுகாண்டும் தண்காலிலே * ஆலியில் கண்டு மகிழ்ந்து போய்-காண்டும் நாங்கூரிலே * பேரில் வணங்கிப்போய்—சென்று வெள்ளறைக்காண்டுமே * நறையூர்க் கண்டு—சென்று காண்டும் மெய்யத்துள்ளே * சேறையில் கண்டு போய்—யாம் குடந்தைச் சென்று காண்டுமே * அழுந்தையில் கண்டு போய்— சென்று காண்டும் வெஃகாவுளே * மாலிருஞ்சோலைத் தொழுது போய்— விண்ணகர்க் காண்டுமே * கோட்டியூர்க் கண்டு போய்— சென்று காண்டும் நாவாயுளே * என்று சொன்ன கணக்கிலே பல திருப்பதி யெம்பெருமான்கள் பக்கலிலே அநுஜ்ஞை பெற்றுக்கொள்வள். பிறகு புக்ககம் செல்லப் புறப்படுகிறாள்.

---

## 9. ஜீவாத்ம மணாட்டி புக்ககஞ் செல்லுதல்.

குலமகள் பிறந்தகத்தில் வாழ்கிறபோது யார் யாருடன் அன்பு பூண்டொழுகிக் கலந்து பரிமாறினளோ அவர்களையெல்லாம் விட்டு அகலுகிறாள் புக்ககம் போம் போது. * முற்றிலும் பைங்கிளியும் பந்து மூசலும் பேசுகின்ற சிற்றில் மென்பூவையும் விட்டகன்ற செழுங்கோதை * (பெரியதிருமொழி 3.7.8.) என்கிறபடியே, அவளும் லீலா விபூதியிலுள்ள லீலாபரிகரங்களை யெல்லாம் விட்டுப் புறப்படுகிறாள். மணமகள் புறப்படும்போது மங்கள வாத்யகோஷம் மங்களாசாஸனம் முதலியன நடை பெறுமாபோலே இவளுக்கும் * சூழ் விசும் பணிமுகில் தூரியம் முழக்கின * (திருவாய் 10-9.) என்கிற பதிகத்திற்படியே ஸமுத்ர பேரீகீத காஹள சங்க ஆசீ ஸ்துதி கோலாஹலங்கள் விளைகின்றன. வழியில் ஆங்காங்கு பந்துக்களிருந்தால் அவர்கள் சிறப்புகள் செய்யப் பெற்றுச் செல்லுவள் மணமகள். அப்படியே இவளும் * मुक्तोऽर्चिर्दिनपूर्वपक्षषडुदङ्मासाब्द वातांशुमद्ग्लौ विद्युद्वरुणेन्द्रधातृमहित:— முக்தோர்ச்சிர்தி ந பூர்வபக்ஷ ஷடுதங் மாஸாப்த வாதாம்சுமத் க்லௌ வித்யுத் வருணேந்த்ர தாத்ரு மஹித: * என்கிறபடியே அர்ச்சிராதி மார்க்கத்திலுள்ளோரால் சிறப்பிக்கப் படுகிறாள். மணமகள் கணவனுடைய ஊரெல்லையிலே சென்று சேர்ந்ததும் ஓரிடத்தில் தங்கி அழுக்கறும்படி நீராடப் பெறுவள்; அப்படியே இவளும் * सीमान्तसिन्ध्वाप्लुत:— ஸீமந்த ஸிந்த்வாப்லுத: * என்கிறபடியே விரஜையிலே குடைந்து நீராடி அழுக்கு அறப்பெறுவள். பிறகு பர்த்தாவின்

க்ருஹத்திலிருந்து ஸ்த்ரீகளுக்குப் புஷ்பமாலைகள் [illegible] சூர்ணங்கள் பட்டுப் புடைவைகள் சிறந்த பூஷணங்கள் கொண்டுவந்து அலங்காரம் செய்யுமா போலே இவனுக்கும் तं पञ्चशतान्यप्सरसां प्रतिधावन्ति शतं मालाहस्ताः, शतमञ्जनहस्ताः, शतं चूर्णहस्ताः, शतं वासोहस्ताः शतं भूषणहस्ताः...तं ब्रह्मालङ्कारेणालंकुर्वन्ति— தம் பஞ்சசதானி அப்ஸரஸாம் ப்ரதிதாவந்தி, சதம் மாலா ஹஸ்தா: சதமஞ்சந ஹஸ்தா: சதம் சூர்ண ஹஸ்தா; சதம் வாஸோ ஹஸ்தா: சதம் பூஷண ஹஸ்தா:........தம் ப்ரஹ்மாலங்காரேண அலங்குர்வந்தி * (சாங்கோக்யம்) என்கிறபடியே ஐந்நூறு அப்ஸரஸ்ஸுக்கள் நூறுபேராய் ஐந்துவகுப்பாக புஷ்பமாலாதிகளான ஐவகைச் சிறப்புகளைக் கொணர்ந்து ப்ரஹ்மாலங்காரங்கள் செய்வர்களாயிற்று. பிறகு பர்த்தாவின் க்ருஹத்தில் நுழையுமளவில் லக்ஷ்மீ கல்யாணம் பாடி மங்களாசாஸனம் செய்வதும் மங்கள தீபாதிகளை ஏந்திக் கொண்டு எதிரே வருவதுமாக நிகழும். இவனுக்கும் * மிக்க வேராயிரத்துள் இவை பத்தும் வல்லாரவரைத் தொக்குப் பல்லாண்டிசைத்துக் கவரி செய்வரேழையரே * (திருவாய் 7–6-11.) என்கிறபடியே அங்குள்ளார் திரள நின்று மங்களாசாஸனம் பண்ணி சாமரம் பணிமாறுவர்கள். * நிதியும் நற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும், மதிமுக மடந்தையர் ஏந்தினர் வந்தே * (டை 10–9–10) என்கிறபடியே மங்களாவஹமான பூர்ணகும்ப தீபாதிகளைத் தரித்துக்கொண்டு எதிர்கொண்டழைப்பு நேரும். இத்தகைய வைபவங்களுடனே மணமகள் பர்த்தாவின் மாளிகையிலே புகுந்து பர்த்தாவோடேயிருக்குமா போலே இவனும் * மன்னிய மாதவனோடு வைகுந்தம் புக்கிருப்பாரே * (நாச்சியார். 3–10.) என்கிறபடியே வைகுந்தம் புக்கிருந்து முழுவேழுலகுக்கும் நாயகனோடே கூடியிருப்பள்.

---

## 10. பர்த்ருபோகமும் பரமாத்மபோகமும்.

கீழ்ச்சொன்ன உபலாலனங்களோடே மணமகள் கணவனோடு கூடினபின்பு தம்பதிகளின் பரிமாற்றம் உலகமறியும். ஜீவாத்ம பரமாத்மாக்கள் பரஸ்பரம் கூடின பின்பு இவர்களுடைய பரிமாற்றம் சாஸ்த்ர வேத்யமாயிராநின்றது. பெண்பிள்ளை கணவனுடைய கட்டிலிலே ஏறுமாபோலே ஜீவாத்ம மாதர்க்கும் அங்கு பகவதநுபவத்திற்காகப் பர்யங்காரோஹணமுண்டு; அங்கு ஸர்வாச்சர்யமயமான திவ்ய பர்யங்கத்திலே समेवंवित् पादेनाध्यारोहति— தமேவம்வித் பாதேந அத்யாரோஹதி * என்று பாதபீடத்திலே அடியிட்டேறுவதாக உபநிஷத்து ஓதுகிறது. மேல் நிகழுமநுபவத்தைப்பற்றிச் சில விஷயங்கள் தெரிவிக்கவேண்டியவையுண்டு. பரமாத்மாவையநுபவிக்க ஜீவாத்மா செல்லுவதாகவும் பரமாத்மாவை ஜீவாத்மா அநுபவிப்பதாகவும் ஆபாதப்ரதீதியிலே உலகம் நினைக்கிறது. [illegible] ஜீவாத்மாவைப் பெறுதற்காகப் பரமாத்மா செய்து போரும் க்ருஷிவிசேஷங்களை நன்கு உணர்ந்தவர்கள் ஜீவாத்ம லாபமே பரமாத்மாவுக்குக் கனத்த பேறு என்பதைத் திடமாகக் கொள்வர்கள். * स महात्मा सुदुर्लभः— ஸ மஹாத்மா ஸுதுர்லப: * என்று கீதாசார்யன் நிர்வேதத்தோடு சொல்லுவதை உற்று நோக்கினால் [illegible] ஜீவாத்மாவைப் பெறுதற்கு அவன் பல பாடுகள் படுகிறானென்பது நன்கு விளங்கும்.

* न च परमपुरुषः सत्यसंकल्पः अत्यर्थप्रियं ज्ञानिनं लब्ध्वा कदाचिदावर्तयिष्यति– ந ச பரமபுருஷஸ்
ஸத்யஸங்கல்ப: அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசிதாவர்த்தயிஷ்யதி *
என்று ஸ்ரீபாஷ்யத்தின் முடிவிலுள்ள ஸ்ரீஸூக்தியும் இவ்விஷயத்தை வற்புறுத்து
கின்றது.

திருமந்த்ரத்திலுள்ள நம: பதமானது அசித்வத் பாரதந்த்ரியத்தைச் சொல்லு
கிறதென்று முமுக்ஷுப்படியில் அருளிச்செய்த பிள்ளை லோகாசாரியர் (அங்கு. 92.)
"அதாவது போகதசையில் ஈச்வரனழிக்கும்போது நோக்கவேணுமென்று அழியா
தொழிகை" என்றொரு சூர்ணையருளிச் செய்கிறார். இதனால் நம: பதார்த்தம் பரம
பதத்தில் மிகவும் ஞாபகத்திலிருக்கவேணுமென்று காட்டுகிறார். திருநாட்டில்
போக்தாவான எம்பெருமான் ஜீவாத்மாவோடே கலந்து பரிமாறுமளவில் தன் வ்யா
மோஹாதிசயத்தாலே தான் தாழ நின்று பரிமாறுவனென்றும், அந்நிலையில் ஜீவாத்
மாவின் சேஷத்வம் அழிந்துபோய்விடுமென்றும், அது அழிந்துபோகாதபடி அதைக்
காப்பாற்றிக்கொள்ள வேணுமென்று ஜீவாத்மா நினைத்து அவனுடைய தலைதடுமா
றின போகத்திற்கு இடையூறு செய்தானாகில் அது பாரதந்த்ரியத்திற்கு விருத்தமாகு
மென்றும், அப்படியாகாமே பாரதந்த்ரியமே ஜீவிக்கும்படி பரமாத்மாவின் யதேஷ்ட
போகங்களுக்கு இசைந்திருப்பதுதான் ஸ்வரூபமென்றும் அருளிச் செய்கிற விதனால்,
திருநாட்டில் எம்பெருமான் இத்தலையை யநுபவிக்கு மநுபவம் வாசாமகோசர
மென்று விளங்காநின்றது. இவ்வநுபவத்தினாலுண்டாகு மாநந்தமும் அவனுக்கே
யாம். 'இத்தலையால் அவனுக்கு இவ்வளவு ஆனந்த முண்டாகிறதே!' என்று அதை
யநுஸந்திப்பதனாலுண்டாகு மானந்தமே இத்தலையைச் சேர்ந்ததாகும். இது தானும்
சைதந்ய ப்ரயுக்தமாக வந்ததத்தனை.

ஆக, ஜீவாத்மக் குழந்தையின் உத்பத்தி தொடங்கி விவாஹம் நடுவாகப் பரம
போக பர்யந்தமாக நிரூபித்த விதனால் * कृतकृत्याः प्रतीक्षन्ते मृत्युं प्रियमिवातिथिम्– க்ருதக்ருத்
யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம் * என்றதன் கருத்து விசதீகரிக்கப்பட்ட
தாயிற்று. ... ... ... ... *

---

# 11. பஞ்சகால பராயணர்கள்.

ஞானத்திற் சிறந்தவர்களென்றும் அனுட்டானத்திற் சிறந்தவர்களென்றும் ஞானா
னுட்டானமிரண்டிலும் சிறந்தவர்களென்றும் மஹான்கள் கொண்டாடப்படுகிறார்கள். ஞானத்
தில் சிறந்தவர்கள் பலர் கிடைக்கக்கூடும். அனுட்டானத்திற் சிறந்தவர்கள் பெரும்பாலும் அரு
மைப்பட்டே யிருப்பார்கள். அநுஷ்டாதாக்களான மஹான்கள் பஞ்சகாலபராயணர்களென்று
போற்றப்படுகின்றார்கள். பெருமாள் திருமொழியில் எழாம் பாட்டில் 'இரு முப்பொழுதேத்தி
யெல்லையில்லாத் தொன்னெறிக் கண் நிலை நின்ற தொண்டர்" என்று குலசேகராழ்வாரரு
ளிச் செய்திருப்பது பஞ்சகால பராயணர்களான பரமைகாந்திகளையே. இப்பாட்டில் "இரு
முப்பொழுது" என்றது பஞ்சகால மென்றபடி; இரண்டும் மூன்றுங்கூடினால் ஐந்து; ஆகவே
இருமுப்பொழுதேத்துமவர்கள் பஞ்சகால பராயணர்கள். இதனைச் சிறிது விவரிப்போம்;—

ஒரு தினத்தின் பகற்பொழுதை ப்ராத: காலம், ஸங்கவகாலம், மத்யாந்ஹகாலம் அபராஹ்ந காலம், ஸாயாஹ்ந காலம் என்று ஐந்தாகப் பகுத்து, ஸூர்யோதயம் முதல் அவ்வாறு நாழிகை இவற்றிற்கு முறையே உரியவையென்று வரையறுத்து, அபிகமநம், உபாதாநம், இஜ்யா, ஸ்வாத்யாயம், யோகம் என்ற ஐந்து ஒழுக்கங்களையும் முறையே (ப்ராத: காலம் முதலிய) அந்த ஐந்து சிறு பொழுதிலும் அநுஷ்டிக்கும்படி பஞ்சராத்ரம் முதலிய ஆகமங்கள் கூறும். இரவில் ஆசரிக்க வேண்டுவதும் யோகாநுஷ்டாநமே.

இவற்றின் விரிவு வருமாறு ;—முதல் ஆறு நாழிகையாகிய ப்ராத:காலத்திலே ஸ்நாநம் ஸந்த்யாவந்தநம் ஜபம் முதலிய காலைக்கடன்களைச் செய்து முடித்துத் தாம் ஆராதிக்கவேண்டிய எம்பெருமானுடைய ஸந்நிதியிற் சென்று ப்ரதக்ஷிண நமஸ்கார ஸ்தோத்ரம் முதலியவற்றால் எம்பெருமானை உகப்பிக்க வேண்டும். இஃது அபிகமந காலநியமம். அதற்கு அடுத்த ஸங்கவ காலத்திலே பகவதாராதனத்துக்கு வேண்டிய சுத்த தீர்த்தம், சந்தனம், புஷ்பம், தூபதீப த்ரவ்யங்கள் முதலியவற்றையும், திருமஞ்சனத்துக்கு வேண்டிய பால் தயிர் நெய் தேன் முதலியவற்றையும், எம்பெருமானுக்கு அமுது செய்விப்பதற்கு வேண்டிய அரிசி பருப்பு கறியமுது சர்க்கரை நெய் தயிர் பழம் முதலிய போஜநோபகரணங்களையும் ஸம்பாதித்துத் தொகுத்து ஸித்தஞ் செய்யவேண்டும். இஃது உபாதாந காலநியமம். மூன்றாவதான மத்யாஹ்ந காலத்திலே மாத்யாஹ்நிகஸ்நாநமும் மாத்யாஹ்நிகச் சடங்குகளுஞ் செய்து விதிமுறை வழுவாது பகவானுக்குத் திருவாராதனம் பண்ணிப் பக்குவமான உணவுகளை அமுது செய்வித்து அங்ஙனம் நிவேதித்த உணவுகளை அதிதிகளோடும் பந்து மித்திரர்களோடும் புஜிக்கவேண்டும்; இஃது இஜ்யா காலநியமம். அதற்கு அடுத்ததான அபராஹ்ந காலத்திலே மோக்ஷமார்க்கத்திற்கு உரிய வேத வேதாந்த வேதாங்கங்களையும் இதிஹாஸ புராணங்களையும் மற்றும உரிய நூல்களையும் தாம் கற்றலும் பிறர்க்குக் கற்பித்தலும் வேண்டும். *இது ஸ்வாத்யாய கால நியமம். இனி, ஈற்றதான ஸாயங்காலத்திலே மாலைக்கடனாகிய ஸந்த்யாவந்தனத்தைச் செய்யத் தொடங்கி ஸூர்யாஸ்தமனமான பின்பு ஜபத்தைப் பூர்த்திசெய்து இரவு போஜநாநந்தரம் ஏகாந்தமாக விருந்து ஐம்பொறிகளையடக்கி ப்ராணாயாமஞ் செய்து மனத்தைப்பரமாத்மாவினிடத்தே நிலைநிறுத்தி பகவத் குணாநுஸந்தானத்தோடு பள்ளிகொள்ளவேண்டும் இது யோககால நியமம். இவ்வாறு அநுஷ்டிக்கும் சிஷ்டர்கள் பஞ்சகால பராயணர் எனப்படுவர்கள்.

இப்படி அநுஷ்டானங்களைச் செய்து கொண்டே போதைப் போக்கினால் ஞானத்தை அபிவிருத்தி செய்து கொள்ள மார்க்கமில்லாமற் போகும். ஜ்ஞாதாக்களுக்கு ஸ்வயம் விமர்சிக்க வேண்டிய விஷயங்கள் பலவுண்டு; பல துறைகளிலும் எழுதவேண்டிய நூல்களும் பலபலவுண்டு; திருவடி வாரத்தில் காத்திருக்கின்ற சிஷ்யர்களுக்குப் போதிக்க வேண்டியவைகளும் பலவுண்டு. பஞ்சகாலங்களில் ஸ்வாத்யாய காலமென்று ஒதுக்கப்பட்ட ஓராறு நாழிகை யவகாசத்தில் என்னாகும்? ஞானமில்லாதவர்கள் இப்படிப்பட்ட அநுஷ்டானங்களினால் போது போக்கலாமேயொழிய வேத வேதாந்த வேதாங்கங்களில் விபுலமான ஞானம் படைத்தவர்கள் இங்ஙனே பஞ்சகால பராயணர்களாக இருக்க முடியுமோவென்று சிலர் சங்கிக்க நேரும். அது வேண்டா; ஒவ்வொரு காலத்திற்கும் ஏற்பட்ட அநுஷ்டானங்கள் ஆறு நாழிகை யவகாசத்தையும் ஆக்ரமிக்கக் கூடியவையல்ல. இடையிடையே ஞான விகாஸத்தைச் செய்து கொண்டு போக இடையூறொன்றுமிராது.

## 12. தசரதசக்ரவர்த்தியின் ஸத்யவாதித்வம்.

ஸ்ரீராமாயண அயோத்யா காண்டத்தில் தசரதசக்ரவர்த்தியின் ஸத்யவாதித்வம மிகவும் பொலிவு பெறுகின்றது. சக்ரவர்த்தி ஸத்யவாதியாகையாலே கைகேயியின் வரப்ரார்த்தனையை மறுக்கமாட்டாமல் இராமபிரானைக் காட்டுக்குப் போகவிட்டு ஸத்யவாதித்வப் பெரும் புகழைப் பெற்றனனென்று சொல்லப்படுகின்றது. கைகேயியின் வரப்ரார்த்தனையைப் பற்றின வரலாற்றை முன்னம் விவரிப்போம். தண்டகாரணியத்தில் வைஜயந்தமென்ற பட்டணத்தில் வஸிப்பவனும், திமித்வஜனென்று மறு பெயருள்ளவனும் இந்திரனை வென்றவனுமான சம்பரா ஸுரனை இந்திரனது வேண்டுகோளின்படி வெல்லுதற் பொருட்டுக் கைகேயியுடன் சென்ற தச ரத சக்ரவர்த்தி அவ்வசுரனை யெதிர்த்துச் செய்த பெரும் போரில் அவனால் விரணப்பட்டு மூர்ச்சையடைந்த பொழுது, அச்சக்ரவர்த்தியை அசுரர்கள் வதை செய்யாதபடி கைகேயி போர்க்களத்திலிருந்து எடுத்துச் சென்று பாதுகாக்க, மூர்ச்சை தெளிந்தவுடன் தசரதன் தனக்குக் கைகேயி செய்த உயிருதவிக்காக மிக மகிழ்ந்து தான் அவட்கு அவள் வேண்டும் இரண்டு வரங்கள் கொடுப்பதாக வாக்களிக்க, அவள் அவற்றை அப்போதே பெற்றுக் கொள்ளாமல் பின்பு தனக்கு வேண்டும் பொழுது கேட்டுப் பெற்றுக் கொள்வதாகச் சொல்லியிருந்தாள். ஸீதா கல்யாணத்தின் பிறகு வெகு காலங்கழித்துத் தசரதர் இராமபிரானுக்கு யுவராஜ பட்டாபிஷேகஞ் செய்ய முயலுகையில் மந்தரை சூழ்ச்சியால் மனங் கலக்கப்பட்ட அக்கைகேயி தசரதரை நோக்கி முன்பு அவர் தனக்குக் கொடுத்திருந்த இரண்டு வரங்களுக்கும் பயனாகத் தன்மகனை பரதனுக்குப் பட்டங்கட்டவும் கௌஸல்யை மகனை இராமனைப் பதினான்கு வருஷம் வனஞ் செலுத்தவும் வேண்டுமென்று சொல்லி வற்புறுத்த, அது கேட்டு வருந்தின தசரதர் ஸத்ய வாதியாகையால் முன்பு அவட்கு வரங்கொடுத்திருந்த சொல்லைத் தவறமாட்டாமல் இராம பிரானுடைய வனவாஸத்திற்கு இசைந்தாரென்பது கதைப்போக்கு. இங்கு நாம் முக்கியமாக ஆராய வேண்டுவதொன்றுண்டு. கைகேயிக்கு வரங்கொடுத்தகாலம் மிகப் புராதனம். இன்ன வரமென்று குறிப்பிடப்பட்டிருந்தது மில்லை. அது அப்படிநிற்க. ப்ரக்ருதத்திலோ வென்னில், இராமபிரானுக்கு சக்ரவர்த்திதானே ராஜ்ய ப்ரதானம் பண்ணியாயிற்று. அயோத்யா காண்டம் மூன்றாவது ஸர்க்கத்தில் (39.)

* ज्येष्ठायामसि मे पत्न्यां सदृश्यां सदृशस्सुतः । उत्पन्नस्त्वं गुणश्रेष्ठो मम रामात्मजः प्रियः ॥
त्वया यतः प्रजाश्चेमाः स्वगुणैरनुरञ्जिताः । तस्मात्त्वं पुष्ययोगेन यौवराज्यमवाप्नुहि ॥

ஜ்யேஷ்டாயாமஸி மே பத்ந்யாம் ஸத்ருச்யாம் ஸத்ருசஸ் ஸுத:,
உத்பந்நஸ் த்வம் குணச்ரேஷ்டோ மம ராமாத்மஜ: ப்ரிய:,
த்வயா யத: ப்ரஜாச்சேமா: ஸ்வகுணைரநுரஞ்ஜிதா:,
தஸ்மாத் த்வம் புஷ்யயோகேந யௌவராஜ்யமவாப்நுஹி."

என்னு மிந்த ச்லோகங்களானவை சக்ரவர்த்தியினால் இராமனுக்கு ராஜ்ய ப்ரதானம் செய்யப்பட்டமையை ஸுஸ்பஷ்டமாகக் கூறுகின்றன. இவ்வளவு மாத்திரமேயன்று. மறுபடியும் ஸுமந்த்ரனை யனுப்பி இராமபிரானை வரவழைத்து, சிறிதும் தாமத மின்றி வெகுவிரைவாக ராஜ்யாபிஷேகம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்தி யிருக்கும் விஷயம் அடுத்த நான்காவது ஸர்க்கத்தில் மிக விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. இப்படி ஒரு முறைக்கு இரு முறையாக இராமனை வரவழைத்து ராஜ்ய ப்ரதானம் பண்ணியான பின்பு இதற்கு அவிரோ

தேந கைகேயியின் வரத்தை நிறைவேற்றவேணுமே யொழிய இதை உபமர்தித்து வேறாக நடத்துவதற்கு அவகாசமுண்டாவென்று பார்க்கவேணும். கைகேயிக்கு இரண்டு வரம் கொடுத்த காலத்திலேயே வரஸ்வரூபம் நிச்சயிக்கப்பட்டிருக்குமாகில் அதற்கு ப்ராபல்யம் சொல்ல இடமுண்டாகும். ஸம்பராஸுரயுத்த காலத்தில் 'கைகேயி! உனக்கு வேண்டிய இரண்டு வரம் பெற்றுக்கொள்' என்று சக்ரவர்த்தியால் சொல்லப்பட்டது. 'அயோத்யா ராஜ்யத்தை என் மகனுக்குக் கொடுக்கவேணும்; கௌஸல்யா புத்ரனை வநவாஸி யாக்கவேணும்' என்று அப்போதே கேட்கப்பட்டிருக்குமாகில் அந்த வரப்ரார்த்தனை ப்ராபல்யம் பெற்றிருக்கும். அப்போது இராமனென்ப ஒரு மகனுமே ஜனித்தே யிருக்கவில்லை யாதலால் அங்ஙனம் கோருவதற்கு அவகாசமில்லாமலிருந்தது. இராமனுக்கு யுவராஜ்யபட்டாபிஷேகம் செய்ய முயலும்போதே செய்தி தெரிந்துகொண்டு என்மகனுக்குத் தான் ராஜ்யம் கொடுக்கவேணுமென்று (கைகேயி) கேட்டிருந்தாளாகில் அஃது ஒக்கும். இராமனுக்கு ராஜ்யம் கொடுத்துத் தீர்ந்தது; அவனும் ராஜ்யத்தைப் பெறுவதற்குரிய சடங்குகளை யநுஷ்டித்தாயிற்று. இந்நிலையில் கைகேயி வந்து என்றைக்கோ தனக்குக் கொடுக்கப்பட்டிருக்கு மிரண்டு வரங்களுக்குப் பரதாபிஷேகத்தையும் ராமவிவாஸநத்தையும் வேண்டினாளாகில் இதை நிறைவேற்ற வேண்டிய ஆவச்யகதை என்ன? அவளுடைய கோரிக்கையை ஒரு பொருளாக மதியாமல் 'கைகேயீ! நீ கோபக்ருஹத்திலேயே கிடந்து கிட' என்று சொல்லிவிட்டு எழுந்துபோய் ஸ்ரீராமபட்டாபிஷேக மஹோத்ஸவத்தைக் குறையற நிறைவேற்றி வைத்தால் இதனால் சக்ரவர்த்தியின் ஸத்யவாதித்வத்திற்கு ஏதேனும் பங்கம் விளையுமோ? ஒன்றும் விளையாது. 'பாதிராஜ்யம் இராமனாளட்டும்; பாதிராஜ்யம் பரதனாளட்டும்' என்று சொல்லலாம். மற்றும் பலவகையாகச் சொல்லலாம். இராமனுக்குக் கொடுத்து முடிந்த ராஜ்யத்தை இல்லையாக்கி அவனைக் காட்டுக்குப் போகச் செய்தது சக்ரவர்த்தியை அஸத்யவாதியாக்குமே யொழிய ஸத்ய வாதியாக்குமோ? என்று சங்கிக்க ப்ராப்தமாகிறது.

ஸ்ரீராமாயண மஹார்ணவத்தில் ஆழவிழிந்து அற்புதமான ஆராய்ச்சிகளைச் செய்து பரமார்த்தங்களை க்ரஹிக்கவல்ல மஹாமதிகள் இங்கு ஸம்ப்ரதிபந்நமான முறையிலே சங்காபரிஹாரம் செய்யக்கூடும். நமக்குத் தோன்றின வகையில் இங்குச் சில எழுதுகிறோம். பிள்ளைலோகாசார்யர் முமுக்ஷுப்படி சரமச்லோக ப்ரகரணத்தில் (91.) "**சக்ரவர்த்தியைப் போலே இழக்கைக் குறுப்பு**" என்றருளிச் செய்த விடத்து வியாக்யானத்தில் மணவாள மாமுனிகள் "முன்பே, வரப்ரதாநத்தைப் பண்ணிவைத்து இப்போதாக மறுக்க வொண்ணாதென்று ஆபாஸமான ஸத்ய தர்மத்தைப் பற்றி நின்று 'ராமோ விக்ரஹவாந் தர்ம:' என்கிற பெருமாளோடே கூடி வாழ விருந்த பேற்றை யிழந்த சக்ரவர்த்தியைப் போலே" என்றருளிச் செய்துள்ளார். இங்கு ஆபாஸமான ஸத்யதர்மமென்றதற்கு இரண்டுவகையான தாத்பர்ய முண்டு. ஸத்யஞ் சொல்லுவதென்பது தர்மமேயானாலும் ஒரு தட்டில் எம்பெருமானை வைத்து மற்றொரு தட்டில் ஸத்யத்தை வைத்துப் பார்க்கும்போது ஸத்யவசநமானது எம்பெருமானை யிழப்பதற்கு உறுப்பாமாகில் அது உண்மையான தர்மமன்று, ஆபாஸமான தர்மமே—என்பதாக ஒரு தாத்பர்யம். தசரதனுடைய ஸத்யவாதித்வம் வஸ்துஸ்திதியில் தர்மமன்று, தர்மாபாஸமே, அது அஸத்யபர்யவஸிதமே யென்பதாக மற்றொரு தாத்பர்யம். "**ஸர்வதர்மாந்**" என்பதற்கு அர்த்தம் செய்தருளும் போது "இவற்றை தர்ம மென்கிறது ப்ரமித்த அர்ஜுநன் கருத்தாலே" என்று அருளிச்செய்த கணக்கிலே தசரதசக்ரவர்த்தியை ஸத்யவாதியென்கிறது ப்ரமித்த அவன் தன்னுடைய கருத்தாலே யென்னலாம்.

கீதா சாஸ்த்ரத்தை ப்ரகாசநம் செய்வதற்கு ஸமயம் பார்த்திருந்த ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா யுத்த ஸந்நத்தனாய்ப் போர்க்களத்தில் வந்து நின்ற அர்ஜுநனை ப்ரமிக்கச் செய்தது போல, தேவகார்ய நிர்வஹணார்த்தமாக வநப்ரஸ்தாந குதூஹலியாய் நின்ற ஸ்ரீராமபகவான் தன் திருவுள்ளம் நிறைவேறுவதற்காகவே சக்ரவர்த்திக்கு அதர்மத்தில் தர்மபுத்தியையும், தர்மத்தில் அதர்ம புத்தியையும் உண்டு பண்ணினானென்று கொள்ளக் குறையில்லை.

"காசியிலே கொள்ளையடிக்க காஞ்சியிலே கன்னம் வைப்பது" என்றொரு விநோதப் பேச்சு வழங்குவதுண்டு. இந்தரீதியில் தான் புராண கதைகள் அமைகின்றன. *வேண்டித் தேவரிரக்க வந்து பிறந்ததும்* என்கிறபடியே தேவர்களின் பிரார்த்தனையை ஒரு வியாஜமாகக் கொண்டு பரமபுருஷன் இந்நிலவுலகத்திலே வந்து திருவவதரிக்கத் திருவுள்ளம் பற்றுவதற்கு நெடுநாள் முன்னமே இச்செய்திகளை நிகழச் செய்து வைக்கிறான். சம்பராஸுரயுத்தத்தில் தசரதனுக்குப் பராஜயம் விளைய ஹேதுவில்லை. அது விளையும்படிக்கும் அப்போது கைகேயி உதவி செய்யும்படிக்கும் அப்போது அவளுக்கு இரண்டு வரம் கொடுக்கும்படிக்கும் முன்னமே செய்து வைத்தது எம்பெருமான் செயலே. பரதாழ்வானை முன்னமே மாதுலக்ருஹத்துக்குப் புறப்பட்டுப் போகச் செய்ததும் அவன் செயலே. கைகேயி வரம் கேட்கும் போது பரதாழ்வான் அயோத்தியில் இருந்தானாகில் இராமனுக்கு வநவாஸம் ப்ராப்தமாக வழியிராதன்றோ. ஆகவே ஸத்யஸங்கல்பனான அவனுடைய ஸங்கல்ப மடியாக நிகழ்ந்தவற்றில் இன்றிருந்து நாம் ஆராய்ச்சி செய்வதற்கு என்ன இருக்கிறது. பாரமார்த்திக த்ருஷ்டியில் தசரதன் ஸத்யவாதியல்லனென்று கொள்வதில் குறையொன்றுமில்லை. ஆனதுபற்றியே அவனைப்பற்றி எம்பெருமானருளிச் செய்த திவ்ய ஸூக்தியொன்று ப்ரஸித்தமாக வுள்ளது—" தசரதனுக்கு நரகமே கிடைப்ராப்தம்; பெருமாளுடைய ஆந்ருசம்ஸ்யத்தாலே அவன் ஸ்வர்க்கஸ்தனானான்" என்று.

---

# 13. செல்வ நம்பி.

---

(திருப்பல்லாண்டு–11) [* அல்வழக்கொன்று மில்லா வணி கோட்டியர் கோன் அபிமான துங்கன் செல்வனைப் போலத் திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்*] இப்பாசுரத்தில் செல்வநம்பியென்கிற ஓர் உத்தம புருஷர் உபமானமாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றார். பெரியாழ்வாருடைய சரித்திரத்தில் செல்வநம்பி யென்பவருடைய ப்ரசம்ஸை வந்திருப்பது ப்ரஸித்தமானது. பாண்டிநாட்டரசனான வல்லபதேவனென்னு மரசனுக்குப் புரோஹிதராயிருந்தவர் இவர். வித்வத்ஸபை கூட்டிப் பரதத்வநிர்ணயம் செய்விக்க வேணுமென்கிற குதூஹலம் அவ்வரசனுக்கு இவருடைய ப்ரோத்ஸாஹநத்தினால் தான் உண்டாயிற்று. இவர்க்கு அல்வழக்கொன்றுமில்லா, அணிகோட்டியர்கோன், அபிமானதுங்கன்—என மூன்று விசேஷணங்கள் இடப்பட்டிருக்கின்றன. இம்மூன்றையும் பற்றி விவரணம் காட்டுகிறோம்.

1. அல்வழக்கு ஒன்றுமில்லாமையாவது—தவறுதலான உணர்ச்சி ஒன்றுமில்லாமையாகும். தேஹத்தையே ஆத்மாவென்று நினைக்கை, எம்பெருமானுக்கு அடிமையாய்ப் பரதந்

திரமான ஆத்மாவை ஸ்வதந்திரமென்று நினைக்கை, தேவதாந்தரங்களை [அதாவது, க்ஷுத்ர தெய்வங்களை] பரதத்துவமாக நினைக்கை, எம்பெருமானிடத்தில் ஐச்வரியம் ஸந்தானம் முதலிய அற்ப பலன்களை அபேக்ஷித்தல், ப்ரபத்தி நிஷ்டைக்கு மாறாகக் கருமம் முதலிய உபாயாந்தரங்களிலே கைவைத்துக் கொள்ளுகை முதலானவை அல்வழக்கெனப்படும். இவையொன்றுமில்லாதவர் என்று சொல்லிற்றாயிற்று.

2. 'அணிகோட்டியர் கோன்' என்கிற இரண்டாவது விசேஷணத்தினால் இவர் திருக்கோட்டியூரில் திருவவதரித்தவர் என்பது தெரிவிக்கப்படுகிறது. அடுத்த பிரபந்தமாகிய பெரியாழ்வார் திருமொழியில் திருக்கோட்டியூர்ப்பதிகமான *நாவகாரியஞ் சொல்லிலாதவர்* என்னுந் திருமொழியில் (4—4—8) *நளிர்ந்த சீலன் நயாசலன் அபிமானதுங்கனை நாடொறுந் தெளிந்த செல்வனைச் சேவகங்கொண்ட செங்கண்மால் திருக்கோட்டியூர்* என்றருளிச்செய்திருப்பதும் இங்கே நினைக்கத்தகும். அந்தப் பாசுரத்தில் நயாசலன், எனபதும் இங்கு 'அல்வழக்கொன்றுமில்லா' என்றதும் ஒரேகருத்தில் அமைந்தமை தென்க. திருக்கோட்டியூரில் திருவவதாரம் செய்தமையால்தான் அவர்க்கு இவ்வேற்றமுண்டாயிற்றென்று காட்டினபடி. 'அல்வழக்கொன்றுமில்லா' என்கிற விசேஷணத்தைச் செல்வநம்பியினிடத்திலே கூட்டாமல் அணிகோட்டியரிடத்திலே கூட்டுதலும் பொருந்தும். அப்போது அல்வழக்கொன்றுமில்லாமையாகிற ஏற்றம் திருக்கோட்டியூரிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களுக்குச் சொன்னபடியாகி அது செல்வநம்பிக்கும் வந்து சேரும்.

3. இனி மூன்றாவது விசேஷணம் '**அபிமானதுங்கன்**' என்பது. இப்பாசுரத்திற்போலவே மேலே குறித்த பெரியாழ்வார் திருமொழிப் பாசுரத்திலும் 'அபிமான துங்கன்' என்றவிது கூறப்பட்டிருத்தலால் செல்வநம்பிக்கு இது விருதாகக் கிடைத்த சிறப்புப் பெயர் என்று தோன்றுகின்றது. 'அபிமானத்தினால் உயர்ந்தவர்' என்பது பொருள். அபிமானமாவது * गर्वोऽभिमानोऽहङ्कारः– கர்வோபிமானோஹங்கார: * என்ற அமரகோசத்தின்படி அஹங்காரம் என்று கொள்ளலாம். அஹங்காரம் த்யாஜ்யமன்றோ வென்னில், த்யாஜ்யமான அஹங்காரம் போலவே உபாதேயமான அஹங்காரமுமுண்டு; அது ஸாத்விகாஹங்கார மெனப்படும். நம்மாழ்வார் * நீசனேன் நிறைவொன்றுமிலேன்* என்று தம்மை நைச்யபாவமே வடிவெடுத்தவராக அநுஸந்திப்பவராயிருந்தும், (திருவாய்மொழி ஆறாம்பத்து நான்காந்திருவாய்மொழியான) * குரவையாய்ச்சியரோடு கோத்ததும்* என்னும் பதிகத்தில் பாட்டுத் தோறும் ஈற்றடிகளில் * என்ன குறை நமக்கே * * எனக்கெவ்வுலகம் நிகரே * எனக்கென்னினி வேண்டுவதே* எனக்கினியார் நிகர் நீணிலத்தே * எனக்கினி யென்ன கலக்கமுண்டே * எனக்கார் பிறர் நாயகரே* என்றிப்படி செருக்குத் தோற்ற அருளிச்செய்யக் காண்கின்றோம். தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலை முதற்பாட்டில் * காவலிற் புலனை வைத்துக் கலிதன்னைக் கடக்கப் பாய்ந்து நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள்மீதே .....நின்றுமங்கற்ற ஆவலிப்புடைமை கண்டாய் அரங்கமாநகருளானே!" என்னக் கண்டோம். எம்பெருமானுடைய வடிவழகை யநுபவித்துப் பேசினார் ஒருவர் [*பற்பமெனத்திகழ்....என்னுஞ்செய்யுளில்] "இல்லை யெனக் கெதிரில்லை யெனக்கெதிரில்லை யெனக் கெதிரே" என்றார். திருவரங்கத்தமுதனாரும் நூற்றந்தாதியில் "எனக்காரும் நிகரில்லையே" என்றார். இங்ஙனே அபரிமிதமாகவுண்டு. இப்பாசுரங்களெல்லாம் அஹங்காரம் தலையெடுத்துச் சொல்லுவனவாக இருந்தாலும் இது த்யாஜ்யமான அஹங்கார கோடியில் சேர்ந்ததன்று.

திரமான ஆத்மாவை ஸ்வதந்திரமென்று நினைக்கை, தேவதாந்தரங்களை [அதாவது, க்ஷுத்ர தெய்வங்களை] ப்பரதத்துவமாக நினைக்கை, எம்பெருமானிடத்தில் ஐச்வரியம் ஸந்தானம் முதலிய அற்ப பலன்களையபேக்ஷித்தல், ப்ரபத்தி நிஷ்டைக்கு மாறாகக் கருமம் முதலிய உபாயாந்தரங்களிலே ஊற்றங் கொள்ளுகை முதலானவை அல்வழக்கெனப்படும். இவையொன்றுமில்லாதவர் என்று சொல்லிற்றாயிற்று.



2. 'அணிகோட்டியர் கோன்' என்கிற இரண்டாவது விசேஷணத்தினால் இவர் திருக்கோட்டியூரில் திருவவதரித்தவர் என்பது தெரிவிக்கப்படுகிறது. அடுத்த பிரபந்தமாகிய பெரியாழ்வார் திருமொழியில் திருக்கோட்டியூர்ப்பதிகமான *நாவகாரியஞ் சொல்லிலாதவர்* என்னுந் திருமொழியில் (4—4—8) *நளிர்ந்த சீலன் நயாசலன் அபிமானதுங்கனை நாடொறுந் தெளிந்த செல்வனைச் சேவகங்கொண்ட செங்கண்மால் திருக்கோட்டியூர்* என்றருளிச் செய்திருப்பதும் இங்கே நினைக்கத் தகும். அந்தப் பாசுரத்தில் நயாசலன், என்பதும் இங்கு 'அல்வழக்கொன்றுமில்லா' என்றதும் ஒரேகருத்தில் அமைந்தவென்க. திருக்கோட்டியூரில் திருவவதாரம் செய்தமையால்தான் அவர்க்கு இவ்வேற்றமுண்டாயிற்றென்று காட்டினபடி. 'அல்வழக்கொன்றுமில்லா' என்கிற விசேஷணத்தைச் செல்வநம்பியினிடத்திலே கூட்டாமல் அணிகோட்டியரிடத்திலே கூட்டுதலும் பொருந்தும். அப்போது அல்வழக்கொன்றுமில்லாமையாகிற ஏற்றம் திருக்கோட்டியூரிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களுக்குச் சொன்னபடியாகி அது செல்வநம்பிக்கும் வந்து சேரும்.



3. இனி மூன்றாவது விசேஷணம் '**அபிமானதுங்கன்**' என்பது. இப்பாசுரத்திற்போலவே மேலே குறித்த பெரியாழ்வார் திருமொழிப் பாசுரத்திலும் 'அபிமானதுங்கன்' என்றவிது கூறப்பட்டிருத்தலால் செல்வநம்பிக்கு இது விருதாகக் கிடைத்த சிறப்புப் பெயர் என்று தோன்றநின்றது. 'அபிமானத்தினால் உயர்ந்தவர்' என்பது பொருள். அபிமானமாவது * गर्वोऽभिमानोऽहङ्कारः-- கர்வோபிமானோஹங்கார:* என்ற அமரகோசத்தின்படி அஹங்காரம் என்று கொள்ளலாம். அஹங்காரம் த்யாஜ்யமன்றோ வென்னில், த்யாஜ்யமான அஹங்காரம் போலவே உபாதேயமான அஹங்காரமுமுண்டு; அது ஸாத்விகாஹங்கார மெனப்படும். நம்மாழ்வார் *நீசனேன் நிறையொன்றுமிலேன்* என்று தம்மை நைச்சியமே வடிவெடுத்தவராக அநுஸந்திப்பவராயிருந்தும், (திருவாய்மொழி ஆறாம்பத்து நான்காந்திருவாய்மொழியான) *குரவையாய்ச்சியரோடு கோத்ததும்* என்னும் பதிகத்தில் பாட்டுத் தோறும் ஈற்றடிகளில் *என்ன குறை நமக்கே* *எனக்கெவ்வுலகம் நிகரே* *எனக்கென்னினி வேண்டுவதே* எனக்கினியார் நிகர் நீணிலத்தே* எனக்கினியென்ன கலக்கமுண்டே* எனக்கார் பிறர் நாயகரே* என்றிப்படி செருக்குத் தோற்றவருளிச்செய்யக் காணுகின்றோம். தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலை முதற்பாட்டிலேயே "ந... ட்டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகண்மீதே .....நின்னாமங்கற்ற ஆவலிப்புடைமை கண்டாயரங்கமாநகருளானே!" என்னக் கண்டோம். எம்பெருமானுருடைய வடிவழகை யநுபவித்துப் பேசின எம்பார் [*பற்பமெனத்திகழ்....என்னுஞ்செய்யுளில்] "இல்லையெனக் கெதிரில்லையெனக்கெதிரில்லையெனக் கெதிரே" என்றார். திருவரங்கத்தமுதனாரும் நூற்றந்தாதியில் "எனக்காரும் நிகரில்லையே" என்றார். இங்ஙனே அபரிமிதமாகவுண்டு. இப்பாசுரங்களெல்லாம் அஹங்காரம் தலையெடுத்துச் சொல்லுவனவாக இருந்தாலும் இது த்யாஜ்யமான அஹங்கார கோடியில் சேர்ந்ததன்று.

அன்றிக்கே, அபிமானம் என்கிற சொல்லானது பாகவதாபிமாநம், ஆசார்யாபிமாநம் என்றவிடங்களிற்போலப் பொருள்படுமானல் பகவானாலும் பாகவதோத்தமர்களாலும் அபிமானிக்கப் பெறுகையைச் சொல்லிற்றாகக் கடவது; அவர்களால் நம்முடையவனென்று அபிமானிக்கப்படுமவர்களில் சிறந்தவரென்றதாயிற்று. இப்படிப்பட்ட உத்தமாதிகாரியை இங்கு உபமாநமாக எடுத்துக் கூறியுள்ளார்..........

## 14. சீதக்கடலுள்ளமுதன்னதேவகி.

பெரியாழ்வார் திருமொழி (1—2—1.) * சீதக்கடற் பாசுரத்தில் தேவகிப்பிராட்டிக்கு சீதக்கடலுள்ளமுதை உவமையாகக் கூறியிருக்கின்றார். 'சீதக்கடலுள்ளமுது' என்ற சொல்தொடரால் பெரியபிராட்டியாரைச் சொல்லுகிறது. தேவகியார் பெரியபிராட்டியாரை யொத்தவர் என்றதாயிற்று. பகவானுக்குத் தாயாக அமைந்த தேவகியை திவ்யமஹிஷியான பெரியபிராட்டியாரோடொக்கச் சொல்லலாகுமோ வென்று சங்கிக்கவேண்டா; தாமரையை முகத்திற்கு உவமையாகக் கூறினல் தாமரைபோல் முகமும் சேற்றில் முளைத்ததாகவேணு மென்பதுண்டோ? உலகில் ஸாம்யமென்பது ஸகலாம்சங்களாலும் வாய்ப்பதுமில்லை, விவக்ஷிதமாவதுமில்லை. முக்கியமான சில அம்சங்களினால்தான் ஸாம்யம் சொல்லுவது. இங்கும் அவ்வண்ணமாகவே ஸாம்யம் கருதப்படவேண்டும். ஸ்ரீகுணரத்நகோசத்தில் * अङ्गं ते मृदुशीतमुग्धमधुरोदारैर्गुणैः ..... அங்கம் தே ம்ருது சீத முக்தமதுரோதாரைர் குணை: * என்கிற (36) ச்லோகத்தில் பெரிய பிராட்டியார்க்குச் சொல்லப்படுகிற தன்மைகள் தேவகிப்பிராட்டிக்கும் குறையற்றிருக்கின்றன. 'அலர்மகள்' எனப் பெயர் படைத்த பிராட்டி எம்பெருமான் சீதக்கடலைக் கடைந்தகாலத்தில் அக்கடலினின்றுந் தோன்றினவளாகையாலே அப்போது கூடப் பிறந்த சந்திரன் கற்பகம் அம்ருதம் ஸுரை முதலான வஸ்துக்களிடமிருந்து அவற்றின் குணங்களாகிய மென்மை குளிர்ச்சி மௌக்த்யம் மாதுர்யம் ஔதார்யம் ஆகியவற்றை ஸாரமாக வெடுத்துப் பிராட்டியின் திருமேனியைப் பாற்கடலரசன் படைத்தான்கொல்! என்கிற உல்லேகம் மேலே யெடுத்துக்காட்டின ஸ்ரீ குணரத்நகோச ஸ்ரீ ஸூக்தியில் அமைந்துள்ளது. அப்படிப்பட்ட திருமேனியமைப்பிலும் மற்றுமுள்ள ஸௌபாக்யாதிசயங்களிலும் தேவகிப் பிராட்டிக்குத் திருமகளாரோடு ஸாம்யம் குறையற்றது. இப்பெரியாழ்வார் தாமே இப்பதிகந்தன்னிலேயே (17) * பருவம் நிரம்பாமே * என்கிற பாசுரத்தில் "திருவின் வடிவொக்கும் தேவகி" என்று ஸ்பஷ்டமாகவே அருளிச்செய்திருப்பதும் இங்கு நோக்கத்தக்கது. திருமங்கையாழ்வாரும் பெரிய திருமொழியில் திருக்குறுங்குடிப் பதிகத்தில் (9—6—7) "சொல்லில் திருவேயனையார்" என்று அத்திருப்பதியிலுள்ள மாதர்களைப் பெரிய பிராட்டியாரோடொத்தவர்களாகக் கூறியுள்ளாரென்பதும் இங்கு நினைக்கத்தக்கது.

பெரிய பிராட்டியார்க்கு வாசகமான சொற்கள் பல விருக்க, அவற்றைவிட்டு இங்கு 'சீதக்கடலுள்ளமுது' என்ற சொல்லையிட்டுச் சொன்னது, தேவர்களுக்கு அமுதம் கொடுக்கக் கடலைக் கடைந்ததாக இதிஹாஸமிருந்தாலும், அது வ்யாஜமாத்திரம்; புறவமுதாகிய உப்புச்சாற்றைத் தேவர்களுக்குக் கொடுத்துவிட்டு உள்ளமுதாகிய ஸ்ரீ மஹாலக்ஷ்மியைத்தான் ஸ்வீகரித்தருளவதற்காகவே கடல் கடைந்ததென்கிற விசேஷத்தைக் குறிப்பதற்காகவாம். இவ்விசே

ஷப் பொருளைத் திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (6—1—2.) * விண்ணவரமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானே! * என்ற பாசுரத்தினால் காட்டியருளினார். பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதகத்தில் "उन्मूल्याहरमन्दराद्रिमहिना – உந்மூல்யாஹர மந்தராத்ரிமஹிநா" என்னும் ச்லோகத்தில் "फलेग्रहिर्हि कमलालाभेन सर्वः श्रमः – பலேக்ரஹிர் ஹி கமலாலாபேந ஸர்வ: ச்ரம:" என்பதனால் இதையடியொற்றிப் பேசியருளினார்.

—•—

# 15. ஆழ்வார்களின் மஹோபகாரம்.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் முந்துற முன்னம் அவதரித்த பொய்கையார் முதலான ஆழ்வார்களும், பிறகு அவதரித்த ஆசாரியர்களும் செய்தருளின மஹோபகாரங்களைப் பற்றி இங்குப் பேசுகிறோம். அவரவர்கள் ஜீவித்திருக்கும் நாளில் தம்மையடிபணிந்தவர்களுக்கு உஜ்ஜீவநோபாயமாக உபதேசங்களைச் செய்வது உபகாரமெனப்படும்; பிற்காலத்தவர்களும் நெடுநாள் வாழும்படி நூல்களை இயற்றி வைப்பது மஹோபகாரமெனப்படும். இம்மஹோபகாரத்தைப் பற்றியே இங்கு விவரிக்கப் புகுகிறோம். ஆழ்வார்களின் மஹோபகாரம் உலகமறிந்ததேயாயினும் அறியாதார் சிலருமறிந்துகொள்ள இங்குத் தெரிவிக்கிறோம்.

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்னுமிவ்வாழ்வார்கள் மூவரும் முதலாழ்வார்களென வழங்கப்படுவர்கள். இம்மூவரும் நூறு நூறு பாசுரங்கள் பணித்தார்கள். அம்மூன்று திவ்யப்ரபந்தங்களும் முறையே முதல் திருவந்தாதி இரண்டாந்திருவந்தாதி, மூன்றாந் திருவந்தாதி எனப் பிரசித்தி பெற்றன. இவை இயற்பா ஆயிரத்தில் 1, 2, 3 ஆம் பிரபந்தங்களாகப் பரிகணிக்கப் பட்டவை. நம் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் இவையே முதன் முதலவதரித்த நற்றமிழ் நூல்களாம். உபதேசரத்தினமாலையில் * மற்றுள்ள வாழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து, நற்றமிழால் நூல் செய்து நாட்டை யுய்த்த- பெற்றிமையோர், என்று முதலாழ்வார்களென்னும் பெயரிவர்க்கு, நின்றதுலகத்தே நிகழ்ந்து * என்று மணவாளமாமுனிகளருளிச் செய்த பாசுரம் இங்கே அநுஸந்திக்கத் தக்கது.

மேலே சொன்ன முதலாழ்வார்களுக்கு அடுத்தவரும், பேயாழ்வாருடைய திருவடிகளைப் பணிந்து உய்ந்தவருமான திருமழிசையாழ்வார் (96 பாசுரங்கள் கொண்ட) நான்முகன் திருவந்தாதியும், (120 பாசுரங்கள் கொண்ட) திருச்சந்த விருத்தமும் ஆகிய இரண்டு திவ்யப் பிரபந்தங்களை யருளிச் செய்தார். இவற்றுள் முதற் பிரபந்தமானது "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று தொடங்குவதனால் நான்முகன் திருவந்தாதி யெனப் பெயர் பெற்றது. இஃது இயற்பா ஆயிரத்தில் நான்காவது திவ்யப்ரபந்தமாகவுள்ளது. திருச்சந்த விருத்தமென்னும் மற்றொரு பிரபந்தம் முதலாயிரத்தில் ஆறுவது திவ்யப்ரபந்தமாகவுள்ளது. இவ்வாழ்வாரைத் திருமழிசைப் பிரானென்றும் வழங்குவர்; ஆசார்ய ஹ்ருதய திவ்ய சாஸ்த்ரத்தில் இவ்வாழ்வார்க்கு 'உறையிலிடாதவர்' என்கிற விருது அளிக்கப்பட்டுள்ளது.

கண்டனம் செய்பவர்கள் கத்தியை உறையிலிடாமல் கண்டனமே தொழிலாயிருப்பதுபோல இவ்வாழ்வார் இதர தெய்வங்களுக்குப் பிறர் சொல்லும் பரத்வத்தைக் கண்டிப்பதிலேயே நோக்குடையவர் என்பது கருத்து. எம்பெருமானுடைய பரத்வத்தைத் தம்முடைய திவ்யப்பிரபந்தங்களில் ஆதிநடுவந்திகளில் நன்ருக ஸ்தாபித்தவரென்றபடி.

திருமழிசையாழ்வார்க்கு அடுத்தவர் நம்மாழ்வார். இவரே ஆழ்வார்களுள் தலைமை ஸ்தானம் பெற்றிருப்பவர். ப்ரபந்நஜநகூடஸ்தரென்று சிறப்பித்துக் கூறப்படுபவர். இவர் நான்கு வேதங்களின் ஸாரமாக நான்கு திவ்யப்ரபந்தங்களையருளிச் செய்தவர். அவை முறையே (100 பாசுரங்கொண்ட) திருவிருத்தமென்றும், (7 பாசுரங்கொண்ட) திருவாசிரியமென்றும், (87 பாசுரங்கொண்ட) பெரியதிருவந்தாதியென்றும், (1102 பாசுரங்கொண்ட) திருவாய்மொழி யென்றும் வழங்கப் பெறும். "மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர் கோன் ஆறங்கங்கூறவதரித்த" என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரப்படியே ஆறங்கமாகத் திருமங்கையாழ்வாருளிச்செய்த ஆறு பிரபந்தங்களுக்கு நம்மாழ்வாருடைய இந்நான்கு திவ்யப்ரபந்தங்களும் அங்கிகளாம். இவற்றுள் முந்தின மூன்று பிரபந்தங்களும் இயற்பா ஆயிரத்தில் 5, 6, 7 ஆம் பிரபந்தங்களாம். திருவாய்மொழியானது நான்காவதாயிரமாம்.

நம்மாழ்வார் திருவடிகளில் "தேவுமற்றறியேன்" என்று ஆச்ரயித்திருந்த ப்ராம்மணோத்தமரான மதுரகவிகளும் ஆழ்வார்கள் கோஷ்டியில் சேர்ந்தவராயினர். இவர் தம்முடைய திடமான அத்யவஸாயத்தின்படி எம்பெருமானைப் பாடாது நம்மாழ்வாரொருவரையே நோக்கிப் பதிகம் பாடினர். அப்பிரபந்தம் கண்ணிநுண் சிறுத்தாம்பு என்பதாம். அது பகவத்விஷயமல்லாவிடினும் பகவத்விஷயங்களான நாலாயிர திவ்யப்ரபந்தங்களினிடையே பரிகணிக்கப்பட்டதாயிற்று. "வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம் போல், சீர்த்த மதுரகவி செய்கலையை—ஆர்த்தபுகழாரியர்கள் தாங்கள் அருளிச் செயல் நடுவே, சேர்வித்தார் தாற்பரியந் தேர்ந்து" என்ற உபதேச ரத்தினமாலைப் பாசுரம் இங்கு நோக்கத்தக்கது. இது முதலாயிரத்தில் சரமப் பிரபந்தமாகவுள்ளது.

நம்மாழ்வார்க்கு அடுத்தவர் குலசேகராழ்வார். இவர் (105 பாசுரங்கொண்ட) பெருமாள் திருமொழி யருளிச் செய்தார். அது முதலாயிரத்தில் ஐந்தாவது பிரபந்தமாகவுள்ளது. இவ்வாழ்வார்க்குக் குலசேகரப் பெருமாளென்றும் திருநாமமுண்டாதலால் அதை மூலமாகக் கொண்டே இவருடைய பிரபந்தம் பெருமாள் திருமொழியென வழங்கப் பெற்றது. இவ்வாழ்வார் வட மொழியில் முகுந்தமாலை யென்று ப்ரஸித்தமாய்ப் பரம மதுரமான ஸ்துதியை யருளிச் செய்தாரென்றுஞ் சொல்லுவர்கள். அஃது இவரருளிச் செய்ததன்று; இவரது மரபில் தோன்றியவரும் இவருடைய திருநாமத்தையே கொண்டவருமான மற்றொரு பரமபக்தர் பணித்ததென்றும் சொல்லுவர்கள்.

குலசேகராழ்வார்க்கு அடுத்தவர் பெரியாழ்வார். இவர்க்குப் பட்டர் பிரானென்றும், பட்டநாதரென்றும், விஷ்ணுசித்தரென்றும், புதுவையர் கோனென்

றும் மறு பெயர்களுமுண்டு. இவரே பாண்டிய ராஜ ஸதஸ்ஸில் பரதத்வநிர்ணயம் பண்ணிக் கிழியறுத்துப் பெற்ற பேராசிரியர். (12 பாசுரங்கள் கொண்ட) திருப்பல்லாண்டும், (473 பாசுரங்கள் கொண்ட) பெரியாழ்வார் திருமொழியும் இவரருளிச் செய்தவை. இவை முதலாயிரத்தின் 1, 2 பிரபந்தங்களாம். "கோதிலவா மாழ்வார்கள் கூறுகலைக் கெல்லாம், ஆதி திருப்பல்லாண்டானதுவும், வேதத்துக்கு ஓமென்னுமது போலுள்ளதுக் கெல்லாஞ் சுருக்காய்த் தான் மங்கலமாதலால்." என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரம் இங்கே அநுஸந்தேயம்.

"பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண் பிள்ளை வாழியே" என்கிறபடியே பெரியாழ்வார் திருமகளாரான ஆண்டாள் (30 பாசுரங்கள் கொண்ட) திருப்பாவையும், (143 பாசுரங்கள் கொண்ட) நாச்சியார் திருமொழியும் அருளிச் செய்தாள். அவை முதலாயிரத்தில் 3, 4 ஆம் பிரபந்தங்களாக வுள்ளன. ஆண்டாள் பிராட்டிமார் கோஷ்டியைச் சேர்ந்தவளேயாயினும், திவ்யப்ரபந்தங்களருளிச் செய்த காரணத்தினால் ஆழ்வார்கள் கோஷ்டியிலும் அந்வயம் பெற்றவளாவள்; ஸ்ரீ பெரும்பூதூரில் நடைபெறும் அத்யயநோத்ஸவத்தில் ஆழ்வார்கள் கோஷ்டியில் ஆண்டாளும் திகழ்வது ப்ரஸித்தம். இங்ஙனே மற்றுஞ் சில திவ்யதேசங்களிலுமுண்டென்பர். ஆண்டாளுக்கு சூடிக்கொடுத்த நாச்சியார், கோதை என்னுந் திருநாமங்களுமுண்டு.

பெரியாழ்வார்க்கு அடுத்தவரான தொண்டரடிப்பொடியாழ்வார் (45 பாசுரங் கொண்ட) திருமாலையும் (10 பாசுரம் கொண்ட) திருப்பள்ளியெழுச்சியும் அருளிச் செய்தார். "திருமாலை யறியாதவன் திருமாலையறியான்" (அல்லது) 'பெருமாளை யறியான்' என வழங்கும் பழமொழியினால் திருமாலையின் ஏற்றம் அறியத்தக்கது. இவ்விரண்டு பிரபந்தங்களும் முதலாயிரத்தில் 7, 8-ஆம் பிரபந்தங்களாகவுள்ளன.

தொண்டரடிப்பொடியாழ்வார்க்கு அடுத்தவரான திருப்பாணாழ்வார் (10 பாசுரங்கொண்ட) அமலனாதிபிரானென்னும் திவ்ய ப்ரபந்த மருளிச் செய்தார். ஆழ்வார்களுள் இவரே மிகக் குறைந்த பாசுரமருளிச் செய்தவர்; ஆயினும் இவரது திவ்யப்பிரபந்தத்திற்குள்ள ஏற்றம் மற்றெந்த பிரபந்தத்திற்கு மில்லை. • காண்பனவு முரைப்பனவும் மற்றொன்றின்றிக் கண்ணனையே கண்டுரைத்த கடியகாதல், பாண்பெருமாள் பாடியதோர் பாடல்பத்தும் பழமறையின் பொருளென்று பரவுமின்கள் • என்ற தூப்புற்பிள்ளை பாசுரத்தினாலும் அவ்வேற்றம் அறியத்தக்கது.

திருப்பாணாழ்வார்க்கு அடுத்தவரான திருமங்கையாழ்வார், நம்மாழ்வாரருளிய நால்வேதஸாரமான நான்கு திவ்யப்ரபந்தங்களுக்கும் ஆறங்கம் போன்ற ஆறு திவ்யப்ரபந்தங்களை யருளிச்செய்தார். அவையாவன: (1084 பாசுரங்கொண்ட) பெரியதிருமொழி, (20 பாசுரங்கொண்ட) திருக்குறுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரியதிருமடல், (30 பாசுரங்கொண்ட) திருநெடுந்தாண்டகம்—என்பனவாம். இவற்றுள், 1, 2, 6-ஆம் பிரபந்தங்கள் இரண்டாவதாயிரமாக வகுக்கப்பட்டவை. 3, 4, 5 ஆம் பிரபந்தங்கள் இயற்பா ஆயிரத்தில் 8, 9, 10 பிரபந்தங்களாக அமைந்தவை. இவ்வாழ்வார்க்கு, கலியன், கலிகன்றி, பரகா

லன், திருமங்கைமன்னன், குறையல்பிரான் என்பவை முதலான திருநாமங்களு முள்ளன.

ஆழ்வார்களினுடைய திவ்யப்ரபந்தங்கள் இவ்வளவே. மதுரகவியாழ்வாரையும் ஆண்டாளையும் சேர்த்துக் கணக்கிட்டால் ஆழ்வார்கள் பன்னிருவர். அவர்களை விட்டுக் கணக்கிட்டால் ஆழ்வார்கள் பதின்மர். பிறகு ஆசார்யஸார்வபௌமரான எம்பெருமானாருடைய காலத்தில் தோன்றியிருந்த திருவரங்கத்தமுதனாரென்னும் பரமபக்தர் ஸ்வாசார்யரான கூரத்தாழ்வானுடைய முகோல்லாஸத்தின் பொருட்டு எம்பெருமானார் துதியாக (108 பாசுரங்கொண்ட) இராமானுசநூற்றந்தாதியை யருளிச்செய்தார். இதற்கு ப்ரபந்நகாயத்ரி யென்பது ஸம்ப்ரதாய வ்ருத்தர்களின் வ்யவஹாரம். நம்மாழ்வார் விஷயமாக மதுரகவிகள் அருளிச்செய்த கண்ணிநுண்சிறுத்தாம்பு போலவே இப்ப்ரபந்தமும் பூருவர்களால் நாலாயிர திவ்யப்ரபந்தமாலையில் சேர்க்கப்பட்டதாயிற்று. திருக்கார்த்திகைக்குப் பின்பு திவ்யப்ரபந்தங்களுக்குக் கொள்ளும் அநத்யயநக்ரமம் இவ்விரண்டு ப்ரபந்தங்களுக்குமொக்கும். இதனால் இவற்றுக்கு ஆழ்வாரருளிச்செயல்களோடு ஸர்வாத்மநா ஸாம்யம் பூர்வாசார்யஸம்மதமென்று தேறிநிற்கும்.

மணவாளமாமுனிகள் காலம் வரையில் அநத்யயநகாலத்தில் திவ்யப்ரபந்தத் தனியன்களே ஸேவிக்கப்பட்டுவந்தன. சிஷ்யப்ரார்த்தனையாலும் பகவந்நியமனத்தாலும் மணவாளமாமுனிகள் உபதேசரத்தினமாலையும் திருவாய்மொழி நூற்றந்தாதியும் அருளிச்செய்ய, அவை அநத்யயநகாலத்திற்கும் மற்றும் விசேஷ திருநக்ஷத்ரோத்ஸவாதிகளுக்கும் அந்நாள் தொடங்கி அநுஸந்தேயமாகக் கொள்ளப்பட்டன. இவையும் திவ்யப்ரபந்தங்களோடொக்க பரிகணிதங்களாயின.

[முக்கியமானவொரு குறிப்பு—மேலே குறித்த ஸகல திவ்யப்ரபந்தங்களுக்கும் எளிய தெளிய நடையில் அடியேனால் எழுதப்பட்ட திவ்யார்த்ததீபிகையுரை பக்த பாகவத பண்டிதோத்தமர்களால் அநுபவிக்கத்தக்கது. அந்த தீபிகையில், மூலம் பதவுரை பொழிப்புரை விசேஷவுரை ஸ்வாபதேசார்த்தம் எல்லாம் அடங்கியுள்ளன. இவற்றைப் பூர்த்தியாக வாங்கிக்கொள்பவர்களுக்கு விலை 50 ரூ. மட்டுமே. தனித்தனி ப்ரபந்தங்களாகவும் கிடைக்கும். இதைப்பற்றி "க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்" என்கிற விலாசத்திற்கெழுதி விரிவான கியாடலாக் தருவித்துக் காண்க. இனிமேலே விவரிக்கப்படும் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கும் வியாக்யானங்கள் கிடைக்கும்.]

## 16. ஆசார்யர்களின் மஹோபகாரம்.

ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி மணவாளமாமுனிகளீறாகவுள்ள பூர்வாசார்யர்கள் செய்தருளின மஹோபகாரங்களை இனி விவரிக்கின்றோம் :—

நம்முடைய ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் ஸ்ரீமந்நாதமுனிகளே முதன்மையான ஆசார்யராவர். இவர்க்கு நம்மாழ்வாரே யோகதசையில் ஸாக்ஷாத்தாக ஸேவை

லை நிந்து ஸகலார்த்தங்களையும் உபதேசித்தருளினார். அந்த நம்மாழ்வாரைப்பற்றி ஆழ்வார்களின் கோஷ்டியில் பேசியானபடியால் இப்போது ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கிப் பேசவேண்டும். இப்பேராசிரியர் ந்யாயதத்வம் என்றொரு மஹாக்ரந்தமருளிச் செய்திருந்ததாகத் தெரியவருகிறது. ஆனால் அது நெடுநாளைக்கு முன்னமே லுப்தமாய் விட்டமையால் நம்போல்வார்க்கு அதை ஸேவிக்க பாக்யமில்லையாயிற்று. ஸ்ரீதேசிகன் பணித்த குருபரம்பராஸாரத்தில் "இவ்வாசார்யர்களில் ஈச்வரமுனிகள் பிள்ளை நாதமுனிகள்; இவர் ந்யாயதத்வமென்கிற சாஸ்த்ரமும் யோகரஹஸ்யமுமருளிச்செய்தார்" என்றிருக்கையாலே யோகரஹஸ்யமென்றொரு க்ரந்தமுமருளிச் செய்திருந்ததாக அறியலாகிறது. ந்யாயதத்வமென்னும் மஹாக்ரந்தத்தின் மங்களச்லோகம் மாத்திரம் ஸ்ரீபாஷ்யத்தில் தத்வத்ரயசிந்தநாதிகாரத்திலும் த்வயாதிகாரத்திலும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது: அது வருமாறு—"यो वेत्ति युगपत्सर्वं प्रत्यक्षेण सदा स्वतः। तं प्रणम्य हरिं शास्त्रं न्यायतत्त्वं प्रचक्ष्महे - யோ வேத்தி யுகபத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வத:; தம் ப்ரணம்ய ஹரிம் சாஸ்த்ரம் ந்யாயதத்வம் ப்ரசக்ஷ்மஹே" என்று இவ்விரண்டு க்ரந்தங்களும் நமக்கு துர்லபம்.

ஸ்ரீமந்நாதமுனிகளுக்குப் பிறகு உய்யக்கொண்டார் மணக்கால்நம்பி யென்று ஆசிரியர் இருவர் இருந்தார்கள். அவர்கள் பணித்த க்ரந்தமாக ஒன்றும் தெரியவரவில்லை; ஸ்ரீமந்நாதமுனிகளுக்குப் பின் ஆளவந்தாரே [ஸ்ரீயாமுநாசார்யர்] க்ரந்தமருளிச்செய்தவர். முன்னே ப்ரஸ்தாவித்த குருபரம்பராஸாரத்தில்—'நாதமுனிகள் பிள்ளை ஈச்வரபட்டாழ்வான்; ஈச்வரபட்டாழ்வான் பிள்ளை ஆளவந்தார். இவரருளிச் செய்த ப்ரபந்தங்கள் - ஆகமப்ராமாண்யமும் புருஷநிர்ணயமும், ஆத்மஸித்தி ஈச்வரஸித்தி ஸம்வித்ஸித்தியென்கிற ஸித்தித்ரயமும், ஸ்ரீகீதார்த்தஸங்க்ரஹமும் ஸ்தோத்ரமும் சதுச்ச்லோகியும் ஆக எட்டு" என்றிருக்கையாலே மேலே குறித்த க்ரந்தங்களை ஆளவந்தாரருளிச்செய்தமையாம். இவற்றில் புருஷநிர்ணயமென்கிற க்ரந்தம் இப்போது துர்லபம், வெகுகாலத்திற்கு முன்னமே லுப்தமென்கிறார்கள். ஆகமப்ராமாண்யமும் ஸித்தித்ரயமும் கீதார்த்தஸங்க்ரஹமும் ஸ்தோத்ரரத்நமும் சதுச்ச்லோகியுமே இப்போது பிரசாரத்திலிருப்பவை. முந்தின இரண்டு திவ்யக்ரந்தங்களுக்குப் பூர்வர்களின் வியாக்யானம் அவதரிக்கவில்லை. பிந்தின மூன்று க்ரந்தங்களுக்கு உண்டு.

ஆளவந்தார் திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தவர்களில் ஓராசார்யரும் ஒரு க்ரந்தமும் அருளிச்செய்ததாக இல்லை. எம்பெருமானாருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளைப்பற்றியே இனி ப்ரஸ்தாவிக்க ப்ராப்தமாகிறது. ஸ்வாமியின் திவ்யக்ரந்தங்கள் நவரத்னமென்னலாம்படி ஒன்பதாக அமைந்திருக்கின்றன. கீதாபாஷ்யம், ஸ்ரீபாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்தஸாரம், வேதார்த்தஸங்க்ரஹம், சரணாகதிகத்யம், ஸ்ரீரங்ககத்யம், ஸ்ரீவைகுண்டகத்யம், நித்யம்—என்பன. இவற்றுள் சரணாகதிகத்யம் முதலிய மூன்று கத்யங்களை ஒன்றுசேர்த்து கத்யத்ரயமென்று ஓரே க்ரந்தமாக வழங்குவர்களாயினும் அவை தனித்தனி க்ரந்தங்களேயாம். குருபரம்பராஸாரத்தில் அப்படியே கணக்கிடப்பட்டிருப்பது காணலாம். இந்த ஒன்பது க்ரந்தங்களுள் வேதாந்ததீபம் வேதாந்தஸாரம் நித்யம் ஆகிய மூன்று க்ரந்தங்களுக்குத் தவிர மற்ற

வற்றுக்குப் பூருவர்களின் வியாக்கியானங்கள் அவதரித்திருக்கின்றன. கீதாபாஷ்யத்திற்கு தேசிகனருளிய தாத்பர்யசந்த்ரிகை, ஸ்ரீபாஷ்யத்திற்கு ச்ருதப்ரகாசிகையும், ச்ருதப்ரதீபிகையும். [ச்ருதப்ரதீபிகையென்பதும் ச்ருதப்ரகாசிகாசார்யரே அருளிச்செய்த ஸங்க்ரஹவ்யாக்கியானம். இது சதுஸ்ஸூத்ரிவரையிலுமே தெலுங்கு லிபியில் நெடுநாளைக்குமுன் அச்சேறியிருக்கிறது.] ஸ்ரீபாஷ்யத்திற்கு ச்ருதப்ரகாசிகைக்கும் முன்னே வியாக்கியானமவதரித்திருந்ததாக ச்ருதப்ரகாசிகையினால் தெரிய வருகிறது. ஜிஜ்ஞாஸாதிகரணத்தில் " द्विचन्द्रज्ञानादावपि अङ्गुल्यवष्टम्भतिमिरादिभिः " இத்யாதியருளிச்செய்துகொண்டுபோகையில் "अथवा किमनेन बहुनोपपादनप्रकारेण" இத்யாதி வாக்யபாடம் உண்டா இல்லையா என்பதை விமர்சியாநின்ற ச்ருதப்ரகாசிகாசார்யர் "अथवा किमनेनेत्यादिपाठो बहुषु कोशेषु दृश्यते" என்று ஸாதித்துவிட்டு உடனே "व्याख्यातृभिः व्याख्यातश्च" என்று ஸாதித்திருக்கிறார். இதனால் தமக்கு முன்னே ஸ்ரீபாஷ்யத்தை வியாக்கியானித்தவர்கள் சிலருண்டென்று ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டதாகிறது. ச்ருதப்ரகாசிகை அவதரித்தபிறகு அது மறைந்திருக்கக்கூடும். வேதார்த்தஸங்க்ரஹத்திற்கு ச்ருதப்ரகாசிகாசார்யரே தாத்பர்யதீபிகை யென்கிற வியாக்கியான மருளிச் செய்திருப்பது ப்ரசாரத்திலுள்ளது. கத்யத்ரயத்தில் சரணாகதிகத்யத்திற்கு மாத்திரம் ச்ருதப்ரகாசிகாசார்யருடைய வியாக்கியான முள்ளது. மூன்று கத்யங்களுக்கும் பெரியவாச்சான் பிள்ளையின் மணிப்ரவாள வியாக்கியானமும் தேசிகனுடைய ஸம்ஸ்க்ருத வியாக்கியானமுமுள்ளன. மணிப்ரவாள வியாக்கியான மருளிச்செய்தவர் பெரியவாச்சான்பிள்ளையா ஆச்சான்பிள்ளையா என்பது நிஷ்கர்ஷிக்கப்படாத விஷயம். தேசிகனருளிச் செய்த பாஞ்சராத்ர ரக்ஷையில் மூன்றுமதிகாரம் மிக விபுலமானது; அதற்கு நித்ய வ்யாக்க்யாநாதிகார மென்று பெயரிடப்பட்டு நித்யத்திலநேக விஷயங்கள் சர்ச்சிக்கப் பட்டிருப்பதால் நித்யக்ரந்தத்திற்கு ஒருவாறு வியாக்கியான முண்டென்று கொள்ளலாம்.

இனி எம்பெருமானாருடைய திருவடிகளில் ஆச்ரயித்திருந்த ஸாக்ஷாச்சிஷ்யர்களருளிச் செய்த க்ரந்தங்களைப்பற்றிப் பேசுகிறோம். திருவாய்மொழிக்கு ஸங்க்ரஹமாக வொரு வியாக்கியானமிடும்படி ஸ்வாமி திருக்குருகைப் பிரான் பிள்ளானுக்கு நியமித்தருள அவர் ஆறாயிரப்படி யென்று ப்ரஸித்தமாயுள்ள வியாக்கியானத்தை யருளிச் செய்தார். ஸ்ரீவைஷ்ணவஸம்பிரதாயத்தில் முதன் முதலாகத் திருவவதரித்த மணிப்ரவாளக்ரந்தம் இதுவேயாகும்.

கூரத்தாழ்வானருளிச் செய்த க்ரந்தங்களில் ஸ்ரீவைகுண்டஸ்தவம் அதிமாநுஷஸ்தவம் ஸுந்தரபாஹுஸ்தவம் வரதராஜஸ்தவம் ஸ்ரீஸ்தவம் ஆகிய பஞ்சஸ்தவமேயுள்ளது. யமகரத்நாகரம் என்கிற பெரிய க்ரந்தம் வியாக்கியானத்தோடுங்கூட (தெலுங்கு லிபியில்) அச்சிடப்பட்டிருக்கிறது: அது [மூலமும் வியாக்கியானமும்] கூரத்தாழ்வானருளியதாகச் சொல்லப்படுகிறது. கூரேச விஜயமும் கூரத்தாழ்வானருளிச் செய்ததாகச் சொல்லப்படுகிறது. அதில் "विद्यारण्योज्झितत्वान्नमकचमकयोः-வித்யாரண்யோஜ்ஜிதத்வாத் நமக சமகயோ:" என்பது முதலான ச்லோகங்களிருப்பது கொண்டு அது கூரத்தாழ்வானுடைய க்ருதியன்றென்று பெரியோர்களால் முடிவு செய்யப்பட்டிருக்கிறது. வேதபாஷ்யகாரரான வித்யாரண்யருடைய காலம் கூரத்

தாழ்வானுடைய யாவத்திருக்கு மிசவும் பிற்பட்டதன் [illegible] ாடீ பஞ்சகம் கூரத் தாழ்வானருளிச் செய்தது என்று சிலர் சொல்லுவர்; ஆழ்வான் ஆண்டான் எம்பார் முதலான சில ஆசார்யர்களின் தனித்தனி ச்லோகங்கள் ஒன்று சேர்த்து அநு ஸந்திக்கப்படுவதாகவே பெரியார்களின் முடிவு. ஆழ்வான் ரஹஸ்ய வ்யாக்யான மொன்று அருளிச் செய்திருந்ததாக தேசிகனுடைய ரஹஸ்யத்ரய ஸாரத்தில் சரம ச்லோகாதிகாரத்தில் "ஆழ்வானுடைய சரம ச்லோக வ்யாக்யானத்திலும் இவ் வளவே விவக்ஷிதமாகையால் ஒரு விரோதமு மில்லை" என்கிற வாக்யத்தினால் தெரிய வருகிறது. அப்படிப் பட்ட ஒரு க்ரந்தமும் இப்போது கிடைப்பதில்லை, அவ் விடத்திலேயே "பட்டரும் ஆழ்வானும் தந்தாங்களருளிச் செய்த நித்யங்களிலே" என்கிற வாக்யமும் காணகையாலே ஆழ்வான் நித்ய க்ரந்தமு மொன்று அருளிச் செய்திருப்பதாகத் தெரிகிறது. அதுவும் லுப்தம்.

எம்பாரும் முதலியாண்டானும் முக்தகமாகச் சில பாசுரங்களும் ச்லோகங்க ளுந் தவிர க்ரந்தரூபமாக எதுவும் அருளிச்செய்ததாகத் தெரியவில்லை. அருளாளப் பெருமானெம்பெருமானார் ஞான ஸாரம் ப்ரமேய ஸாரம் என்னு மிரண்டு ப்ரபந்தங் களருளிச் செய்துள்ளார். திருமலையனந்தாழ்வான் ஸ்ரீ வேங்கடாசலேதிஹாஸமாலை யும் ராமாநுஜ சதுச் ச்லோகியு மருளிச் செய்துள்ளார். கருடவாஹந பண்டிதர் திவ்ய ஸூரிசரித மென்கிற மஹாகாவ்ய மியற்றியுள்ளார். ஸ்ரீராமமிச்ர ரென்னும் ஸோமாசியாண்டான் ஷடர்த்தஸம்க்ஷேபம் முதலான சில நூல்கள் புணித்திருப்பதா கத் தெரிகிறது. வங்கிப்புரத்து நம்பி நித்யக்ரந்த மொன்று பணித்தார். ஆழ்வானு டைய திருக்குமாரரான ஸ்ரீ பராசரபட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவம், ஸ்ரீரங்கநாதஸ் தோத்ரம், ஸ்ரீகுணரத்நகோசம், அஷ்ட ச்லோகி, பகவத் குணதர்ப்பண மென்கிற ஸஹஸ்ரநாம பாஷ்யம், க்ரியாதீப மென்கிற நித்ய க்ரந்தம், லக்ஷ்மீ கல்யாண மென் கிற நாடகம் (லுப்தம்) கைசிக புராண வியாக்கியானம், நம்பெருமாள் திருமஞ்சன ச்லோகங்கள் — இவை யருளிச் செய்தார்.

கூரத்தாழ்வான் திருவடிகளான கூரநாராயண ஜீயர் ஸுதர்சந சதகம் அருளிச் செய்தார். இவர் மந்த்ர சாஸ்த்ரங்களில் மஹாநிபுணராகையாலே மந்த்ர சாஸ்த்ர க்ரந்தங்களும் ஸ்தோத்ர க்ரந்தங்களும் பல அருளிச் செய்தாரென்று கேட்டதுண்டு; ஆனால் ஸுதர்சந சதக மொன்று தவிர வேறொன்றும் கிடைத்திலது.

பட்டருடைய திருத்தம்பியாரான சீராமப் பிள்ளையின் திருக்குமாரரான வேதாசார்யபட்டர் க்ஷமாஷோடசியருளிச் செய்தார்.

பட்டர் திருவடிகளிலே ஆச்ரயித்த நஞ்சீயர் அருளிச் செய்த க்ரந்தங்களாவன - திருவாய்மொழிக்கு வியாக்கியானமான ஒன்பதினாயிரப்படி; [இந்த வியாக்கி யானத்தைப் பற்றின இதிஹாஸத்தை குருபரம்பரா ப்ரபாவாதிகளிலே காண்க.] உபதேச ரத்தின மாலையில் "நஞ்சீயர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு" என்ற பாசுரத்தின் வியாக்கியானத்திலே பிள்ளை லோகஞ்சீயர் "இவர்தாம் (நஞ் சீயர்) செய்தருளினதாய்க் கண்டது திருப்பாவைக்கும் கண்ணிநுண் சிறுத்தாம்

…ரும்பே யன்றாகும்; பின்னையு முண்டாகில் கண்டுகொள்வது" என்றெழுதி யிருக்கக் காண்கிறோம். திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்கள் தவிர, நித்யம், ஸ்ரீஸூக்த பாஷ்யம் என்று சில க்ரந்தங்களும் நஞ்சீயரருளிச் செய்தனவாகச் சொல்லுகிறார்கள். அவை லுப்தம். இவரருளிச் செய்ததாக அச்சிடப்பட்டிருக்கிற ஸ்ரீஸூக்த பாஷ்யம் உண்மையில் இவருடையதன்று, அந்யதீயம்—என்பது ஸித்தாந்தம் செய்யப்பட்ட விஷயம்.

இனி, நம்பிள்ளையருளிச் செய்த க்ரந்தங்கள் :- திருவாய்மொழி வியாக்கியானமான ஈடு முப்பத்தாறாயிரப்படி, திருவிருத்த வியாக்கியானமான ஈடு-இத்யாதிகள் எனினும் இவை வடக்குத் திருவீதிப்பிள்ளையின் க்ருதிகளாகவே கொள்ளப்படுகின்றன; நம்பிள்ளை உபந்யாஸ ரூபமாக அருளிச் செய்தவைகளை இவர் ஏடுபடுத்தினாரென்பது பற்றி.



வடக்குத் திருவீதிப்பிள்ளை திவ்ய ப்ரபந்த வியாக்கியானமாகவல்லாமல் வேறு சில க்ரந்தங்களுமருளிச் செய்திருப்பதாகத் தெரியவருகிறது. குன்றத்தூரையன் குமாரரான அப்பன் ஸ்ரீநிவாஸாசார்யர் பணித்ததாக (1913-ஆம் ஆண்டில்) தெலுங்கு லிபியில் அச்சிடப் பட்டிருக்கின்ற அஷ்ட ச்லோகி பெரிய படி வியாக்கியானத்தில் (பக்கம் 14ல்) வடக்குத் திருவீதிப்பிள்ளை அஷ்டாக்ஷர தீபிகையென்றொரு க்ரந்தம் அருளிச் செய்திருப்பதாகக் காட்டப்பட்டுள்ளது. (66-பக்கத்திலும் அப்படியே யுள்ளது.) அது கிடைப்பதில்லை, லுப்தம்.

பெரியவாச்சான் பிள்ளை யருளிச் செய்த க்ரந்தங்கள்:- நாலாயிர திவ்யப்ரபந்த வியாக்கியானங்கள், அதிலும் பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம் நானூறு பாசுரங்களுக்கு லுப்தம். ஸ்தோத்ர ரத்நத்திற்கு வியாக்கியானம், ஜிதந்தைக்கு வியாக்கியானம், நிகமனப்படியென்றொரு மிகச்சிறிய ரஹஸ்ய க்ரந்தம், மற்றுஞ் சிலவும் பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செய்தவை. இவருடைய திருக்குமாரர் ஆச்சான்பிள்ளை யென்று ப்ரஸித்தர். அவர் பரந்த ரஹஸ்யம், சதுச் ச்லோகீ வியாக்கியானம், கத்யத்ரய வியாக்கியானம், முக்தயோகாவளீ முதலான சில க்ரந்தங்களருளிச் செய்துள்ளார். மணவாள மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளில் 'ஆச்சான்பிள்ளை' என்று எடுத்துக்காட்டப்படுகிற வ்யக்தியைச் சிலர் பெரியவாச்சான் பிள்ளை யென்றே மயங்கி இவருடைய க்ரந்தங்களையும் அவரருளிச் செய்ததாக மயங்குவதுண்டு. விவாதக்ரஸ்த விஷயங்களைப்பற்றி இங்கு விரிவுவேண்டாவென விடுகிறோம்.

நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டர். இவரும் பெரிய வாச்சான் பிள்ளை வடக்குத் திருவீதிப்பிள்ளைகள் போல நம்பிள்ளை திருவடிகளை யாச்ரயித்து உய்ந்தவர். இவர் திருவாய்மொழிக்கு நம்பிள்ளையின் மிகவிரிவான உபந்யாஸத்தைப் பட்டோலை கொண்டிருந்து ஒரு பெரிய க்ரந்தமாக இட்டிருந்தாரென்றும், அதன் ப்ரசாரத்தை நம்பிள்ளை அநுமதித்தருளாமல் கரையானுக்கு இரையாக்கினாரென்றும் சொல்லுவர்கள். இந்த பட்டர் தத்வத்ரய விஷயமாகவொரு விரிவான க்ரந்தமருளிச் செய்திருப்பதா

கத் தெரிகிறது. மணவாள மாமுனிகளருளிச் செய்த தத்வத்ரய வியாக்கியானத்தில் அந்த க்ரந்தத்திலிருந்து விரிவான வாக்யங்கள் அடிக்கடி மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. அந்த க்ரந்தம் இப்போது கிடைப்பதில்லை, லுப்தம்.

பின்பழகிய பெருமாள் ஜீயர். இவர் நம்பிள்ளை திருவடிகளில் ஆச்ரயித்தவரென்பது தவிர, நம்பிள்ளையிடத்தில் அத்விதீயமான பக்தி கொண்டிருந்தவரென்பது உபதேசரத்தின மாலையினால் விளங்குகின்றது. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் இவருடைய க்ரந்தமாகக் காண்கிறது.

பிள்ளைலோகாசார்யர். இவரருளிச் செய்த க்ரந்தங்கள் அஷ்டாதசரஹஸ்யம். அவையாவன, 1. ஸ்ரீவசந பூஷணம் 2. தத்வத்ரயம். 3. அர்த்தபஞ்சகம். 4. அர்ச்சிராதி. 5. ப்ரமேய சேகரம் 6. ப்ரபந்ந பரித்ராணம். 7. ஸாரஸங்க்ரஹம். 8. ஸம்ஸார ஸாம்ராஜ்யம். 9. நவரத்னமாலை. 10. நவவித ஸம்பந்தம். 11. யாத்ருச்சிகப்படி, 12. பரந்தபடி, 13. ச்ரிய: பதிப்படி. 14. தத்வசேகரம். 15. தனித்வயம் 16 தனிசரமம், 17. தனிப்ரணவம். 18. முமுக்ஷுப்படி. இந்த ரஹஸ்ய க்ரந்தங்கள் தவிர [illegible] சில க்ரந்தங்களும் அருளிச் செய்திருந்ததாகத் தெரியவருகிறது. கத்யத்ரயத்திற்கு ஒரு வியாக்கியான மருளிச் செய்திருந்ததாக மணவாள மாமுனிகளெடுத்துக் காட்டியுள்ளார். தத்வத்ரயத்தில் ஈச்வரப்ரகரணத்தில் (6) "ஜ்ஞானானந்தைக ஸ்வரூபனுமாயாவது அநந்த ரூபஜ்ஞானனுமாயிருக்கை" என்றவிடத்து (மண) வியாக்யானத்தில்—"அநுகூல ஜ்ஞானமே ஸ்வரூபமாயிருக்க, ஜ்ஞானானந்தங்களென்று பிரித்துச் சொல்லுகிறது இரண்டு முண்டாகைக்காக. என்றிறே இவர் தாமிட்டருளின கத்ய வ்யாக்யானத்திலே அருளிச்செய்தது" என்கிற ஸ்ரீஸூக்தி காணப்படுகிறது. அந்த வியாக்கியானம் இப்போது எங்கும் கிடைப்பதில்லை, லுப்தமென்றே சொல்லவேணும். அழகிய மணவாளன் விஷயமாக இருபது ச்லோகங்கள் கொண்ட ரங்கேச விம்சதீ யென்றொரு ஸ்தோத்ரம் இவரருளிச் செய்ததாகச் சொல்லப்படுகிறது. இது வெகுகாலத்திற்கு முன்பு ஒரு ஸ்தோத்ரத் தொகுதியில் சேர்த்து அச்சிடப்பட்டு மிருக்கிறது.

அழகியமணவாளப்பெருமாள் நாயனார்—இவர் வடக்குத் திருவீதிப்பிள்ளையின் இளைய திருக்குமாரர். பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியார். இவரருளிச் செய்த க்ரந்தங்கள்—ஆசார்ய ஹ்ருதயம். அருளிச் செயல் ரஹஸ்யம். திருப்பாவைக்கு ஆறாயிரப்படி வியாக்கியானம். கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானம். அமலனாதிபிரான் வியாக்கியானம் முதலியன. பெரிய திருமடல் வியாக்கியானமுமொன்று இவரருளிச் செய்ததாகச் சொல்லுவர்கள். இவர், பதகமல ஸஹஸ்ரமென்று ஒரு வடமொழி க்ரந்த மருளிச் செய்யத் தொடங்கி மூந்நூறு ச்லோகங்களோடு நின்று விட்டதாகச் சிலர் கூறுமைதிஹ்யம் அர்வாசீந கல்பிதம். அப்படியொரு க்ரந்தமும் கிடையாது; இவர் அருளிச் செய்யத் தொடங்கினதுமில்லை.

வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயர்—இவர் நாயனாராச்சான்பிள்ளையின் திருவடிகள். இவர், திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படியும், திருவிருத்தத்திற்கு

ஸ்வாபதேசவுரையும், திருப்பாவைக்கு ஒரு ஸங்க்ரஹ வியாக்கியானமு மிட்டிருக்கிறார். தத்வதீபம், தீபப்ரகாசம், தத்வ நிரூபணம், ரஹஸ்யத்ரய காரிகாவலீ, தீப ஸங்க்ரஹம் முதலான க்ரந்தங்களு மருளிச் செய்துள்ளார்.

ஜநந்யாசார்யர். (திருநாராயணபுரம் ஆய் என்றும் இவர்க்கு ப்ரஸித்தியுண்டு.) இவர் ஸ்ரீவசந பூஷணத்திற்கும் ஆசார்ய ஹ்ருதயத்திற்கும் வியாக்கியானமிட்டிருக்கிறார். இவருடைய ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானம் முதலிரண்டு ப்ரகரணங்களுக்கே கிடைத்திருக்கிறது.

திருவாய்மொழிப்பிள்ளை—இவர் பெரியாழ்வார் திருமொழிக்கு ஸ்வாபதேசவுரையென்று ஒரு வியாக்கியான மிட்டிருப்பதாக அச்சிடப்பட்டுமிருக்கிறது. இது இவருடைய ஸந்நிதியில் தோன்றின பின்புள்ளார் பணித்ததேயொழிய, பிள்ளை லோகாசார்யருடைய திருவடிகளும் மணவாள மாமுனிகளுக்கு ஆசார்யருமான திருவாய்மொழிப் பிள்ளை பணித்ததன்று என்று பெரியார் பகரக் கேட்டிருக்கை. இந்த வியாக்கியானம் இவர் அருளிச் செய்ததாயிருந்தால் இதைப்பற்றி மணவாள மாமுனிகள் உபதேசரத்தின மாலையில் அருளிச்செய்யாது விடுதற்குக் காரணமில்லை யென்பது அநேக ஹேதுக்களில் தலையான ஹேது. இவரருளிச் செய்த க்ரந்தமாக எதுவும் கிடைத்திலது.

மணவாளமாமுனிகள். பூர்வாசார்ய பரம்பரையானது மாமுனிகளளவிலே முற்றுப்புள்ளி யிடப்பெற்றிருக்கின்றது. இவரருளிச் செய்த திவ்ய ஸூக்திகளினாலேயே பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுக் கெல்லாம் பெருமையுண்டாயிற்றென்பது எள்ளளவும் அதிசயோக்தியன்று.

ஏற்கெனவே அவதரித்துள்ள பூர்வாசார்ய திவ்ய ஸூக்திகளை ப்ரவசனம் செய்தருள்வதிலேயே மிகுந்த அபிநிவேச முடையரான மாமுனிகள் ஸ்வதந்த்ரமாகச் சில க்ரந்தங்கள் இட்டருளத் திருவுள்ள முடையவரல்லரேயாகிலும், இவ்வுலகின் பாக்ய பரிபாக மடியாக சிஷ்யர்களின் ப்ரார்த்தனைக் கிணங்கியும் பகவந் நியமனத்தை முன்னிட்டும் "தேனே பாலே கன்னலே யமுதே"யான பல திவ்யக்ரந்தங்களையும் அருளிச் செய்தருளும்படியாயிற்று.

அவற்றின் விவரணம் வருமாறு:—பிள்ளை லோகாசார்ய ரருளிச்செய்த ரஹஸ்யங்களில் ஸ்ரீ வசநபூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி என்கிற மூன்று ரஹஸ்ய க்ரந்தங்கள் மிகச் சிறந்தனவகளும் ப்ரதானங்களுமாகையாலே அம்மூன்றுக்கும் வியாக்யான மிட்டருளினார்.

பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் அருளிச் செய்த ஆசார்ய ஹ்ருதயமென்னும் ரஹஸ்ய ரத்னத்திற்கு வியாக்கியான மிட்டருளினார்.

பெரியவாச்சான் பிள்ளை நாலாயிரத்திற்கும் பூர்த்தியாக வியாக்கியானமருளிச் செய்திருந்தும் அதில் பெரியாழ்வார் திருமொழி முதற்பாசுரம் தொடங்கி "வாக்குத்தூய்மையிலாமையினாலே மாதவா வுன்னை" (5-1-1) என்கிற வளவும் வியாக்கியானம் கரையானுக்கு இரையாகி துர்லபமாய் விட்டபடியாலே அவ்வளவுக்குத் தாம் வியாக்கியான மிட்டருளினார். அந்த வியாக்கியானத்தை மஹான்கள் ஸேவித்து "அந்தோ! நாலாயிர வியாக்கியானமும் கரையானுக்கு இரையாகி யிருந்தால் நலமாயிருக்குமே; இங்ஙனே தேனும் பாலு மமுது மன்ன வியாக்கியானத்தை மாமுனிகள் பூர்த்தியாக இட்டருளும்படியான பாக்கியம் நேர்ந்திருக்குமே" என்று பரஸ்பரம் வியந்து உவந்து பேசிக்கொண்டார்கள்.

இராமானுச நூற்றந்தாதிக்கும் அருளாளப் பெருமா னெம்பெருமானருளிச் செய்த ஞானசாரப் பிரமேயசாரங்களுக்கும் உரை செய்தருளினார். கீதைக்குத் * தாத்பர்யதீப மென்றொரு வியாக்கியானம் இட்டருளினார். ஈடு முப்பத்தாறாயிரப் படிக்கும் தாமருளிச்செய்த ரஹஸ்ய வ்யாக்கியானங்களுக்கும் பிரமாணத்திரட்டுகள் ஸங்க்ரஹித்தருளினார். திருவாராதந ப்ரயோகமொன்று திருவாய் மலர்ந்தருளினார். உபதேச ரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி என மூன்று தமிழ்ப் பிரபந்தங்களருளிச் செய்தார். தேவராஜமங்களமும் யதிராஜ விம்சதியு மருளிச் செய்தார். மற்றும் ஸ்ரீஸூக்தி விசேஷங்களுண்டாகில் கண்டுகொள்வது.

உலகில் ஸ்ரீஸூக்திகளருளிச் செய்தவர்கள் பல ஆசார்யர்களுமுண்டு. எனினும், மணவாள மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளின் மாதுர்யமும் காம்பீர்யமும் அர்த்தபுஷ்டியும் ரஸபுஷ்டியும் அஸாதாரணமாகவே யிருக்கும். "நாமூலம் லிக்யதே கிஞ்சிந் நாநபேக்ஷிதமுச்யதே" என்னும்படி யமைந்த வியாக்கியானம் மாமுனிகளுடையதேயாம். வேறு எந்த ஆசிரியரும் இங்ஙனே வியாக்கியானம் அமைக்கக் கற்றிலர் என்றால் இது அதிசயோக்தியேயாகாது. பல மதாந்தரங்களைக் கண்டித்து எழுதினாலுங்கூட ஒருவருடைய மனமும் நோகாதபடிக்கும் வ்யர்த்தாபஹாஸங்களைச் சிறிதும் புகவிடாதபடிக்கும், எந்த இடத்தை யெடுத்தாலும் சாஸ்த்ரார்த்தமே கைகொள்ளலாம்படிக்கும் 'ஸகல சாஸ்த்ர ஸாகர பாரங்கதர் இவரொருவரே' என்று திண்ணமாக எண்ணும்படிக்கும், அந்வயம் க்லிஷ்டாந்வயம், மயங்கவைத்தல், முதலிய தோஷங்களுக்குச் சிறிதும் இடமில்லாதபடிக்கும் ஸ்ரீஸூக்திகளருளிச் செய்தவர் மாமுனிகளொருவரே. ஸூத்ரம் போன்ற பிள்ளை லோகாசார்ய திவ்ய ஸூக்திகளுக்கு அவதாரிகையிடுகிற அழகும் மூலத்திற்கு அர்த்த மருளிச்செய்கிற ஐஸ்வர்யமும், ஆங்காங்கு அர்த்தங்களைப் பிண்டீகரித்து நிகமித்தருளுகிற அற்புதமும் உள்ளுந்தோறு மென்னெஞ்சு எரிவாய் மெழுகொக்கும். வண்ணம் இத்திவ்யசிரியருடைய ஸ்ரீஸூக்திகளை ஸேவித்த பின்பு இன்னொரு வாக்கில் வாயை வைத்தால் "ஸ்திதே ரவிந்தே மகரந்தநிர்ப்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே" என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்திக்கு விருத்தமாகச் செய்தோமென்கிற எண்ணமுண்டாகிறதேயன்றி வேறில்லை.

---

* யதீந்த்ரப்ரவண ப்ரபாவத்தில் "கீதைக்குத் தாத்பர்ய தீபமென்றொரு வியாக்கியானமிட்டருளி;" என்றுள்ளது. சில ஆண்டுகட்கு முன் காஞ்சீ ஸுதர்சன அச்சுக்கூடத்தில் தெலுங்கு லிபியில் மாமுனிகளருளிச் செய்ததாக ஒரு வியாக்கியானம் அச்சிடப் பட்டிருக்கின்றது. இந்த வியாக்கியானம் மாமுனிகளருளிச் செய்ததுதானென்று அதில் விரிவான பூமிகையும் (அஸ்மதாசார்யபட்டரால்) வெளியிடப்பட்டிராநின்றது. இருந்தாலும், அதைப்பற்றி ஆராய்ச்சி செய்த காலத்தில் அது மாமுனிகளருளிச் செய்ததன்றென்றும் மாமுனிகளுக்குப் பிற்பட்டவரான அபிராமவராசார்ய னென்கிற வொருவரால் பணிக்கப்பட்டதென்றும் தேறிற்று. அதீந்த்ரியமான விஷயத்தில் சிறியேனுடைய அடியேன் நிர்ணயித்துக்கூற அநதிகாரி. மாமுனிகளருளிச் செய்த கீதாதாத்பர்ய தீபம் இப்போது கிடைக்கவில்லையென்றே அடியேனுடைய கொள்கை.

எம்பெருமானாரிடமிருந்து பிரிகிற மற்றொரு பரம்பரையில் எங்களாழ்வான் நடாதூரம்மாள் முதலான ஆசார்யர்கள் செய்தருளின க்ரந்தோபகாரங்களைப் பற்றி இனித் தெரிவிக்கிறோம்.

**எங்களாழ்வான்.** 'விஷ்ணு சித்தார்யர்' என்பது இவருடைய அபரநாமதேயம். 'தினவடங்கச் சொல்லுவர் திருவெள்ளறைச் சோழியர்' என்று ப்ரஸித்தமான உலக வழக்கினால் இவருடைய ஜ்ஞாநாதிசயமறியத்தக்கது. ஸ்ரீவிஷ்ணு சித்தீயமென்று ப்ரஸித்தமான ஸ்ரீவிஷ்ணுபுராண வியாக்கியானம் இவரருளிச்செய்தது.

**நடாதூரம்மாள்.** எங்களாழ்வானுடைய திருவடிகளில் ஆச்ரயித்த அம்மாள் தத்வஸாரம், ப்ரபந்ந பாரிஜாதம், பரத்வாதி பஞ்சகம், ப்ராதரநுஸந்தேய ச்லோகமாலா— இவையருளிச் செய்தார். இவற்றுள், தத்வஸாரம்-ஸ்ரீபாஷ்யார்த்த விசேஷங்களை ஸங்க்ரஹித்த ச்லோகரூபமான மிகச் சிறந்த க்ரந்தம். இது வியாக்கியானத்தோடுங் கூட முத்ரிதமானதே. ப்ரபந்ந பாரிஜாதமும் அநேக ப்ரமேய ஸங்க்ராஹகமாய் ச்லோகபத்தமான உத்தமக்ரந்தம்.

**ஸ்ரீஸுதர்சநபட்டர்.** இவர் நடாதூரம்மாள் திருவடிகளிலே யாச்ரயித்து தீபாதுத்பந்ந தீபம்போலே மிக விளங்கினவர். ஸ்ரீபாஷ்யத்திற்கு மிக விரிவான வியாக்கியானமான ச்ருத ப்ரகாசிகையும், அதிஸம்க்ஷிப்த வியாக்கியானமான ச்ருத ப்ரதீபிகையும், வேதார்த்த ஸங்க்ரஹத்திற்கு வியாக்கியானமாக தாத்பர்ய தீபிகையும், சரணாகதிகத்யத்திற்கு ஸம்க்ஷிப்தமான பாஷ்யமும், ஸுபாலோபநிஷத் பாஷ்யமும் அருளிச்செய்திருக்கிறார்.

**கிடாம்பியப்புள்ளார்.** இவர்க்கு வாதிஹம்ஸாம்புதாசார்ய ரென்று ஸம்ஸ்க்ருத நாமதேயம். இவர் தூப்புல் வேதாந்ததேசிகனுக்கு மாதுலரும் ஆசார்யருமாவர். இவர் ந்யாயகுலிசமென்றொரு க்ரந்தமருளிச் செய்திருப்பதாகக் கேள்வி.

**வேதாந்ததேசிகர்.** ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் அதிக ஸங்க்யையான க்ரந்தங்களருளிச் செய்தவர் இவ்வாசிரிய ரொருவரே யாவர். ஸ்தோத்ர விபாகத்தில் முப்பத்திரண்டு ஸ்தோத்ரங்கள்; ரஹஸ்ய ப்ரஸ்தாநத்தில் முப்பத்திரண்டு ரஹஸ்யங்கள். தேசிக ப்ரபந்தமென்று தமிழ் வகுப்பில் 19 பிரபந்தங்கள்; காவ்யநாடக விபாகத்தில், ஸங்கல்ப ஸூர்யோதய நாடகம், யாதவாப்யுதய காவியம், ஹம்ஸ ஸந்தேசம், ஸுபாஷித நீவீ; வ்யாக்யான வகுப்பில், ஈசாவாஸ்யோபநிஷத்பாஷ்யம், ஸ்தோத்ர ரத்ந பாஷ்யம், சதுச்ச்லோகீ பாஷ்யம், கத்யத்ரயபாஷ்யம், கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை, கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகை, தத்வடீகை; ஸ்வதந்த்ர க்ரந்தமாக-சததூஷணீ, தத்வமுக்தாகலாபம் [அதற்கு வியாக்கியானமாக] ஸர்வார்த்த ஸித்தி, ந்யாயஸித்தாஞ்ஜநம், ந்யாயபரிசுத்தி, ஸேச்வர மீமாம்ஸை, மீமாம்ஸாபாதுகா, ஸச்சரித்ரரக்ஷா, ஸ்ரீ பாஞ்சராத்ரரக்ஷா, நிக்ஷேபரக்ஷா, யஜ்ஞோபவீத ப்ரதிஷ்டா, வைச்வதேவ காரிகா, வியாக்கியானத்தோடு கூடிய பூகோள நிர்ணயம். ஆக இவ்வளவு க்ரந்தங்கள் இவரருளிச் செய்தவை. இவற்றை யெல்லாம் 'வேதாந்த தேசிக க்ரந்தமாலா' என்கிற தொகுதியில் நாம் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறோம்.

**நயினவரதாசார்யர்.** இவர் தேசிகனுடைய திருக்குமாரர். அதிகரண ஸாராவளிக்கு வியாக்கியானம், சில தேசிகரஹஸ்யங்களுக்கு ஸம்ஸ்க்ருதாநுவாதம், சில தேசிகஸ்தோத்ரங்களுக்கு ஸம்க்ஷிப்தமான வியாக்கியானம் இவரருளிச் செய்ததாகச் சொல்லுகிறார்கள். இதில் விப்ரதிபத்தி கொள்வாருமுளர். ஆகவே இவருடைய க்ருதிகளைப்பற்றி நிர்ணயமாகச் சொல்லுவதற்கில்லை.

பூருவர்களின் க்ரந்தோபகார விஷயத்தில் யதாமதி எழுதினோமிது. பிரசாரத்திலில்லாத சில க்ரந்தங்களுமுண்டு; அவற்றுக்கு இன்னார் கர்த்தா என்பதில் நிர்ணயமில்லாமையாலே அவற்றை விடுத்தோம்.



எம்பெருமானாரிடமிருந்து பிரிகிற மற்றொரு பரம்பரையில் எங்களாழ்வான் நடாதூரம்மாள் முதலான ஆசார்யர்கள் செய்தருளின க்ரந்தோபகாரங்களைப் பற்றி இனித் தெரிவிக்கிறோம்.

**எங்களாழ்வான்.** 'விஷ்ணு சித்தார்யர்' என்பது இவருடைய அபரநாமதேயம். 'தினவடங்கச் சொல்லுவர் திருவெள்ளறைச் சோழியர்' என்று ஸுப்ரஸித்தமான உலக வழக்கினால் இவருடைய ஜ்ஞாநாதிசயமறியத்தக்கது. ஸ்ரீவிஷ்ணு சித்தீயமென்று ப்ரஸித்தமான ஸ்ரீவிஷ்ணுபுராண வியாக்கியானம் இவரருளிச்செய்தது.

**நடாதூரம்மாள்.** எங்களாழ்வானுடைய திருவடிகளில் ஆச்ரயித்த அம்மாள் தத்வஸாரம், ப்ரபந்நபாரிஜாதம், பரத்வாதி பஞ்சகம், ப்ராதரநுஸந்தேய ச்லோகமாலா— இவையருளிச் செய்தார். இவற்றுள், தத்வஸாரம்-ஸ்ரீபாஷ்யார்த்த விசேஷங்களை ஸங்க்ரஹித்த ச்லோகரூபமான மிகச் சிறந்த க்ரந்தம். இது வியாக்கியானத்தோடுங்கூட முத்ரிதமானதே. ப்ரபந்நபாரிஜாதமும் அநேக ப்ரமேய ஸங்க்ராஹகமாய் ச்லோகபத்தமான உத்தமக்ரந்தம்.

**ஸ்ரீஸுதர்சநபட்டர்.** இவர் நடாதூரம்மாள் திருவடிகளிலே யாச்ரயித்து தீபாதுத்பந்ந ப்ரதீபம் போலே மிக விளங்கினவர். ஸ்ரீபாஷ்யத்திற்கு மிக விரிவான வியாக்கியானமான ச்ருதப்ரகாசிகையும், அதிஸம்க்ஷிப்த வியாக்கியானமான ச்ருதப்ரதீபிகையும், வேதார்த்த ஸங்க்ரஹத்திற்கு வியாக்கியானமாக தாத்பர்ய தீபிகையும், சரணாகதிகத்யத்திற்கு ஸம்க்ஷிப்தமான பாஷ்யமும், ஸுபாலோபநிஷத் பாஷ்யமும் அருளிச்செய்திருக்கிறார்.

**கிடாம்பியப்புள்ளார்.** இவர்க்கு வாதிஹம்ஸாம்புதாசார்ய ரென்று ஸம்ஸ்க்ருத நாமதேயம். இவர் தூப்புல் வேதாந்ததேசிகனுக்கு மாதுலரும் ஆசார்யருமாவர். இவர் ந்யாயகுலிச மென்றொரு க்ரந்தமருளிச் செய்திருப்பதாகக் கேள்வி.

**வேதாந்ததேசிகர்.** ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் அதிக ஸங்க்யையான க்ரந்தங்களருளிச் செய்தவர் இவ்வாசிரிய ரொருவரே யாவர். ஸ்தோத்ர விபாகத்தில் முப்பத்திரண்டு ஸ்துதிகள்; ரஹஸ்ய ப்ரஸ்தாநத்தில் முப்பத்திரண்டு ரஹஸ்யங்கள். தேசிக ப்ரபந்தங்களென்று தமிழ் வகுப்பில் 19 பிரபந்தங்கள்; காவ்யநாடக விபாகத்தில், ஸங்கல்ப ஸூர்யோதய நாடகம், யாதவாப்யுதய காவியம், ஹம்ஸ ஸந்தேசம், ஸுபாஷித நீவீ; வ்யாக்க்யான வகுப்பில், ஈசாவாஸ்யோபநிஷத்பாஷ்யம், ஸ்தோத்ர பாஷ்யம், சதுச்ச்லோகி பாஷ்யம், கத்யத்ரயபாஷ்யம், கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை, கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகை, தத்வடீகை; ஸ்வதந்த்ர க்ரந்தமாக-சததூஷணீ, தத்வ முக்தாகலாபம் [அதற்கு வியாக்கியானமாக] ஸர்வார்த்த ஸித்தி, ந்யாயஸித்தாஞ்ஜநம், ந்யாயபரிசுத்தி, ஸேச்வர மீமாம்ஸை, மீமாம்ஸாபாதுகா, ஸச்சரித்ரரக்ஷா, ஸ்ரீபாஞ்சராத்ரரக்ஷா, நிக்ஷேபரக்ஷா, யஜ்ஞோபவீத ப்ரதிஷ்டா, வைச்வதேவ காரிகா, வியாக்கியானத்தோடு கூடிய பூகோள நிர்ணயம். ஆக இவ்வளவு க்ரந்தங்கள் இவரருளிச் செய்தவை. இவற்றை யெல்லாம் 'வேதாந்த தேசிக க்ரந்தமாலா' என்கிற தொகுதியில் நாம் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறோம்.

**நயனவரதாசார்யர்.** இவர் தேசிகனுடைய திருக்குமாரர். அதிகரண ஸாராவளிக்கு வியாக்கியானம், சில தேசிகரஹஸ்யங்களுக்கு ஸம்ஸ்க்ருதாநுவாதம், சில தேசிகஸ்தோத்ரங்களுக்கு ஸம்க்ஷிப்தமான வியாக்கியானம் இவரருளிச் செய்ததாகச் சொல்லுகிறார்கள். இதில் விப்ரதிபத்தி கொள்வாருமுளர். ஆகவே இவருடைய க்ருதிகளைப்பற்றி நிர்ணயமாகச் சொல்லுவதற்கில்லை.

பூருவர்களின் க்ரந்தோபகார விஷயத்தில் யதாமதி எழுதினோமிது. பிரசாரத்திலில்லாத சில க்ரந்தங்களுமுண்டு; அவற்றுக்கு இன்னார் கர்த்தா என்பதில் நிர்ணயமில்லாமையாலே அவற்றை விடுத்தோம்.

# 17. கப்யாஸச்ருதியின் பொருளாராய்ச்சி.

ஆழ்வார்கள் எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு உவமை கூறுமிடங்களில் ஊன்றி நோக்குதல் செய்தால் அபூர்வமான சில விசேஷங்கள் அறியப்பெறலாம். ஸ்ரீராமாநுஜர் திவ்யப்ரபந்த வமுதக் கடலில் எவ்வளவு ஆழங்காற்பட்டவர் என்பதும் இவ்வாராய்ச்சியில் தெரியவரும். இதைப்பற்றி விரிவாகவே இங்கு எழுத விரும்புகிறோம். எம்பெருமானுடைய திருக் கண்களுக்குப் பெரும்பாலும் தாமரையை உவமை கூறுகின்றார்களெனினும் அந்தத் தாமரைக்கு ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு விதமான விசேஷணமிடுகிறார்கள் ஆழ்வார்கள். அந்த விசேஷணங்களை நாம் மேல் நோக்காகப் பார்க்கும்போது விசேஷமொன்றையும் அறியகில்லோம். எதுகையின்பம் நோக்கியும் மோனையின்பம் நோக்கியும் செய்யுளைப் பூரிக்கவேண்டியும் ஸாதாரண விசேஷணங்களை யிடுகிறார்களென்றும் சிலர் நினைத்தொழிகிறார்கள். எம்பெருமானார் எதையும் ஆழ்ந்து நோக்குபவராதலால் அந்த விசேஷணங்களைக் கொண்டும் வேதாந்தப் பொருள்களை நிர்வஹிக்கும் பரிசு நெஞ்சால் நினைப்பரிது.

ஸ்வாமி யாதவப்ரகாசரிடத்தில் வேதாந்த ச்ரவணம் பண்ணும்போது பல விடங்களிலோ சில விடங்களிலோ அபிப்ராய பேத முண்டானதாகச் சொல்லப்படுகிறது. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தில் காணப்படுகிற தொரு விஷயம் வருமாறு—"பின்பு ஒருநாள், இளையாழ்வார் யாதவப்ரகாசனுக்கு அப்யஞ்ஜநத் தொழில் செய்யாநிற்க, அவ்வளவிலே * तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी— தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவமக்ஷிணீ * என்கிற ச்ருதிக்கு அவன் அநுசிதார்த்தம் சொல்ல, அது கேட்டு இவர்க்கு சோக முண்டாய் அந்த சோகாச்ரு அவன் தொடையிலே விழ, அது நெருப்புப்பட்டாற்போலே அவன் தொடையைச் சுட, அவனும் பதறி இவர் முகத்தைப் பார்த்து 'உமக்கு துக்கமாவானென்?' என்ன, இவரும்......அயதார்த்தம் கேட்டவாறே துக்கமாயிற்று என்ன, யாதவப்ரகாசனும் அது கேட்டுக் குபிதனாய் 'நான் சொன்னபடி கேட்கில் வாசித்திரும், இல்லாவிடில் விட்டுப் போம்' என்ன, இவரும் அப்படியே சிந்தைகலங்கித் தவிர்ந்திருக்க" என்று.

கருடவாஹந பண்டிதரியற்றிய திவ்யஸூரிசரிதத்திலும் பதினோராவது ஸர்க்கத்தில் 32, 33, 34 ஆகிய மூன்று ச்லோகங்களினால் இவ்விஷயம் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஆனால் கப்யாஸ ச்ருதிக்கு அபார்த்தம் சொன்னதாக விசேஷித்து அங்கு எடுத்துக் காட்டப்படவில்லை. " अभ्यङ्गं विरचयतो गुरौ विरुद्धं व्याख्याति श्रुतिशिखरैकवाक्यतत्त्वम् " என்று மாத்திரமாகவுள்ளது. ஸ்வாமிக்கு சோகாச்ரு பெருகி அவனது தொடையைச் சுட்டதான கதை கூறப்பட்டே யிருக்கிறது.

ஸ்வாமிக்கு சோகாச்ரு பெருகும்படியாக யாதவர் என்ன அபார்த்தம் சொல்லி விட்டாரென்று விமர்சிப்போம். கப்யாஸ மென்பதற்கு கபியின் ஆஸமென்று கொண்டு [அதாவது மர்க்கட ப்ருஷ்டமென்று கொண்டு] பொருள் சொன்னதாகவும், இப்படி ஹீநோபமை சொல்லுவது கூடாதாகையால் ஸ்வாமிக்கு சோகமுண்டாயிற்றென்றும் தெரியவருகிறது. இங்கே வக்தவ்யாம்சங்கள் பலவுண்டு, கேண்

மின் மர்க்கட ப்ருஷ்டமென்கிற பொருளை யாதவ ப்ரகாசர் தாமே கல்பனை செய்து சொன்னாரா? அல்லது அவர்க்கு முன்னே யாராகிலும் சொல்லி யிருக்கிறார்களா? என்று பார்க்கவேண்டும். அன்றியும், மர்க்கட ப்ருஷ்டத்தை எம்பெருமானுடைய திருக்கண்களுக்கே உவமையாகச் சொன்னார்களா? அல்லது அதைப் புண்டரீகத்திலே அந்வயித்து மர்க்கட ப்ருஷ்டம் போன்றதான யாதொரு புண்டரீகமுண்டோ அதற்கொப்பான திருக்கண்கள் என்று பொருள் கொண்டார்களா? என்றும் விமர்சிக்கவேண்டும்.

மர்க்கட ப்ருஷ்டமென்கிற பொருளை சங்கராசார்ய ரெழுதி வைத்தாரென்றும் அவரைப் பின்பற்றி யாதவர் கூறினாரென்றும் சிலர் கூறுகின்றார்கள். "அத்வைத மதத்தை ஸ்தாபித்த ஸ்ரீசங்கராசாரியர் உபப்ருஹ்மணங்களின் உதவியின்றி கப்யாஸ மென்பதற்கு ஒருவிதமாய்ப் பொருள் கூறினார்; எம்பெருமானார் இதற்கு மாறுபட்ட உரையை அருளின சரிதம் யாவருமறிந்ததே" என்று வெளிவந்திருப்பதையும் காணலாம். இங்குத் தெரிந்துகொள்ளவேண்டிய உண்மையான விஷயம் தெரிவிக்கப்படுகிறது. * भगवद्बोधायनकृतां विस्तीर्णां ब्रह्मसूत्रवृत्तिं पूर्वाचार्याः सञ्चिक्षिपुः— பகவத் போதாயந க்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ர வ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு: * என்கிற ஸ்ரீபாஷ்யோபக்ரம ஸூக்தியில் பூர்வாசார்ய பதத்தினால் விவக்ஷிதராக ச்ருத ப்ரகாசிகாசார்யரால் காட்டப்பட்டுள்ள த்ரமிட பாஷ்யகாரரே இவ்வர்த்தத்தை யெழுதியிருப்பதாகச்ருத ப்ரகாசிகா பட்டரும் வேதாந்த தேசிகனும் மற்றும் பலரும் உரைத்துள்ளார்கள். தஸ்ய யதா கப்யாஸமித்யாதி ச்ருதி வாக்யத்திற்கு அந்த த்ரமிட பாஷ்யகாரர் ஆறு அர்த்தங்களை யெழுதி வைத்திருப்பதாகவும், அந்த ஆறு பொருள்களையும் அவர் அவிசேஷமாகவே யெழுதி வைத்திருந்தாலும் முந்தின மூன்று பொருள்களைப் பூர்வ பக்ஷார்த்தங்களாகவும் பின் மூன்று பொருள்களை ஸித்தாந்தார்த்தங்களாகவும் கொள்ள வேணுமென்று * अन्तस्तद्धर्मोपदेशात्–அந்தஸ்தத்தர்மோபதேசாத் * என்ற ப்ரஹ்ம ஸூத்ரத்தின் கீழ் ச்ருதப்ரகாசிகாசார்யர் எழுதியுள்ளார். அங்கு " (तस्य यथेति ।) अस्य वाक्यस्य वाक्यकारेण षडर्थाः पूर्वपक्षतया सिद्धान्तत्वेन चोक्ताः । तत्र अर्थत्रयस्य पूर्वपक्षत्वं तत्स्वभावादेवावगतम्......" இத்யாதி ஸ்ரீ ஸூக்திகள் காண்க. வேதார்த்த ஸங்க்ரஹதாத்பர்ய தீபிகையிலும் இங்ஙனமே யெழுதியுள்ளார். தேசிகன் ஸ்தோத்ர பாஷ்யத்தில் [க: புண்டரீக நயந:] என்றவிடத்தில்—" यद्यपि द्रमिडभाष्ये * तस्य यथा कप्यासमित्यादेः षडर्थाः प्रोक्ताः तथाऽपि औचित्यात् त्रय एव स्वीकर्तव्याः " என்று ஸாதித்திருக்கிறார். இதன் பொருள்—த்ரமிட பாஷ்யத்தில் * தஸ்ய யதா கப்யாஸ மித்யாதிக்கு ஆறு பொருள்கள் எழுதப்பட்டிருந்தாலும் தகுதியை நோக்கி மூன்று பொருள்களே கொள்ளத்தக்கன-என்பதாம். ஆக, மர்க்கடப்ருஷ்ட மென்கிற அர்த்தத்தையும் த்ரமிட பாஷ்யகாரரே எழுதிவைத்திருப்பதாகவும், அந்த அர்த்தத்தை அவர் பூர்வபக்ஷார்த்தமாக எழுதியிராமற் போனாலும் அர்த்தஸ்வபாவத்தைக் கொண்டு பூர்வபக்ஷார்த்தமாகவே நாம் கொள்ள வேணுமென்றும் எழுதியுள்ள விதனால் என்ன தேறுகிறதோ அதை ப்ராமாணிகர்கள் அறிவர்கள். த்ரமிட பாஷ்யகாரர் யாதவ ப்ரகாசரைப்போல் விமதரல்லர்; அவரை ஸ்வாமி யெம்பெருமானார் அடிக்கடி கொண்டாடுகிறார். வேதார்த்த ஸங்க்ரஹத்திற் காணலாமது. அவ்வர்த்தம் ஸ்வாமிக்கு ருசிக்கவில்லை

யென்பது வாஸ்தவம். அதைக் கொண்டே அவ்வர்த்தத்தைப் பூர்வ பக்ஷார்த்தமாகக் கொள்ளவேணுமென்று ச்ருத ப்ரகாசிகாசார்ய ப்ரப்ருதிகள் எழுதி யருளினார்களென்று தெரிகிறது.

மர்க்கட ப்ருஷ்டத்தை எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு உவமை கூறினதாகவல்லாமல் புண்டரீகத்திற்கு உவமை கூறினதாகவும் காண்கிறது. அந்த ப்ரகரண ச்ருத ப்ரகாசிகையில் "मर्कटपृष्ठं पुण्डरीकं च किमुपमानद्वयम् ? उत एकोपमा ? तत्र उपमाद्वित्वमयुक्तम्..." இத்யாதி ஸ்ரீஸூக்திகளை ஸேவிப்பது.

ஆக, கப்யாஸ ச்ருதிக்கு மர்க்கட ப்ருஷ்ட மென்கிற அர்த்தம் ஸ்வாமி யெம்பெருமானார் மிகவுமாதரித்தருளும் த்ரமிட பாஷ்யத்திலேயுள்ளதென்பதும், சங்கராசார்யரோ யாதவ ப்ரகாசரோ ஸ்வகபோல கல்பிதமாகச் சொன்னதன்று என்பதும் விசதமாகத் தெரிவிக்கப் பட்டதாயிற்று. இங்கு எம்பெருமானார் ஸித்தாந்தப் பொருளாகத் திருவுள்ளம் பற்றின அர்த்த விசேஷங்கள் ஆழ்வார்கள் திருவுள்ளம் பற்றினவை என்கிற காரணத்தினாலேயே விசேஷித்து பஹுமாந பாத்ரங்களாயின வென்பது அடுத்த வியாஸத்தில் விவரிக்கப்படுகிறது.

## 18. கப்யாஸச்ருதியும் ஆழ்வாரருளிச்செயல்களும்.

கப்யாஸம் என்று சாந்தோக்யோபநிஷத்திலுள்ள விலக்ஷணமான சொல்லுக்கு ஸ்வாமி யெம்பெருமானார் மூன்று வகையான வ்யுத்பத்திகளைத் திருவுள்ளம்பற்றி மூன்று அர்த்தவிசேஷங்களையருளிச்செய்திருப்பதை வேதார்த்தஸங்க்ரஹம் முதலான திவ்யக்ரந்தங்களிலுணருகின்றோம். அவ்வர்த்தவிசேஷங்களைக் காட்டுகின்ற ஸ்வாமி ஸ்ரீஸூக்தியாவது— "கம்பீராம்பஸ்ஸமுத்பூத-ஸும்ருஷ்டநாள-ரவிகரவிகஸித புண்டரீகதளாமலாயதேக்ஷண:" என்பது. ஆழ்ந்த தண்ணீரில் வாழ்வதும், நாளமென்கிற தண்டோடு கூடியிருப்பதும், இரவியின் கதிர்களால் மலரப்பெற்றதுமான புண்டரீகத்தின் இதழ்போல் நீண்ட திருக்கண்களையுடையவனென்கை. கப்யாஸம் என்கிற இச் சிறு சொல்லால் இவ்வளவு அர்த்தங்கள் எங்ஙனே தோற்றுவிக்கப்படுகின்றனவென்று ஸந்தேஹம் எழக்கூடும். அந்த ஸந்தேஹத்தைத் தீர்க்க கப்யாஸம் என்பதற்குச் செய்யக்கூடிய வ்யுத்பத்திகளை விவரிக்கவேண்டியதாகும். அது கடினமான ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரப்ரக்ரியையாக இருப்பதால் அதை ஸம்ஸ்க்ருதபாஷையி லெழுதிய சில நூல்களில் விவரித்துள்ளோம். அங்குக் கண்டுகொள்வது. எம்பெருமானார் ஆதரித்தருளின அர்த்தங்கள் மூன்றும் கப்யாஸம் என்கிற சப்தஸந்நிவேசத்தில் கிடைத்தவையே யென்பதை பகவத்ராமாநுஜ பக்தர்கள் திடமாகக் கொண்டிருப்பார்கள்.

இங்கு முக்கியமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் விமர்சிக்கவேண்டியதென்னவென்றால், எம்பெருமானார் இவ்வர்த்தங்களை ஆதரித்தருள்வதற்கு ஏதேனும் விசேஷஹேது வுண்டோவென்பதே. இதனை விமர்சிக்கப்புகுந்த சிலர், வேதார்த்த நிர்ணயம் பண்ணவேண்டுவது ஸ்ம்ருதிஇதிஹாஸபுராணாதிகளான உபப்ரும்ஹணங்களைக்

கொண்டாதலால் இதிஹாஸ ச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தில் * ராம: கமலபத்ராக்ஷஸ் ஸர்வஸத்வமநோஹர: * என்கிற ஹநுமத்வசனத்தைக் கொண்டு பகவத்ராமாநுஜர் இவ்வர்த்தத்தை நிர்ணயித்ததாகத் தெரிவிக்கிறார்கள். ஆனால், ஸ்தூலத்ருஷ்டியிலும் ஸூக்ஷ்மத்ருஷ்டியிலும் * கம்பீராம்பஸ்ஸமுத்பூதேத்யாதியான ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திக்கும் * ராம: கமலபத்ராக்ஷ: * என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்திற்கும் யாதொரு சேர்த்தியும் காணமுடியாது. எம்பெருமானைச் செந்தாமரைக் கண்ணனாகப் பேசியிருக்குமிடங்கள் பல்லாயிரமுள்ளன. விவாதாஸ்பதச்ருதியிலும் * புண்டரீக மேவமக்ஷிணீ * என்பதனால் புண்டரீகாக்ஷத்வம் சொல்லப்பட்டேயிருக்கின்றது. ஸ்வாமியினுடைய ஸ்ரீஸூக்தியில் புண்டரீகத்தைச் சொல்லாமல் புண்டரீகதளத்தைச் சொல்லியிருப்பது * கமலபத்ராக்ஷ: * என்பதை யடியொற்றியது என்னலாம். ப்ரக்ருதத்தில் விஷயம் அதுவன்றே. கப்யாஸம் என்னுஞ்சொல்லுக்கு ஸ்வாமி ஆதரித்த அர்த்தங்களுக்கு மூலங்காட்டவேண்டும். * ராம: கமலபத்ராக்ஷ: * என்பது இதற்கு மூலமாகாதென்று முடிந்தது. இனி எது மூலமென்னில் ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்களில் மூலமாகக் காட்டக்கூடியது எதுவுமேயில்லையென்று திடமாகச் சொல்லலாம். ஸ்வாமி யெம்பெருமானார் ஆதரித்தருளும் அர்த்தவிசேஷங்களெல்லாம் ஆழ்வாரருளிச்செயல்களையே மூலமாகக்கொண்டவை யென்பது நம் பூருவாசார்யர்களின் ஸித்தாந்தம். அந்த அடிப்படையின் கீழ் அடியேன் ஸ்ரீபாஷ்யாதிகளிலிருந்து பல்பல விஷயங்களையெடுத்து நிரூபித்திருக்கின்றேன். அத்தகைய நிரூபணங்களுள் இது தலையான நிரூபணமென்று கொள்ளக்கடவது. கேண்மின்—

கம்பீராம்பஸ்ஸமுத்பூதமாயும், ஸம்ம்ருஷ்டநாளமாயும், ரவிகரவிகஸிதமாயிருக்கிற புண்டரீகத்தை எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு உவமையாகச் சொல்லுவது பொருத்தமென்று எம்பெருமானாருடைய திருவுள்ளத்திலே தோன்றினது இவ்யப்பிரபந்தங்களில் அவர் ஆழ அவகாஹித்திருந்ததனாலேயே. ஆழ்வார்கள் எம்பெருமானுடைய திருக்கண்ணழகைப்பற்றிப் பேசுமிடங்களில் மேலே காட்டிய மூன்று விசேஷணங்களையும் வெகு அற்புதமாகப் பேசியுள்ளார்கள். அதை அடைவே விவரிக்கிறேன்.

1. கம்பீராம்பஸ்ஸமுத்பூதபுண்டரீக.

ஜலஜமென்றும் அம்புஜமென்றும் அம்போஜமென்றும் நீரஜமென்றும் பேர்பெற்ற புண்டரீகமானது நீரில் நின்றுமுண்டாகாமல் மற்றொன்றினின்று உண்டாக ப்ரஸக்தியில்லாமையாலே " அம்பஸ்ஸமுத்பூத " என்றதன் கருத்து நீரை விட்டுப்பிரியாமலிருக்கையைச் சொல்லுவதேயாம். " தாமரையை அலர்த்தக்கடவ ஆதித்யன்தானே நீரைப் பிரிந்தால் அத்தையுலர்த்துமாபோலே " என்கிற ஸ்ரீ வசன பூஷண ஸ்ரீஸூக்தியும், * கமலம் ஜலாதபேதம் சோஷயதி ரவிர் ந தோஷயதி * என்கிற ப்ரமாணமும் இங்கே அநுஸந்தேயம். நீரைவிட்டுப் பிரியாமலிருக்கிற தாமரைபோன்ற திருக்கண்களையுடையவன் என்றதாயிற்று. இவ்விசேஷணம் " நீரார் கமலம்போல் செங்கண்மாலென்றொருவன் " என்கிற சிறியதிருமடற்பாசுரத்திலிருந்தும், " அழறலர் தாமரைக்கண்ணன் " (58) என்ற திருவிருத்தப் பாசுரத்திலிருந்தும் கொள்ளப்பட்டதென்றுணர்க. " நீரார் கமலம்போல் " என்றவிடத்தில் (நீரார்)

என்ற விசேஷணம் எதுகையின்பத்திற்காக மாத்திரம் இடப்பட்டதன்று. "அழறலர் தாமரைக்கண்ணன்" என்றவிடத்து நம்பிள்ளையீட்டில் * கப்யாஸச்ருதி ஸ்பஷ்டமாகவே உதாஹரிக்கப்பட்டுள்ளது. அவ்விடத்து ஸ்ரீஸூக்தி வருமாறு—"[அழறலர் தாமரைக்கண்ணன்] அழற்றிலே நின்றலர்ந்த தாமரைப்பூப்போலேயிருந்துள்ள திருக்கண்களையுடையவன். * யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ * என்னக் கடவதிறே."

இங்கு வாதிகேஸரியின் ஸ்வாபதேசவுரை வருமாறு—"அழறு என்று அளறு; நீரிலும் சேற்றிலும் நின்று அலர்ந்து செவ்வி மாறாத தாமரைபோன்ற கண்ணையுடையவனென்றபடி."



அடியேனுடைய இவ்யார்த்த தீபிகையுரை—"அழறலர் தாமரைக் கண்ணன்- தாமரைக்கு பங்கஜமென்று வடநூலார் பெயர் கூறுவர்; சேற்றில் முளைப்பது என்று பொருள். இங்கும் அங்ஙனமே அழறலர் தாமரை யெனப் பட்டது. அழறு-சேறு. ......தாமரைப்பூ நீர் நிலையை விட்டு நீங்கினால் வாடிப் போமாதலால் நீர் நிலையிலேயே அலர்ந்து செவ்வி குன்றாதிருக்கிற தாமரைபோன்ற திருக் கண்களை யுடையவன் என்றவாறு."

ஆக, 'நீரார் கமலம்போல் செங்கண் மாலென்றொருவன்' என்ற சிறிய திருமடற் பாசுரத்தையும், 'அழறலர் தாமரைக் கண்ணன்' என்ற திருவிருத்தப் பாசுரத்தையும் * தண் பெருநீர்த் தடங் தாமரை மலர்ந்தாலொக்கும் கண் பெருங் கண்ணன் * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தையும் திருவுள்ளம்பற்றி 'கம்பீராம்பஸ்ஸமுத்பூத' என்ற விசேஷணத்தை ஸ்வாமி யிட்டருளினாரென்றது பொருத்தமாக முடிந்தது.

நீரை விட்டுப் பிரிந்த தாமரைக்கு சோபையில்லாதது போலவே நாளத்தை விட்டுப் பிரிந்த தாமரைக்கும் சோபை யில்லாமையாலே தாமரைக்கு நாளத்திலிருப்பும் அவச்ய வக்தவ்யமாயிற்று. இதுவும் ஆழ்வாரருளிச் செயலிலுள்ளது, திருவிருத்தத்தில் * வன்காற்றறைய * என்கிற பாட்டிலே "எம்பிரான் தடங்கண்கள்—மென்கால் கமலத் தடம் போல் பொலிந்தன" என்றருளிச் செய்யப்பட்டிருக்கிறது. கமலத்திற்கு இடப்பட்டிருக்கிற 'மென்கால்' என்னும் விசேஷணத்திற்கு 'மெல்லிய நாளத்திலே யிருக்கின்ற' என்பது பொருள். (நாளமாவது தண்டு). கமலத்திற்கு அது கால் போன்றிருத்தலால் (கால்) என்னுஞ் சொல்லால் குறிக்கப் பட்டது. நாளமென்கிற பொருளையே பூருவர்களும் உரைசெய்துள்ளார்கள். ஆக இந்த திவ்ய ஸூக்திக்குச் சேர (ஸம்ம்ருஷ்டநாள) என்றருளிச் செய்யப்பட்டது. இவ்வகையில் மற்றும் பல சங்கதிகளும் காட்டலாம். ஆயினும் இஃதொன்றே போதுமிப்போது.

தாமரை நீரிலிருப்பதாலும் நாளத்திலிருந்தாலும் ஸூர்ய கிரணங்களால் அலர்த்தப்பட்ட நிலையில் தான் எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு ஒப்பாகுமாதலால் இந்த விசேஷணமும் ஆவச்யகமாயிற்று. இதுவும் ஆழ்வாரருளிச் செயலிலுள்ளது. திருவாய்மொழியில் (5-4-9) * செஞ்சுடர்த் தாமரைக் கண் செல்வன் * என்றுள்ள பாசுரம் இங்கே கொள்ளக் கடவது. இவ்விடத்து ஈட்டில் * கப்யாஸச்ருதியை உதாஹரித்தருளியுமிருக்கவேண்டியது முண்டு. இதில் * செஞ்சுடர்த் தாமரை * என்

என்ற விசேஷணம் எதுகையின்பத்திற்காக மாத்திரம் இடப்பட்டதன்று. "அழறலர் தாமரைக்கண்ணன்" என்றவிடத்து நம்பிள்ளையீட்டில் * கப்யாஸச்ருதி ஸ்பஷ்டமாகவே உதாஹரிக்கப்பட்டுள்ளது. அவ்விடத்து ஸ்ரீஸூக்தி வருமாறு—" [அழறலர் தாமரைக்கண்ணன்] அழற்றிலே நின்றலர்ந்த தாமரைப்பூப்போலேயிருந்துள்ள திருக்கண்களையுடையவன். * யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ * என்னக்கடவதிறே."

இங்கு வாதிகேஸரியின் ஸ்வாபதேசவுரை வருமாறு—" அழறு என்று அளறு; நீரிலும் சேற்றிலும் நின்று அலர்ந்து செவ்வி மாறாத தாமரைபோன்ற கண்ணையுடையவனென்றபடி."

அடியேனுடைய இவ்யார்த்த தீபிகையுரை—" அழறலர் தாமரைக் கண்ணன்-தாமரைக்கு பங்கஜமென்று வடநூலார் பெயர் கூறுவர்; சேற்றில் முளைப்பது என்று பொருள். இங்கும் அங்ஙனமே அழறலர் தாமரை யெனப் பட்டது. அழறு-சேறு. ......தாமரைப்பூ நீர் நிலையை விட்டு நீங்கினால் வாடிப் போமாதலால் நீர் நிலையிலேயே அலர்ந்து செவ்வி குன்றாதிருக்கிற தாமரை போன்ற திருக் கண்களை யுடையவன் என்றவாறு."

ஆக, 'நீரார் கமலம்போல் செங்கண் மாலென்றொருவன்' என்ற சிறிய திருமடற் பாசுரத்தையும், 'அழறலர் தாமரைக் கண்ணன்' என்ற திருவிருத்தப் பாசுரத்தையும் * தண் பெருநீர்த் தடந் தாமரை மலர்ந்தாலொக்கு நீண் பெருங் கண்ணன் * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தையும் திருவுள்ளம்பற்றி 'கம்பீராம்பஸ்ஸமுத்பூத' என்ற விசேஷணத்தை ஸ்வாமி யிட்டருளினாரென்றது பொருத்தமாக முடிந்தது.

நீரை விட்டுப் பிரிந்த தாமரைக்கு சோபையில்லாதது போலவே நாளத்தை விட்டு்பிரிந்த தாமரைக்கும் சோபை யில்லாமையாலே தாமரைக்கு நாளத்திலிருப்பும் அவச்யவக்தவ்யமாயிற்று. இதுவும் ஆழ்வாரருளிச் செயலிலுள்ளது. திருவிருத்தத்தில் * வன்காற்றறைய * என்கிற பாட்டிலே " எம்பிரான் தடங்கண்கள்—மென்கால் கமலத் தடம்போல் பொலிந்தன " என்றருளிச் செய்யப்பட்டிருக்கிறது. கமலத்திற்கு இடப்பட்டிருக்கிற 'மென்கால்' என்னும் விசேஷணத்திற்கு 'மெல்லிய நாளத்திலே யிருக்கின்ற' என்பது பொருள். (நாளமாவது தண்டு). கமலத்திற்கு அது கால் போன்றிருத்தலால் (கால்) என்னுஞ் சொல்லால் குறிக்கப் பட்டது. நாளமென்கிற பொருளையே பூருவர்களும் உரைசெய்துள்ளார்கள். ஆக இந்த திவ்ய ஸூக்திக்குச் சேர (ம்ருஷ்டநாள) என்றருளிச் செய்யப்பட்டது. இவ்வகையில் மற்றும் பல சங்கதிகளும் காட்டலாம். ஆயினும் இஃதொன்றே போதுமிப்போது.

தாமரை நீரிலிருப்பதாலும் நாளத்திலிருந்தாலும் ஸூர்ய கிரணங்களால் அலர்த்தப்பட்ட நிலையில் தான் எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு ஒப்பாகுமாதலால் இந்த விசேஷணமும் ஆவச்யகமாயிற்று. இதுவும் ஆழ்வாரருளிச் செயலிலுள்ளது. திருவாய்மொழியில் (5-4-9) * செஞ்சுடர்த் தாமரைக் கண் செல்வன் * என்னுள்ள பாசுரம் இங்கே கொள்ளக் கடவது. இவ்விடத்து ஈட்டில் * கப்யாஸ ச்ருதியை உதாஹரித்தருளியிருக்கவேண்டியது முண்டு. இதில் * செஞ்சுடர்த் தாமரை * என்

பதற்கு செவ்விய சுடரையுடைய தாமரை என்று பொருளாகிறது. அச்செவ்விய
சுடர் அதற்கு எங்ஙனம் வந்ததென்னில், அதற்கு முன்னடியில் "அஞ்சுடர வெய்
யோன்" என்று ஸூர்யனை ப்ரஸ்தாவித்திருக்கையாலே ததீய மென்று காட்டப்
படுகிறது. ஆக, ஸூர்ய ப்ரகாசமடியாக வந்த செவ்விய சுடரை யுடைய தாமரைப்
பூப்போன்ற திருக்கண்களை யுடையவன் என்றதாயிற்று. இந்த ஸ்ரீ ஸூக்தியைத்
திருவுள்ளம் பற்றியே, "ரவிகரவிகஸித புண்டரீக" என்றருளிச் செய்தது. "செந்
தண் கமலக்கண்......, சிவந்த வாயோர் கருமாயிறு அந்த மில்லாக் கதிர் பரப்பி அலர்
ந்த தொக்குமம்மானே" என்கிற திருவாய் மொழிப் பாசுரமும் இங்கு யோஜிக்க
வுரியது. "செங்கமலம் அந்தரஞ்சேர் வெங்கதிரோற்கல்லால் அலராவால்" என்கிற
பெருமாள் திருமொழிப் பாசுரமும் இங்கு நினைக்கத்தக்கது. ஆனால் அப்பாசுரத்தில்
திருக்கண் ப்ரஸ்தாவமில்லாமையாலே அது பரிபூர்ண ப்ரமாணமாகாது. ஆக விப்
படி ஆழ்வார்களினருளிச் செயல்களில் நன்கு ஊன்றியே ஸ்வாமி ராமானுஜர் 'கப்யாஸ
ச்ருதியைப் பரம போக்யமாக நிர்வஹித்தருளினரென்று நிர்ணயிக்கப் பட்ட
தாயிற்று.

## 19. பெரியாழ்வாரும் பரகாலனும்.

"மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங்கூற அவ்தரித்த" என்று
மணவாளமாமுனிகள் அருளிச்செய்தபடியே நம்மாழ்வார்க்கும் திருமங்கையாழ்வார்க்கும் ஒரு
சேர்த்தியிருக்கச்செய்தேயும், பெரியாழ்வார்க்கும் திருமங்கையாழ்வார்க்கும் ஒரு சேர்த்தி
யிருப்பதாகவும் காண்கிறோம். மணவாளமாமுனிகள் யதிராஜவிம்சதியில் "श्रीभट्टनाथपरकाल-
मुखाब्जमित्रं...... यतिराजमीडे— ஸ்ரீ பட்டநாதபரகாலமுகாப்ஜமித்ரம்......யதிராஜமீடே" என்
றருளிச்செய்கிறார். இதில் பெரியாழ்வாரையும் திருமங்கையாழ்வாரையும் சேர்த்துப்பேசி
யிருக்கின்றமை ஸ்பஷ்டமாகவுள்ளது. இயல்சாத்திலும் "வாழியரோ தென்புதுவை வாழி
யரோ தென்குறையல் மாநகரம்" என்று பெரியாழ்வாருடைய திருவவதாரஸ்தலத்திற்கும்
திருமங்கையாழ்வாருடைய திருவவதாரஸ்தலத்திற்கும் ஒரு சேர்த்தி காணப்படாநின்றது.
இராமானுச நூற்றந்தாதியிலும் * சோராதகாதல் பெருஞ் சுழிப்பால் தொல்லைமாலை யொ
ன்றும் பாராது அவனைப் பல்லாண்டென்று காப்பிடும் பான்மையன்தாள் பேராதவுள்ளத்
திராமானுசன் * என்று எம்பெருமானார்க்குப் பெரியாழ்வார் திருவடிகளிலே யுண்டான
ஈடுபாட்டைப் பேசினவுடனே * தண்டமிழ் செய்த §நீலன் தனக்கு உலகிலினியானை யெங்களி
ராமானுசனை * என்று திருமங்கையாழ்வார் பக்கலிலுண்டான ஈடுபாடு பேசப்பட்டிருப்பது
காணலாம். இடையில் * தாழ்வொன்றில்லா மறை தாழ்ந்து * என்கிற பாசுரத்தில் ஆண்
டாள் திறத்திலீடுபாடு பேசப்பட்டிருந்தாலும் அது பெரியாழ்வாரிலே அந்தர்ப்பூதமே யொழி
யத் தனிப்பட்ட விஷயமன்றென்று கொள்க.

§ நீலன்— திருமங்கையாழ்வார்.

ஆக விப்படி இருக்கக் கூடிய விஷயங்களால் பெரியாழ்வார்க்கும் திருமங்கையாழ்வார்க்கும் ஒரு சேர்த்தியைப் பூர்வாசார்யர்கள் திருவுள்ளம் பற்றியிருக்கின்றார்களென்பது தெளிவாகும். இதற்குப் பல காரணங்களுண்டு. அடியேனுடைய சிறிய ஞானத்திற்கு எட்டிய காரணவிசேஷங்களை இங்கு விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன்.

1. பெரியாழ்வார் தென்மதுரை மாநகரில் பாண்டியன் கொண்டாட வந்து சேர்ந்து பரதத்வநிர்ணயம் செய்தருளி ஊர்வலம் வருகையில் பரமபதநாதன் பெரிய திருவடியின் மீதேறி வந்து ஸேவை ஸாதிக்க, அப்போது ஆழ்வார் பல்லாண்டு பாடினார். மல்லாண்ட திண்டோளுக்கும் திருமேனி வண்ணத்திற்கும் திருவாழி திருச்சங்கு முதலானார்க்கும் மங்களாசாஸனம் செய்தருளினார். இது இதிஹாஸத்தாலும் பெரியாழ்வாருடைய ஸ்ரீஸூக்தியாலும் ஸித்தமான விஷயம். ஆழ்வார் தென்மதுரைக்கு எழுந்தருளினதும் அவர்க்கு எம்பெருமான் பெரிய திருவடியின் மீதெழுந்தருளி வந்து காட்சி தந்ததும் இதிஹாஸ ஸித்தம். மற்றது அவருடைய திவ்யஸூக்திஸித்தம். பெரியாழ்வார் திருமொழியின் முடிவில் (5—4—2) * பறவையேறு பரம்புருடா! நீ யென்னைக் கைக்கொண்டபின் * என்று பாசுரமிருக்கையாலே எம்பெருமான் கருடாரூடனாய்வந்து ஸேவை ஸாதித்த விஷயங்கூட ஸ்ரீஸூக்திஸித்தமென்று கொள்ளலாமே யென்னில்; அந்த பாசுரம் மதுரையில் பவனி வரும்போது ஸேவை ஸாதித்தபடியைச் சொல்லுகிறதென்று திண்ணமாகக் கொள்வதற்கு மூலமில்லாமையாலே அது இதிஹாஸஸித்தமென்றோம். அதுவும் ஸ்ரீஸூக்திஸித்தமென்று கொள்ளில் குறையில்லை. இதே விஷயத்தில் திருமங்கையாழ்வாருடைய அநுபவமிருக்கும்படியைக் காணீர்; கேளீர். பெரியதிருமொழியில் (9—2—5) * கோழியுங் கூடலுங் கோயில் கொண்ட * என்கிற பாசுரத்திலும் அதற்கு மேலேயுள்ள (பாசுரம் 8.) * அஞ்சிறைப்புள்ளுமொன்றேறி வந்தார் * என்கிற ஸ்ரீஸூக்தியாலும் இவ்வநுபவங்களெல்லாம் விசதமாகத் தெரிவிக்கப்படுகின்றன. "அஞ்சிறைப்புள்ளுமொன்றேறி வந்தார்" என்பதனால் பெரியதிருவடியின் மீதேறி வந்து காட்சி தந்தருளினது ஸுஸ்பஷ்டமாகக் கூறப்பட்டது. மற்றவிஷயங்களெல்லாம் "கோழியுங் கூடலும்" என்ற முந்தின பாசுரத்தில் பூர்த்தியாகப் பேசப்பட்டுள்ளது. "கோழியுங் கூடலுங் கோயில்கொண்ட" என்றவிடத்து கூடல் என்றது தென்மதுரைக்கு மங்களாசாஸனமான பாசுரம். (கோழியென்றது உறையூர்.) "குன்றமன்ன பாழியந்தோளுமோர் நான்குடையர்" என்றதனால் பெரியாழ்வாரிட்ட மல்லாண்ட திண்டோள் ப்ரஸ்தாபிக்கப்பட்டது. 'வாழியரோ' என்றதனால் பல்லாண்டு பாடினமை வ்யக்தம். "இவர் வண்ண மெண்ணில் மாகடல் போன்றுளர்" என்றதனால் "மணிவண்ணா!" என்று பெரியாழ்வாரிட்ட திருநிறம் ஸூசிதமாயிற்று. "கையில் வெய்ய ஆழியொன்றேந்தியோர் சங்கு பற்றி" என்பதனால் "சுடராழியும் பல்லாண்டு" "அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே" என்றது ஸ்மரிப்பிக்கப்பட்டது.

2. பெரியாழ்வார்க்குத் திருக்கோட்டியூரிலே மஹத்தான அபிநிவேசம். திருப்பல்லாண்டில் * அல்வழக்கொன்று மில்லா அணி கோட்டியர்கோன் அபிமானதுங்கன் செல்வனைப்போலத் திருமாலே நானுமுனக்குப் பழவடியேன் * என்று திருக்கோட்டியூரில் வர்த்தித்த வொரு மஹானைப் புகழ்ந்து பேசியிருப்பதும் திருக்கோட்டியூரில் ப்ராவண்யாதிசயத்தினாலே. திருமங்கையாழ்வார் தாமும் திருக்கோட்டியூரில் தம்முடைய ப்ராவண்யாதிசயத்தைக் காட்டினார்; எப்படி காட்டினாரென்னில்; பதிகம்பாடி திவ்யதேசங்களை யநுபவித்து வருகையில் திருக்கோட்டியூரைப் பாடினபிறகு மற்றொரு திவ்யதேசத்தைப் பாடலாகாதென்று தம்முடைய மங்களா

சாஸனத்தை அந்த திருப்பதியோடே நிறுத்தினர். திருக்குறுங்குடி முதலான சில திவ்யதேசங்களை திருக்கோட்டியூர்க்கு அப்பால் விளங்கச் செய்தேயும் அத் திருப்பதிகளின் அநுபவத்தைத் திருப்பல்லாண்டியோடே சேர்த்து முடித்துக்கொண்டு * எங்களெம்மிறை யெம்பிரான் * என்கிற திருக்கோட்டியூர்ப் பதிகத்தையே மங்களாசாஸனத்தில் முடிவாக வைத்திட்டது பெரியாழ்வாரிடத்து அபிநிவேசத்தினலென்க.

3. வடநாட்டுத் திருப்பதிகளை மங்களாசாஸனம் செய்தவர் பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாருமாக இருவருமேயாவர். இதற்கு முதலில் பெரியாழ்வாரே வழிகாட்டினவர்; * வடதிசை மதுரை சாளக்கிராமம் வைகுந்தம் துவரையயோத்தி, இடமுடை வதரி யிடவகை யுடைய எம் புருடோத்தமனிருக்கை கண்டமென்னுங்கடிநகரே * என்றிவை முதலான பாசுரங்களினால் பெரியாழ்வார் காட்டிக்கொடுத்த வடநாட்டுத் திருப்பதிகளைத் திருமங்கையாழ்வார் விசேஷித்து அநுபவித்தார்

4. திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தின் பெருமையை பெரியாழ்வார் திருப்பல்லாண்டில் பல பாசுரங்களினால் காட்டியும் பெரியாழ்வார் திருமொழியிலும் பல பல பாசுரங்களினால் விஸ்தரித்தும் போந்தார்; அதை யநுஸரித்தே திருமங்கையாழ்வார் * வாடினேன் வாடி * * கிடந்தநம்பி குடந்தைமேவி * முதலான பதிகங்களினால் திருவஷ்டாக்ஷரத்தின் பெருமையைப் பரக்கப் பேசினர்.

5. கண்ணபிரானுடைய இளம்பிள்ளைத் தனத்திலநுபவம் பெரியாழ்வார் தாம் விசேஷமாகச் செய்தருளினது. கண்ணனை யசோதைப்பிராட்டி பாவனையால் இடுப்பில் வைத்துக் கொண்டு அம்புலியழைத்தல், செங்கீரையாடுகவென்று வேண்டுதல், சப்பாணிகொட்டா வென்னுதல், அம்மமுண்ணவாராயென்று ஸ்தந்யபானத்திற்கழைத்தல், நீராட்டுதல், பூச்சூட்டுதல், கண்ணன் தீம்புகளைக் கொள்ளை கொள்ளையாகச் சொல்லி யநுபவித்தல் ஆகிய இவையெல்லாம் பெரியாழ்வாரிடமே காண்பது. இங்ஙனமே இவை திருமங்கையாழ்வாரிடத்திலும் காண்பதுண்டு. * செக்கரிளம் பிறைதன்னை வாங்கி நின் கையில் தருவன் * என்ற பாசுரத்தினால் அம்புலிப்பருவத்தை யநுபவித்தார். * பூங்கோதையாய்ச்சி பதிகத்தினால் சப்பாணிகொட்டாயென்றார், * சந்தமலர்க்குழல் பதிகத்தினால் அம்மமுண்ணவாராயென்றழைத்தார். * அன்பினால் ஞானநீர்கொண்டு ஆட்டுவனடியனேனே * என்று நீராட்டினர்; * தூயமாமாலைகொண்டு சூட்டுவன் தொண்டனேனே * என்று பூச்சூட்டினர் * மானமுடைத்து உங்களாயர்குலம் * காதில் கடிப்பிட்டு * முதலிய பதிகங்களினால் கண்ணன் தீம்புகளைக் கொள்ளை கொள்ளையாகச் சொல்லி யநுபவித்தார்.

6. கோபீவஸ்த்ராபஹரணம் என்கிற வொரு சேஷ்டிதத்தை * கோழியழைப்பதன் முன்னம் பதிகத்தினால் ஆண்டாள் அநுபவிப்பதிருக்கட்டும்; ஆழ்வார்களில் யாரேனுமநுபவித்தாருண்டோவென்று கேட்டால் பெரியாழ்வாரநுபவித்தாரென்ன வேணும். * ஆற்றிலிருந்து விளையாடுவோங்களைச் சேற்றாலெறிந்து வளைதுகில் கைக்கொண்டு * எங்கள் பூம்பட்டுக்கொண்ட அரட்டன் * என்றிவை முதலான பாசுரங்களினால் பெரியாழ்வாருடைய அநுபவம் காண்கிறோம்; அடுத்தபடியாக இவ்வநுபவம் திருமங்கையாழ்வார் பக்கலிலேதான் காண்பது. * துளையார் கருமென் குழலாய்ச்சியர் தம் துகில் வாரியும் * அங்ஙனுந் தீமைகள் செய்வர்களோ நம்பீ! ஆயர்மடமக்களை, பங்கயநீர் குடைந்தாடுகின்றார்கள் பின்னே சென்

சாஸனத்தைத அந்தத் திருப்பதியோடே நிறுத்தினர். திருக்குறுங்குடி முதலான சில திவ்யதேசங்கள் திருக்கோட்டியூர்க்கு அப்பால் விளங்கச் செய்தேயும் அத் திருப்பதிகளின் அநுபவத்தைத் திருப்புல்லாணியோடே சேர்த்து முடித்துக்கொண்டு * எங்களெம்மிறை யெம்பிரான் * என்கிற திருக்கோட்டியூர்ப் பதிகத்தையே மங்களாசாஸனத்தில் முடிவாக வைத்திட்டது பெரியாழ்வாரிடத்து அபிநிவேசத்தினலென்க.

3. வடநாட்டுத்திருப்பதிகளை மங்களாசாஸனம் செய்தவர் பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாருமாக இருவருமேயாவர். இதற்கு முதலில் பெரியாழ்வாரே வழிகாட்டினவர்; * வடதிசை மதுரை-சாளக்கிராமம் வைகுந்தம் துவரை யயோத்தி. இடமுடை வதரி யிடவகை யுடைய எம் புருடோத்தமனிருக்கை—கண்டமென்னுங்கடிநகரே * என்றிவை முதலான பாசுரங்களினல் பெரியாழ்வார் காட்டிக்கொடுத்த வடநாட்டுத் திருப்பதிகளைத் திருமங்கையாழ்வார் விசேஷித்து அநுபவித்தார்

4. திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தின் பெருமையை பெரியாழ்வார் திருப்பல்லாண்டில் பல பாசுரங்களினல் காட்டியும், பெரியாழ்வார் திருமொழியிலும் பல பல பாசுரங்களினல் விஸ்தரித்தும் போந்தார்; அதை யநுஸரித்தே திருமங்கையாழ்வார் * வாடினேன் வாடி * * இடந்தநம்பி குடந்தைமேவி * முதலான பதிகங்களினல் திருவஷ்டாக்ஷரத்தின் பெருமையைப் பரக்கப்பேசினர்.

5. கண்ணபிரானுடைய இளம்பிள்ளைத் தனத்திலநுபவம் பெரியாழ்வார் தாம் விசேஷமாகச் செய்தருளினது. கண்ணனை யசோதைப்பிராட்டி பாவனையால் இடுப்பில் வைத்துக்கொண்டு அம்புலியழைத்தல், செங்கீரையாடுகவென்று வேண்டுதல், சப்பாணிகொட்டாயென்னுதல், அம்மமுண்ணவாராயென்று ஸ்தந்யபானத்திற்கழைத்தல், நீராட்டுதல், பூச்சூட்டுதல், கண்ணன் தீம்புகளைக் கொள்ளை கொள்ளையாகச் சொல்லி யநுபவித்தல் ஆகிய இதெல்லாம் பெரியாழ்வாரிடமே காண்பது. இங்ஙனமே இவை திருமங்கையாழ்வாரிடத்திலும் காண்பதுண்டு. * செக்கரிளம் பிறைதன்னை வாங்கி நின் கையில் தருவன் * என்ற பாசுரத்தினல் அம்புலிப்பருவத்தை யநுபவித்தார். * பூங்கோதையாய்ச்சி பதிகத்தினல் சப்பாணிகொட்டாயென்ருர், * சந்தமலர்க்குழல் பதிகத்தினல் அம்மமுண்ணவாராயென்றழைத்தார். * அன்பினல் ஞானநீர்கொண்டு ஆட்டுவனடியனேனே * என்று நீராட்டினர்; * தாயமாமாலைகொண்டு சூட்டுவன் தொண்டனேனே * என்று பூச்சூட்டினர் * மானமுடைத்துங்களாயர்குலம் * காதில் கடிப்பிட்டு * முதலிய பதிகங்களினல் கண்ணன் தீம்புகளைக் கொள்ளை கொள்ளையாகச் சொல்லி யநுபவித்தார்.

6. கோபீவஸ்த்ராபஹரணம் என்கிற வொரு சேஷ்டிதத்தை * கோழியழைப்பதன் முன்னம் பதிகத்தினல் ஆண்டாள் அநுபவிப்பதிருக்கட்டும்; ஆழ்வார்களில் யாரேனுமநுபவித்தாருண்டோவென்று கேட்டால் பெரியாழ்வாரநுபவித்தாரென்ன வேணும். * ஆற்றிலிருந்து விளையாடுவோங்களைச் சேற்றுலெறிந்து வளைதுகில் கைக்கொண்டு * எங்கள் பூம்பட்டுக்கொண்ட அரட்டன் * என்றிவை முதலான பாசுரங்களினல் பெரியாழ்வாருடைய அநுபவம் காண்கிறேம்; அடுத்தபடியாக இவ்வநுபவம் திருமங்கையாழ்வார் பக்கலிலே தான் காண்பது. * துளையார்கருமென் குழலாய்ச்சியர் தம் துகில் வாரியும் * அங்ஙனுந் தீமைகள் செய்வர்களோ நம்பீ! ஆயர்மடமக்களை, பங்கயநீர் குடைந்தாடுகின்ருர்கள் பின்னே சென்

ருளித்திருந்து, அங்கவர் பூந்துகில் வாரிக்கொண்டிட்டு * என்றிவை முதலான பாசுரங்களிலும் அவ்வநுபவம் அறியத்தக்கது.

7. இந்திரனுக்கிட்ட சோற்றைத் தானே வாரியமுதுசெய்து மாரிப்பகை புணர்த்த கதையைப் பெரியாழ்வாரொருவரே பரக்கப் பேசினார்; குன்றெடுத்தானென்று பல ஆழ்வார்களும் பேசியிருந்தாலும் பூர்வவ்ருத்தாந்தத்தைப் பெரியாழ்வார் தாம் * கேட்டறியாதன கேட்கின்றேன் * அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் முதலான பாசுரங்களினால் பரக்கப் பேசினார். திருமங்கையாழ்வாரும் * ஆயிரங்கண்ணுடை யிந்திரனுக்கென்று ஆயர் விழவெடுப்ப, பாசன நல்லன பண்டிகளால் புகப்பெய்தவதனையெல்லாம், போயிருந்தங் கொரு பூதவடிவு கொண்டு * உன்னதேதான் பூதமாய் ஆயர்விழவின்கண், துன்னுசகடத்தால் புக்க பெருஞ்சோற்றை முன்னிருந்து முற்றத் தான் துற்றிய தெற்றனவும் * என்றிவை முதலான பாசுரங்களிலும் விரிவாக அநுபவித்தார்.

8. பெரியாழ்வார் * நல்லதோர் தாமரைப் பொய்கையிலே " இல்லம் வெறியோடிற்றாலோ என்மகளை யெங்குங்காணேன், மல்லரையட்டவன் பின்போய் மதுரைப்புறம் புக்காள்கொலோ" என்று, தாய்ப்பேச்சில் மகள் கணவனோடுடன் சென்றதாகச் சொல்லி யநுபவித்தார். "ஒரு மகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால், திருமகள்போல வளர்த்தேன் செங்கண்மால் தான் கொண்டு போனான்" என்ற பாசுரத்திலும் எம்பெருமான் தானே வலிந்து அபஹரித்துப்போனமையை நன்கு வெளியிட்டார். திருமங்கையாழ்வார்க்கும் இவ்வநுபவமே * கள்வன் கொல் யானறியேன் * என்கிற திருமொழியில் செல்லாநின்றது. * கரியானொரு காளை வந்து வள்ளியினைக் கைப்பற்றி யழைத்துக்கொண்டு போனதாகவாயிற்று சொல்லப்படுகிறது. * மல்லரையட்டவன் பின் போய் மதுரைப்புறம் புக்காள் கொலோ * என்கிறார் பெரியாழ்வார்; * அவனைப்பின் நடந்து வயலாலிபுகுவர் கொலோ * என்கிறார் திருமங்கையாழ்வார். * உண்ணுஞ்சோறு பருகு நீர் திருவாய்மொழியில் நம்மாழ்வாருடைய அநுபவம் இப்படிப்பட்டதன்று. அது, தலைமகளின் தனிப்போக்கான அநுபவம்; பெரியாழ்வார் திருமங்கையாழ்வார்களின் அநுபவம் உடன்போக்கு.

9. ஒருவர் பேசச் செய்தேயும் இருவர் பேச்சுப் போலப் பாசுரம் பாடுவது பெரியாழ்வார்க்கும் திருமங்கையாழ்வார்க்கு மொக்கும். பெரியாழ்வார் திருமொழியில் * என்னாதன் தேவிக்கு * கதிராயிரமிரவி * இப்பதிகங்களிரண்டும் இருவர் பாசுரம்போலமைந்தவை. திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியிலும் * மானமரு மென்னோக்கி * என்கிற பதிகம் இத்தகைத்தே.

10. திருமலைகளைப்பற்றிப் பாசுரம் பேசும்போது அவ்விடத்து நிகழ்ச்சிகளைக் கூறுமிடத்து இழிபிறப்பாளருங்கூட தங்களுடைய உணவுகளை எம்பெருமானுக்கு நிவேதனம் செய்தே புஜிப்பதாகக் கூறுகின்றமை பெரியாழ்வாரிடத்திலும் திருமங்கையாழ்வாரிடத்திலுமே கண்டது. திருமாலிருஞ்சோலைக்குப் பதிகம் பாடுகின்ற பெரியாழ்வார் * சிந்தப்புடைத்துச் செங்குருதி கொண்டு பூதங்கள் அந்திப்பலிகொடுத்து ஆவத்தனஞ்செய் அப்பன் மலை * என்றும் * புனத்தினைக் கிள்ளிப் புதுவவிக் காட்டி உன் பொன்னடி வாழ்கவென்று, இனக்குறவர் புதியதுண்ணுமெழில் மாலிருஞ்சோலை யெந்தாய் * என்றும் அருளிச்செய்ததை யடியொற்றித் திருமங்கையாழ்வார் சிங்கவேள் குன்றப்பதிகத்தில் * பைங்கணானைக் கொம்பு

றௌளித்திருந்து, அங்கவர் பூந்துகில் வாரிக்கொண்டிட்டு * என்றிவை முதலான பாசுரங்களினால் அவ்வநுபவம் அறியத்தக்கது.

7. இந்திரனுக்கிட்ட சோற்றைத் தானே வாரியமுதுசெய்து மாரிப்பகை புணர்த்த கதையைப் பெரியாழ்வாரொருவரே பரக்கப் பேசினர்; குன்றெடுத்தானென்று பல ஆழ்வார்களும் பேசியிருந்தாலும் பூர்வகதாஸந்தர்ப்பத்தைப் பெரியாழ்வார் தாம் * கேட்டறியாதன கேட்கின்றேன் * அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் முதலான பாசுரங்களினால் பரக்கப் பேசினர். திருமங்கையாழ்வாரும் * ஆயிரங்கண்ணுடைய யிந்திரனுக்கென்று ஆயர் விழவெடுப்ப, பாசன நல்லன பண்டிகளால் புகப்பெய்தவதனையெல்லாம், ·போயிருந்தங் கொரு பூதவடிவு கொண்டு * அன்னதோர் பூதமாய் ஆயர்விழவின்கண், துன்னுசகடத்தால் புக்க பெருஞ்சோற்றை, முன்னிருந்து முற்றத் தான் துற்றிய தெற்றனவும் * என்றிவை முதலான பாசுரங்களினால் விரிவாக அநுபவித்தார்.

8. பெரியாழ்வார் * நல்லதோர் தாமரைப் பொய்கையிலே " இல்லம் வெறியோடிற்றோலோ என்மகளை யெங்குங்காணேன், மல்லரையட்டவன் பின்போய் மதுரைப்புறம் புக்காள் கொலோ" என்று, தாய்ப்பேச்சில் மகள் கணவனோடுடன் சென்றதாகச் சொல்லி யநுபவித்தார். "ஒரு மகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால், திருமகள்போல வளர்த்தேன் செங்கண்மால் தான் கொண்டு போனான்" என்ற பாசுரத்தினாலும் எம்பெருமான் தானே ஸ்வீகரித்துப்போனமையை நன்கு வெளியிட்டார். திருமங்கையாழ்வார்க்கும் இவ்வநுபவமே * கள்வன் கொல் யானறியேன் * என்கிற திருமொழியில் செல்லாநின்றது. * கரியானொரு காளை வந்து வெள்ளிவளைக் கைப்பற்றி யழைத்துக்கொண்டு போனதாகவாயிற்று சொல்லப்படுகிறது. * மல்லரையட்டவன் பின் போய் மதுரைப்புறம் புக்காள் கொலோ * என்கிறார் பெரியாழ்வார்; * அவன் பின் நடந்து வயலாலிபுகுவர் கொலோ * என்கிறார் திருமங்கையாழ்வார். * உண்ணுஞ்சோறு பருகு நீர் திருவாய்மொழியில் நம்மாழ்வாருடைய அநுபவம் இப்படிப்பட்டதன்று. அது, தலைமகளின் தனிப்போக்கான அநுபவம்; பெரியாழ்வார் திருமங்கையாழ்வார்களின் அநுபவம் உடன்போக்கு.

9. ஒருவர் பேசச் செய்தேயும் இருவர் பேச்சுப் போலப் பாசுரம் பாடுவது பெரியாழ்வார்க்கும் திருமங்கையாழ்வார்க்கு மொக்கும். பெரியாழ்வார் திருமொழியில் * என்னாதன் தேவிக்கு * கதிராயிரமிரவி * இப்பதிகங்களிரண்டும் இருவர் பாசுரம்போலமைந்தவை. திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியிலும் * மானமருமென்னோக்கி * என்கிற பதிகம் இத்தகைத்தே.

10. திருமலைகளைப்பற்றிப் பாசுரம் பேசும்போது அவ்விடத்து நிகழ்ச்சிகளைக் கூறுமிடத்து இழிபிறப்பாளருங்கூட தங்களுடைய உணவுகளை எம்பெருமானுக்கு நிவேதனம் செய்தே புஜிப்பதாகக் கூறுகின்றமை பெரியாழ்வாரிடத்திலும் திருமங்கையாழ்வாரிடத்திலுமே கண்டது. திருமாலிருஞ்சோலைக்குப் பதிகம் பாடுகின்ற பெரியாழ்வார் * சிந்தப்புடைத்துச் செங்குருதி கொண்டு பூதங்கள் அந்திப் பலிகொடுத்து ஆவத்தனஞ்செய் அப்பன் மலை * என்றும் * புனத்தினைக் கிள்ளிப் புதுவவிக் காட்டி உன் பொன்னடி வாழ்கவென்று, இனக்குறவர் புதியதுண்ணுமெழில் மாலிருஞ்சோலை யெந்தாய் * என்றும் அருளிச்செய்ததை யடியொற்றித் திருமங்கையாழ்வார் சிங்கவேள் குன்றப்பதிகத்தில் * பைங்கணானைக் கொம்பு

கொண்டு பத்திமையால், அடிக்கீழ்ச் செங்கணுளி யிட்டிறைஞ்சும் சிங்கவேள்குன்றமே * என்றருளிச்செய்தார்.

11. திவ்யதேசங்களிலீடுபடுகின்ற அரசர்களைப் புகழ்ந்துபாடுவதென்கிற பத்ததியைப் பெரியாழ்வார் * கொன்னவில் கூர்வேல்கோன் நெடுமாறன் தென்கூடல்கோன் தென்னன் கொண்டாடும் திருமாலிருஞ்சோலையே * பருப்பதத்துக்கயல் பொறித்த பாண்டியர் குலபதி போல் * என்கிற பாசுரங்களினால் காட்டியருளினர். இதைப் பின்பற்றியே திருமங்கையாழ்வார் திருவல்லிக்கேணி, அட்டபுயகரம், பரமேச்சுர விண்ணகரம், திருநறையூர் முதலான திருப்பதிகளுக்கிட்டருளின பதிகங்களில் அவ்வவ்விடங்களிலே ப்ரவணர்களான ப்ரபுக்களைப் புகழ்ந்து பேசியுள்ளார்.

## 20. கேள்விகளின் கருத்து.

எம்பெருமானைப் பல வகையாக அநுபவித்துக் கொண்டு போருகின்ற ஆழ்வார்கள் இடையிடையே எம்பெருமானை நோக்கிச் சில கேள்விகள் கேட்கக் காண்கிறோம். எம்பெருமானிடமிருந்து விடை கிடைக்கப் போகிறதென்கிற நம்பிக்கையினால் செய்த வினாக்களாகத் தோன்றவில்லை. மஹான்கள் நிஷ்ப்ரயோஜனமாகக் கேள்வி கேட்க மாட்டார்கள். கேட்கிற கேள்விகளிலிருந்து ஒரு விலக்ஷணமான அர்த்தம் வெளிவந்து தீரவேணும். ஓரிடத்திலுள்ள வினாவை இங்கெடுத்துக் காட்டி இன்பம் நுகர விரும்புகின்றோம்.

சோழ நாட்டில் சிறுபுலியூரென்பது ஒரு திவ்ய தேசம். அங்கு சல சயனப் பெருமாள் ஸேவை ஸாதித்தருளா நின்றார். பெரிய திருமொழியில் (7-9.) * கள்ளம் மனம் விள்ளும் வகை * என்று தொடங்கும் திருமொழி இத்தலத்தை மங்களாசாஸனம் செய்யும் பதிகம். இதில் ஏழாவது பாசுரம்—

"சேயோங்கு தண் திருமாலிருஞ்சோலைமலையுறையுமாயா! எனக்குரையாயிது மறை நான்கினுளாயோ? தீயோம்பு கைமறையோர் சிறு புலியூர்ச் சலசயனத்தாயோ? உனதடியார் மனத்தாயோ வறியேனே."

என்பது. இதன் பொருளாவது— மிகவுயர்ந்து குளிர்ந்த திருமாலிருஞ்சோலை மலையிலே நித்யவாஸஞ் செய்கின்ற மாயனே! நீ நால்வேதங்களினுள்ளே யிருக்கின்றாயோ? ஹோமத் தீயை வளர்க்கின்ற கையையுடையரான வைதிகர்கள் வாழ்கிற சிறு புலியூரில் சலசயனக் கோயிலினுள்ளாயோ? உனது அன்பர்களின் நெஞ்சிலுள்ளாயோ? அறிகின்றிலேன். எனக்கு இதைத் தெரியவருளிச் செய்யவேணும்—என்பதாம். திருமாலே! நீ வேதங்களிலிருக்கின்றாயா? சிறுபுலியூர்ச் சலசயனக் கோயிலில் இருக்கின்றாயா? அன்பர் தம் உள்ளத்திலிருக்கின்றாயா? இன்னவிடத்திலிருக்கின்றாயென்று தெரியவில்லை; அடியேனுக்கு உண்மை தெரியும்படியருளிச்செய்ய வேணுமென்று கேட்கிற விதற்கு என்ன திருவுள்ளமென்று ஆராயவேண்டும்.

சிறு புலியூர் விஷயமாக அருளிச் செய்யப்படுகிற இத் திருமொழியில் இத் தலத் தெம்பெருமானை விளிக்க வேண்டியிருக்க, 'திருமாலிருஞ்சோலை மலை யுறையும் மாயா!' என்று அழகரை விளித்தது எதற்காகவென்று முன்னம் ஆராயவேண்டும். எம்பெருமான் எங்கும்

நிறைந்த பெருமானென்பதை அல்பஜ்ஞர்களான நாமே அறிந்து கொண்டிருக்கும்போது ஸர்வஜ்ஞரான ஆழ்வார் தெரிந்து கொள்ளாமலிருக்க ப்ரஸக்தியில்லை. ஒரு எம்பெருமான் தானே நால் வேதங்களிலும் திவ்ய தேசங்களிலும் அன்பர்களின் உள்ளத்திலும் மற்றும் பலபல விடங்களிலும் எழுந்தருளியிருப்பது அஸம்பாவிதமன்றே. இவ்வர்த்தத்தை இவ்வாழ்வாரும் மற்றுள்ள ஆழ்வார்களும் தம் தம் திவ்ய ஸூக்திகளில் பல விடங்களில் காட்டியுமிருக்கிறார்களே. அப்படியிருக்க, இங்ஙனே கேள்வி கேட்க வேண்டிய ப்ரஸக்தி என்ன? என்று விமர்சிக்க வேண்டும்.

உண்மையில் இது வினாவன்று; ஆச்சரியமான அநுபவ ப்ரணாளிகளில் இதுவொரு விலக்ஷணமான வகை. சிறுபுலியூர்ப் பெருமானே! என்று விளிக்கவேண்டியிருக்க 'திருமாலிருஞ் சோலைமலையுறையும் மாயா!' என விளித்தது—சிறுபுலியூரிலுறையும் பெருமானும் திருமலையிலுறையும் பெருமானும் ஒருவரே யென்கிற உண்மையைக் காட்டுதற்கேயாம். இதை வடநூலார் 'தர்மி ஐக்யம்' என்பர்கள். ஸ்தானத்தில் பேதமே யொழிய தர்மியில் [எம்பெருமானில்] பேதமில்லை யென்கிற பரமார்த்தம் இத்தகைய விளியினால் விளங்கும். "திருமாலிருஞ் சோலைமலை யுறையும் மாயா! நீ சிறுபுலியூர்ச் சலசயனத்தாயோ?" என்று கேட்டிருக்கிறவிது "சிறுபுலியூர்ச் சலசயனத்துறையுமாயா! நீ திருமாலிருஞ் சோலைமலையிலுள்ளாயோ?" என்கிற கேள்வியிற் காட்டிலும் வேறுபட்டதன்று என்று திண்ணமாக வெண்ணுக.

எங்குமுள்ள பெருமானை 'அங்கிருக்கிறாயா? இங்கிருக்கிறாயா?' என்று விகற்பித்துக் கேட்டிருப்பதானது 'எவ்விடத்திருப்பதில் உனக்கு உகப்பு அதிகம்?' என்று கேட்டதாகக் கொள்ளலாம். இக் கேள்வி போலவே கூரத்தாழ்வான் வரதராஜஸ்தவத்தில் பேரருளாளப் பெருமானை நோக்கி "भक्तानां यद्वपुषि हृदयम्— பக்தாநாம் யத்வபுஷி ஹ்ருதயம்" என்கிற ச்லோகத்தில் கேள்வி கேட்கிறார். பக்தர்களின் ஹ்ருதய புண்டரீகம், ஆனைபத்மம், வேதாந்தம், நம்மாழ்வாருடைய திருமுடி, ஹஸ்திகிரியின் சிகரம் ஆகிய இந்த ஸ்தான விசேஷங்களுக்குள், "ते पादाब्जयोः किम् अतिसुखदम्— தே பாதாப்ஜயோ: கிம் அதி ஸுகதம்?" உன்னுடைய திருவடித் தாமரைகளுக்கு மிகவும் ஸுகாவஹமான இடம் எது? என்று வினவியிருக்கின்றார். அத்தகைய வினாவே இங்கும் விவக்ஷிதம் என்னலாம்.

இப்பாசுரத்தில் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு—"இத்தால் சொல்லிற்றாய்த்து—ஸௌபரி பல வடிவு கொண்டாப்போலே இவ்விடங்கள் தோறும் இனி அவ்வருகில்லை யென்னும்படி குறையற வர்த்திக்கிறபடியைக் காட்டிக் கொடுத்தான்" என்று. (ஸௌபரியின் சரித்திரம் அடுத்த வியாஸத்திலே விவரிக்கப்படுகிறது; அங்கே கண்டு கொள்க.) எம்பெருமான் ஒவ்வோரிடத்திலும் வர்த்திக்கிறபோது "இவ்விடத்தில் மாத்திரமே யுள்ளான்" என்று தோற்றும்படி வர்த்திப்பவன். நம் போல்வார், எம்பெருமான் ஓரிடத்திலிருக்கும்படியைக் காணும்போது மற்றோரிடத்திலிருக்கும் படியைக் காண முடியாது. நம்முடைய கண்ணுக்கு எவ்வளவு காணக்கூடிய சக்தியோ அவ்வளவு காண்போமே யல்லது அதீந்திரியமான விஷயங்களை ஸர்வாத்மநா காணகில்லோம். ஆழ்வார் மயர்வற மதிநலமருளப் பெற்றவராகையாலே, திருமாலிருஞ்சோலையிலிருப்பையும் நால் வேதங்களிலிருப்பையும் சிறுபுலியூரிலிருப்பையும் பக்தர்களின் ஹ்ருதய கமலத்திலிருப்பையும் ஏககாலத்திலே காணப்பெற்றார். இது தாமாகக் காணப்பெற்றதன்று; அவன் தானே தன்னுடைய நிர்ஹேதுக க்ருபையினாலே காட்டிக் கொடுக்கக் காணப்பெற்றது. அதனாலுண்டான ஆனந்தம் உள்ளடங்காமல்

இப்படிப்பட்ட விளைவு யுட்கொண்ட பாசுரமாகப் புற வெள்ள மிட்டதாயிற்று. பிரானே! நீ பலபல விடங்களில் உகந்து எழுந்தருளி யிருக்கு மாற்றை அடியேனுக்கு ஏககாலத்திலே ஸேவை ஸாதிப்பித்த விது என்ன கருணைத்திறம்! என்று வியந்து கூறுவதுதான் இக் கேள்வியின் கருத்து. ... ... ... ...

---

# 21. ஸௌபரியின் கதைச் சுருக்கம்.

ஸௌபரியென்னுமொரு மாமுனிவன் நீர் நிலையிலிருந்துகொண்டு பன்னிரண்டாண்டு தவம் புரியா நின்ற வளவில் அங்கு ஸம்மதனென்கிற மத்ஸ்யாதிபதி தன்னுடைய ப்ரபலகுடும்பங்களோடு கூடிக் களித்து விளையாடா நின்றபடியைக் கண்ணுற்றனொருநாள். கண்ணுற்றதும் 'நாமும் இப்படி குடும்பவாழ்க்கையிற் கூடி நின்று சிற்றின்பம் நுகர்ந்து களித்தாலென்ன?' என்று தோன்றிற்று. குடும்பவாழ்க்கையில் பேராவலுண்டாயிற்று. விவாஹம் செய்துகொள்ளவேணுமென்னுமவாவினால் உடனே நீர் நிலையை விட்டுக் கிளம்பிப் பெண் விசாரிக்கப் புறப்பட்டான். அப்போது மாந்தாதாவென்னு மரசனுக்குப் பல பெண்களிருப்பதாகக் கேள்விப்பட்டு அவனிடஞ்சென்று உன்னுடைய ஐம்பது பெண்களுள் ஒருத்தியை எனக்குக் கன்னிகாதானம் செய்யவேணுமென்று வேண்டினன். அரசன் இவருடைய கிழத்தனத்தையும் குரூபத்தையும் கண்டு பெண் கொடுக்க இசைந்திலன். 'இவர் மஹர்ஷி' யென்று மறிந்தவனாகையாலே பெண் கொடுக்க முடியாதென்றால் நம்மை சபித்து விடுவரோ யென்கிற அச்சமுமுண்டாகப் [illegible] சிந்தைக் கடலில் ஆழ்ந்திருந்தனன். அன்னவனை நோக்கி முனிவர் 'அரசனே! [illegible] பெண்ணாய்ப் பிறந்தவளை எப்படியும் ஒருவனுக்கு விவாஹம் பண்ணிக் கொ[illegible] விரும்பிக்கேட்கிற எனக்குக் கொடுப்பதில் என்ன விசாரம்?' என்றார். அதற்கு அரசன் 'எனக்கொன்றும் ஆக்ஷேபமில்லை; பெண் தானாக விரும்பி வரிக்கும் வரனுக்குக் கன்னிகாதானம் செய்வது எங்கள் குலாசாரம்' என்றனன். அப்படியாகில் பெண்களிருக்குமிடத்திற்கு என்னைப் போகவிடலாமேயென்றார் முனிவர். அதற்கு இசைந்த அரசன் உடனே [illegible] வரவழைத்து அவனோடு கூட முனிவரைக் கன்யா மண்டபத்திற்குப் போக விட்டான். முனிவர் புறப்படும் போதே தமது தவவலிமையினால் லோகோத்தரமான ஸௌந்தர்யம் வாய்ந்த மேனியைப் பரிக்ரஹித்துக் கொண்டு கன்னிகைகளின் முன்னே சென்று நின்றார். நின்றதும் அங்கிருந்த ஐம்பது பெண்களும் நான்தானிவரை [illegible]னிவரை மணந்துகொள்வேனென்று போட்டிபோட்டுக் கொண்டு [illegible] இதைக் காவலாளன் அரசனிடம் சென்று அறிவித்தனன். அரசன் [illegible] ஆச்சரியம்! இதென்ன அற்புதம்! என்று மிகவும் வியந்து ஐம்பது பெண்களையும் முனிவர்க்கே விவாஹம் பண்ணிக் கொடுத்தனன். முனிவரும் விவாஹம் செய்துகொண்டு ஐம்பது மனைவியரையும் தமது ஆச்ரமத்திற்கு அழைத்துக் கொண்டுபோய், சில்பகலாநிபுணனை விச்வகர்மாவை வரவழைத்து வாபீ கூப உத்யானாதி ஸகலாதிசய ஸம்பந்நங்களான ஐம்பது மாடமாளிகைகளை நிர்மாணம் செய்வித்து ஒவ்வொரு மாளிகையில் ஒவ்வொருத்தி மிக வின்பம் மன்னி வாழும்படி செய்வித்தார். தாமும் ஐம்பது வடிவுகளைப் பரிக்ரஹித்து அவர்களிடத்தில் ரமித்துக் கொண்டிருக்கின்றார்.

இப்படிப்பட்ட விஞைவ் யுட்கொண்ட பாசுரமாகப் புற வெள்ள மிட்டதாயிற்று. பிரானே! நீ பலபல விடங்களில் உகந்து எழுந்தருளி யிருக்கு மாற்றை அடியேனுக்கு ஏககாலத்திலே ஸேவை ஸாதிப்பித்த விது என்ன கருணைத்திறம்! என்று வியந்து கூறுவதுதான் இக் கேள்வியின் கருத்து. ... ... ... ...



## 21. ஸௌபரியின் கதைச் சுருக்கம்.



ஸௌபரியென்னுமொரு மாமுனிவன் நீர் நிலையிலிருந்துகொண்டு பன்னிரண்டாண்டு தவம் புரியா நின்ற வளவில் அங்கு ஸம்மதனென்கிற மத்ஸ்யாதிபதி தன்னுடைய ப்ரபலகுடும்பங்களோடு கூடிக் களித்து விளையாடா நின்றபடியைக் கண்ணுற்றுனொருநாள். கண்ணுற்றதும் 'நாமும் இப்படி குடும்பவாழ்க்கையிற் கூடி நின்று சிற்றின்பம் நுகர்ந்து களித்தாலென்ன?' என்று தோன்றிற்று. குடும்பவாழ்க்கையில் பேராவலுண்டாயிற்று. விவாஹம் செய்துகொள்ளவேணுமென்னுமவாவினுல் உடனே நீர் நிலையை விட்டுக் கிளம்பிப் பெண் விசாரிக்கப் புறப்பட்டான். அப்போது மாந்தாதாவென்னு மரசனுக்குப் பல பெண்களிருப்பதாகக் கேள்விப்பட்டு அவனிடஞ்சென்று உன்னுடைய ஐம்பது பெண்களுள் ஒருத்தியை எனக்குக் கன்னிகாதானம் செய்யவேணுமென்று வேண்டினுன். அரசன் இவருடைய கிழத்தனத்தையும் குரூபத்தையும் கண்டு பெண் கொடுக்க இசைந்திலன். 'இவர் மஹர்ஷி' யென்று மறிந்தவனுகையாலே பெண் கொடுக்க முடியாதென்ருல் நம்மை சபித்து விடுவரோ யென்கிற அச்சமுமுண்டாகப்பெற்று சிந்தைக் கடலில் ஆழ்ந்திருந்தனன். அன்னவனை நோக்கி முனிவர் 'அரசனே! சிந்திப்பது எதற்காக? பெண்ணைப் பிறந்தவளை எப்படியும் ஒருவனுக்கு விவாஹம் பண்ணிக் கொடுத்தாகவேண்டும்; விரும்பிக்கேட்கிற எனக்குக் கொடுப்பதில் என்ன விசாரம்?' என்ருர். அதற்கு அரசன் 'எனக்கொன்றுமாக்ஷேபமில்லை; பெண் தானுக விரும்பி வரிக்கும் வரனுக்குக் கன்னிகாதானம் செய்வது எங்கள் குலாசாரம்' என்றனன். அப்படியாகில் பெண்களிருக்குமிடத்திற்கு என்னைப் போகவிடலாமேயென்ருர் முனிவர். அதற்கு இசைந்த அரசன் உடனே அந்தஃபுரக்காவலனை ஷண்டனை வரவழைத்து அவனோடு கூட முனிவரைக் கந்யா மண்டபத்திற்குப் போக விட்டான். முனிவர் புறப்படும் போதே தமது தவவலிமையினுல் லோகோத்தரமான ஸௌந்தர்யம் வாய்ந்த மேனியைப் பரிக்ரஹித்துக் கொண்டு கன்னிகைகளின் முன்னே சென்று நின்ருர். நின்றதும் அங்கிருந்த ஐம்பது பெண்களும் நான்தானிவரை மணந்துகொள்வேன், நான்தானிவரை மணந்துகொள்வேனென்று போட்டிபோட்டுக்கொண்டு மேல் விழுந்தவாறே இதைக் காவலாளன் அரசனிடம் சென்று அறிவித்தனன். அரசன் அதுகேட்டு இதென்ன ஆச்சரியம்! இதென்ன அற்புதம்! என்று மிகவும் வியந்து ஐம்பது பெண்களையும் அம் முனிவர்க்கே விவாஹம் பண்ணிக் கொடுத்தனன். முனிவரும் விவாஹம் செய்துகொண்டு ஐம்பது மனைவியரையும் தமது ஆச்ரமத்திற்கு அழைத்துக் கொண்டுபோய், சில்பகலாநிபுணனை விச்வகர்மாவை வரவழைத்து வாபீ கூப உத்யாநாதி ஸகலாதிசய ஸம்பந்நங்களான ஐம்பது மாடமாளிகைகளை நிர்மாணம் செய்வித்து ஒவ்வொரு மாளிகையில் ஒவ்வொருத்தி மிக வின்பம் மன்னி வாழும்படி செய்வித்தார். தாமும் ஐம்பது வடிவுகளைப் பரிக்ரஹித்து அவர்களிடத்தில் ரமித்துக் கொண்டிருக்கின்ருர்.

இப்படி காலம் செல்லுகையில் ஒரு நாள் மாந்தா தாவெனு மவ்வரசன் பெண்களை க்ஷேமம் விசாரிக்கப் புறப்பட்டு வந்து முதல் மாளிகையிற் புகுந்து அங்கு வாழும் பெண்ணைக் குசலப்ரச்நம் செய்தனன். அவள் தான் ஆச்சரியமான இன்பங்களை யநுபவித்து வருவதாகச் சொல்லித் தன்னுடைய பரமஸந்தோஷத்தைக் கூறி, ஆனால் ஒரு துக்கமிருப்பதாகவுரைத்தாள்— 'உம்முடைய மருமகப்பிள்ளையான முனிவர் எப்போதும் இந்த மாளிகையிலேயே கிடக்கிறார்; இவ்விடம் விட்டுப் பெயர்வதேயில்லை. இதற்காக எனது ஸஹோதரிகள் துக்கித்திருப்பார்களோ என்பதொன்றே எனக்கு துக்கம்' என்றாள்.

அடைவே ஒவ்வொரு மகளையும் க்ஷேமம் விசாரிக்கப் போனவிடத்தில் ஒவ்வொருத்தியும் இவ்வண்ணமாகவே சொல்லக் கேட்ட அரசன் முனிவருடைய ப்ரபாவாதிசயமிது வென்றறிந்து, ஏகாந்தமாக வீற்றிருக்கின்ற அம் முனிவர் பக்கலிலே சென்று பூஜித்துத் தன்னுடைய பரமானந்தத்தைத் தெரிவித்து "மஹாநுபாவரே! உம்முடைய மஹத்தான தபஸ்ஸு ஸித்தியடைந்தவிதம் வாசாமகோசரமாயிருக்கின்றதே! இப்படிப்பட்ட ப்ரபாவத்தை நான் வேறு எந்த மஹர்ஷியிடத்தும் கண்டிலேன்; உம்முடைய தபஸ்ஸித்தி ப்ரபாவம் லோகவிலக்ஷணமாயிரா நின்றதன்றோ;" என்று புகழ்ந்து கூறிச் சில நாள் அங்கே தங்கியிருந்து ஸ்வஸ்தானம் மீண்டனன்.

ஸௌபரி முனிவருக்கு நாளடைவில் நூற்றைம்பது மக்கள் பிறந்தனர். மேன் மேலும் அவர்களுக்குக் குடும்பவாழ்க்கையில் ஆசாபாசம் அளவு கடந்து பெருகிக் கொண்டே சென்றது. ஆசைகள் எவ்வளவு நிறைவேறினாலும் மேன்மேலும் புதிது புதிதான ஆசைப்பெருக்குகள் தோன்றிக்கொண்டே யிருக்கின்றனவேயன்றி ஆசையொழிவது ஈஷத்துமில்லையே யென்று மிகவும் அநுதபித்துக் காடு சென்று சேர்ந்து பரமபுருஷனிடத்திலே மனம் லயித்து முக்தி பெற்றார்.

[ஸ்ரீவிஷ்ணுபுராணம் நான்காவது அம்சம் இரண்டாமத்யாயத்தில் இந்த ஸௌபரிசரிதம் விரிவாகக் காணத்தக்கது.]

---

## 22. பக்தி ப்ரதாநமா? ஆசாரம் ப்ரதாநமா?

உலகில் சிலர் வர்ணாச்ரமாசாரங்களில் ஜாகரூகர்களாயிருப்பர்கள்; ஆனால் அவர்களுக்கு பகவத்பக்தி இல்லை யென்னும் படியாயிருக்கும். சிலர்க்கு பக்தி தலைசிறந்து விளங்கும்; ஆனால் அவர்களுக்கு வர்ணாச்ரமாசாரங்களில் சிறிதும் ச்ரத்தை இல்லாமலிருக்கும். இவ்விரண்டு வகுப்பில் எது சிறந்தது? என்கிற விசாரம் ப்ராப்தமாயிருக்கின்றது. சாஸ்த்ரங்களை ஆராய்ந்து பார்த்தாலோ ஓரிடத்தில் வர்ணாச்ரமாசாரங்களுக்கு ப்ராதாந்யமும், மற்றோரிடத்தில் பக்திக்கு ப்ராதாந்யமும் காண்கிறது. எங்ஙனே யென்னில்;

"श्रुतिः स्मृतिर्ममैवाज्ञा यस्तामुल्लंघ्य वर्तते ।
आज्ञाच्छेदी मम द्रोही मद्भक्तोऽपि न वैष्णवः ॥"

[ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ்தாமுல்லங்க்ய வர்த்ததே,
ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவ:]

என்கிற பகவத்வசனம் ஸுப்ரஸித்தமானது. இதன் பொருள் என்ன வென்றால், வேதங்களும் அவற்றின் உபப்ரும்ஹணங்களும் ஸாக்ஷாத் என்னுடைய கட்டளையே யாகும். அப்படிப்பட்ட ச்ருதிஸ்ம்ருதிகளை மீறி நடப்பவன் என்னுடைய ஆஜ்ஞையை உல்லங்கனம் செய்தவனாதலால் எனக்கு த்ரோஹம் செய்தவனாகின்றான். அவன் என் பக்கலில் பக்தி பூண்டிருந்தாலும் வர்ணாச்ரமாசாரவிரஹித னென்னும் காரணத்தினால் அவைஷ்ணவனே யாவன்—என்பதாம். ஆக இந்த பகவத் வசனத்தினால் வர்ணாச்ரமாசாரமே முக்கியமென்றும், பக்தி முக்கியமன்றென்றும் விளங்கிற்று.

"वर्णाश्रमाचारवता पुरुषेण परः पुमान् ।
विष्णुराराध्यते पन्था नान्यस्तत्तोषकारकः ॥
வர்ணாச்ரமாசாரவதா புருஷேண பர: புமாந்,
விஷ்ணுராராத்யதே பந்தா நாந்யஸ் தத்தோஷகாரக:."

இத்யாத்யநேக வசனங்களும் இதற்கு உபஷ்டம்பகமாகக் காண்கின்றன,

இனி பகவத் கீதையில் கீதாசார்யன் ஸாக்ஷாத்தாக அருளிச் செய்வது பாரீர்; அதில் ஒன்பதாமத்யாயத்தில் (30)—

"अपि चेत्सुदुराचारो भजते मामनन्यभाक् ।
साधुरेव स मन्तव्यः सम्यग् व्यवसितो हि सः ॥"
[அபி சேத் ஸுதுராசாரோ பஜதே மாம் அநந்யபாக்,
ஸாதுரேவ ஸ மந்தவ்யஸ் ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ:.]

என்று, ஆசாரத்திற்கு அப்ராதாந்யமும் பக்திக்கு ப்ராதாந்யமும் கொடுத்துப் பேசப்பட்டிருக்கிறது. இந்த ச்லோகத்தின் கருத்தை நம்முடைய பாஷ்யகாரர் மிக வினிதாக விவரித்தருளுகிறார். அந்த பாஷ்ய ஸூக்தியையே மொழிபெயர்த்தெழுதுகிறோம்;—அந்தந்த ஜாதியில் பிறந்தவர்களுக்கு இன்னது செய்யத்தக்கதென்றும் இன்னது விலக்கத் தக்கதென்றும் சாஸ்த்ரங்களிலே விதிநிஷேதங்கள் காணப்படுகின்றன; அவற்றை அநுவர்த்தியாமல் கடந்தாயினும் யாவனொருவன் நம்மிடத்திலே ஸ்வயம் ப்ரயோஜநமான பக்தியைச் செலுத்துகிறானோ அவனை ஸ்ரீவைஷ்ணவாக்ரேஸரனாக நினைத்து பஹுமானிக்கவேணும். ஏனென்றால், **ஸ: ஸம்யக் வ்யவஸிதோ ஹி.]** இந்த பரமபக்தனுடைய அத்யவஸாயம் மிகச் சிறந்தது. ஸ்ரீமந்நாராயணனையே தனக்குத் தெய்வமாகவும் ஆசார்யனாகவும் தோழனாகவும் பரமபோக்யவஸ்துஸமூஹமாகவும் கொள்ளுகையாகிற அத்யவஸாயம் பிறர்க்கு அரிதாய் இவனுக்கே எளிதாயிருக்கின்றதன்றோ. இப்படிப்பட்ட அத்யவஸாயம் இவனுக்குண்டென்பதை அநந்ய ப்ரயோஜநமாக இவன் செய்யும் நிரந்தர பஜனத்தைக் கொண்டே அறியலாம். இப்படிப்பட்ட பக்தியுக்தனிடத்திலே ஆசார லோபம் இருந்தால் அதுவொரு பெரிய விஷயமாகக் கொள்ளத் தக்கதன்று; அது மிகச் சிறுவிஷயமே யாதலால் அது கொண்டு அநாதரியாமல் விசேஷித்து பஹுமானிக்கத் தக்கவனே—என்பது நம் பாஷ்ய காரருடைய பாஷ்ய ப்ரக்ரியை.

முதலில் உதாஹரித்த * மத்பக்தோபி ந வைஷ்ணவ: * என்ற வசனத்திற்கும் * ஸாதுரேவ ஸ மந்தவ்ய: * என்ற இந்த வசனத்திற்கும் பரஸ்பர விரோத மிருப்பதாகத் தோன்றக் கூடும். பக்தியும் ஆசாரமும் ஸமப்ரதாநமாகையாலே * ந ஹி நிந்தா ந்யாயத்தாலே விரோத சமநம் பண்ணலாமென்று சிலர் சொல்லுவதுண்டு. வஸ்துதஸ்து, வர்ணாச்ரமாசாரத்திற்

காட்டிலும் பக்திக்குத் தான் ப்ராதாந்யம் சாஸ்த்ரகார ஸம்மதம் ... வைஷ்ண வ: * என்ற விடம் போலியான பக்தியை விவக்ஷித்துச் சொன்ன ... ஸதாசார: * என்றவிடம் மன்றி நோக்கப்பட வேண்டும். இங்கு 'மாம் பஜதே ...' என்றவளவோடு நில்லாமல் 'அநந்யபாக்' என்றொரு விசேஷணம் விசேஷித்துள்ளது. இதற்கு சங்கரபாஷ்யத்தில் விசேஷமில்லை. நம் போல்வார்க்குத் தோன்றக் கூடிய பொருளே அதில் உரைக்கப்பட்டுள்ளது; அதாவது "நாந்யபக்த:" என்பது சங்கரோக்தி. மற்றொரு தெய்வத்திடத்தில் பக்தியின்றிக்கே என்னிடத்தில் மாத்திரமே பக்தி செய்பவன் என்றதாயிற்று. இங்கு நம் ஸ்வாமியின் திருவுள்ளம் இப்படிப்பட்டதன்று. "அநந்யபாக்—பஜநைகப்ரயோஜந:" என்பது பாஷ்ய ஸூக்தி; வேறொரு பலனை நெஞ்சாலும் நினையாதவனாய் என்று பொருள்பட அருளிச் செய்தாராயிற்று. உத்தரார்த்தத்திலும் மந்தவ்ய: என்பதற்கு (ஜ்ஞாதவ்ய:) என்று சங்கர பாஷ்யம். (ஸாதுமந்தவ்ய:) என்று ஸ்வாமி பாஷ்யம். பக்தியையே ஸ்வயம் ப்ரயோஜநமாகக் கொண்டிருப்பவன் பக்கலிலே ஆசார வைகல்யம் காணப்பட்டாலும் அந்த பக்தி மிகச் சிறந்ததாகையாலே அவன் ஸாதுவாக பாத்ரமேயாகக் கடவன். வர்ணாச்ரமாசாரங்களைக் கடந்து நிற்பவன் இப்படிப்பட்ட ஸ்வயம் ப்ரயோஜந பக்தியைச் செய்யமாட்டாமல் போலி பக்தியைக் கொண்டிருந்தானாகில் அவன் அவைஷ்ணவனே. இவ்விதமாக யோஜிக்குமளவில் ஒரு விரோதமுமில்லை யென்று கொள்வது.

---

## 23. எம்பெருமானாரும் யாதவப்ரகாசரும்.

நம்முடைய குரு பரம்பராப்ரபாவம் முதலிய நூல்களில், ஸ்வாமி ராமாநுஜர் யாதவப்ரகாசரிடம் வேதாந்தார்த்த ச்ரவணம் பண்ணினதாகச் சொல்லப்படுகிற ஸமாசாரத்தில் நமக்குப் பலவகையான ஆசங்கைகள் தோன்றக் கூடியதுண்டு. எங்ஙனே யென்னில்; (1) ஸ்வாமி இயற்கையிலேயே மிகச்சிறந்த ஸ்ரீவைஷ்ணவோத்தமர் என்பது நிர்விவாதம். ஆளவந்தார் திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தவரான பெரிய திருமலை நம்பியின் ஸஹோதரீ புத்ரரான ஸ்வாமி ஆஜாநபாவந ரென்பதில் யாருக்கும் விப்ரதிபத்தி யிருக்க நியாயமில்லை; அக்காலத்தில் ஆளவந்தார் சதுச்சாஸ்த்ர மஹாவித்வானாயும் ஸகலதர்சநார்த்த ப்ரவசந ஸமர்த்தராயு மெழுந்தருளியிருக்க, அவரிடத்திலே சென்று சேர்ந்து வேதாந்த ச்ரவணம் பண்ணலாமாயிருக்க, சாஸ்த்ர விருத்தமாக ஏகதண்டியாயும் முண்டித மஸ்தகராயும் யஜ்ஞோபவீத ரஹிதராயு மிருக்கிற வொரு விமதரிடத்திலே சென்று உபநிஷத்துக்களை யதிகரித்தது எதனாலே? (2) யாதவப்ரகாசர்க்கு ஸ்வாமி எண்ணெய் தேய்த்ததாகச் சொல்லப்படுகிறது. மஹாஜ்ஞாநிகரான அவர் ஜ்ஞானத்துக்குத் தக்கபடி அநுஷ்டாந சீலராயு மிருந்திருப்பாரே; அவர் ஆச்ரம விருத்தமாக எண்ணெய் தேய்த்துக் கொள்ளுவாரா? அப்படி அவர் எண்ணெய் தேய்த்துக் கொண்டாலும் அவருடைய இனத்தார்கள் பலரிருக்க அந்தத் தொழிலை ஸ்வாமி செய்வானேன்? (3) மேலும், வேதாந்தார்த்தவிசாரணைக்கு அதுவா ஸமயம்? அரையில் காஷாயமு மின்றிக்கே கௌபீந மாத்ர மணிந்து கொண்டு எண்ணெயும் தலையுமாயிருக்கிற காலத்தில் வேதாந்தார்த்த

விசாரத்திற்கு ஔசித்யமேது? (4) கப்யாஸ ச்ருதிக்கு யாதவ ப்ரகாசர் சொன்ன மர்க்கட ப்ருஷ்டப் பொருள் ஏற்கெனவே த்ரமிடாசார்யருடைய க்ரந்தத்திலிருக்கையாலே அதையநுவதித்து யாதவர் சொல்லி யிருந்தால் அதற்காக உஷ்ணோஷ்ணமான கண்ணீர் பெருக ப்ரஸக்தி யுண்டோ? (5) ஸ்வாமி யாதவ ப்ரகாசரிடம் அந்தேவாஸியா யிருந்த காலத்தில் திவ்ய ப்ரபந்தங்களில் பரிசயம் செய்திருக்க ப்ரஸக்தியில்லாமையாலே, கம்பீராம்பஸ் ஸமுத்பூதேத்யாதிகளுக்கு திவ்ய ப்ரபந்தாநுகுண்யத்தை அப்போது திருவுள்ளம் பற்றியிருக்க ஔசித்யமில்லையே. என்றிப்படி பல ஆசங்கைகள் தோன்றலாம். இவற்றுக்கு க்ரமேண பரிஹார முரைத்துவோம்.

(1) ஆளவந்தார் சதுச்சாஸ்த்ரங்களிலும் அத்விதீய மஹாவித்வானாயும் ஸகல தர்சனார்த்த ப்ரவசன ப்ரவீணராயு மெழுந்தருளி யிருந்தாரென்பது வாஸ்தவம். இதில் யாதொரு விப்ரதிபத்தியு மில்லை. ஆனால் அவர் உத்தமாச்ரமியாகையாலே குத்ருஷ்டிகளின் க்ரந்தங்களை ப்ரவசனம் செய்யத்தகாதென்று விட்டிட்டவர். மேலும் ஸ்ரீராமாநுஜருடைய இளமைப் பருவத்தில் அவர் மிகவும் வயோவ்ருத்தராயிருந்தார். அவர் காஞ்சீபுரத்தில் எழுந்தருளித் தேவப்பெருமாளுடைய திருமடைப்பள்ளி ப்ரதக்ஷிண வீதியிலே ஸ்வாமியை * ஆமுதல்வனிவனென்று கடாக்ஷித்து அநுக்ரஹித்தருளுகிற காலத்திலே ஸ்வாமி மிகவும் இளவயதிலிருந்தவர். இப்படிப்பட்ட காரண விசேஷங்களினாலே ஸ்வாமி ஆளவந்தாரிடம் அந்தேவாஸியா யிருக்க ப்ராப்தமாக வில்லை. யாதவப்ரகாசர் சிகாயஜ்ஞோபவீதாதிகளை வர்ஜித்தவராயிருந்தாலும் அவர்களுடைய மதாசாரப்படிக்கு அது கிடக்கட்டுமென்று ஸ்வாமி அந்த வேஷத்திலே கண் செலுத்தாமலிருந்தார். அக்காலத்தில் மதத்வேஷ மென்பது தலையெடுத்தாடாமலிருந்தது. மதத்வேஷம் மிகமிக முற்றின இக்காலத்திலுங் கூட மத பேதங்களையும் வேஷ வேற்றுமைகளையும் பாராமல் அவரவர்கள் யதேச்சமாக வித்யாக்ரஹணம் செய்து போருவதை எங்கும் காணுகின்றோம். மேலும், ஸ்வாமி யாதவ ப்ரகாசருடைய பாண்டித்ய ப்ரபாவங்களைக் கண்டு அவரைத் திருத்திப் பணி கொள்ள வேணுமென்கிற திருவுள்ளத்தை முதலிலேயே கொண்டு விட்டார். அதனாலேயே இரண்டு மூன்று தடவை அவரை விட்டுத் தாம் விலக நேர்ந்துங்கூட அவரோடொட்டிக் கொண்டேயிருந்தார். யதிராஜஸப்ததியில் "स्वबलादुद्धृतयादवप्रकाशः— ஸ்வபலாதுத்த்ருதயாதவ ப்ரகாசः" என்று அக்காலத்திலேயே ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருத்தலால், யாதவ ப்ரகாசரை ஸ்வாமி திருத்திப் பணிகொண்ட கதை அவிச்வஸநீயமென்று இக்காலத்திலே சிலர் சொல்லுவது உண்மைக்கு மாறானது. அக்காலத்தில் யாதவர் ஸகலவிதத்திலும் மஹா ப்ரக்யாதரா யிருந்தவர். அவரை அடிமைப்படுத்திக் கொள்ளும் முகத்தால் ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்திற்கு மிக்க பெரும்புகழ் விளைக்கவேண்டியே ஸ்வாமி அவரை அநுவர்த்தித்திருந்தா ரென்பது தத்துவம். ஸ்வாமியின் ப்ரபாவமும் அவருடைய ஸம்பந்தத்தாலே மிகமிக விளங்கிற்று. எங்ஙனே யென்னில்; ராஜபுத்ரியை ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸு பிடித்து நலிந்து கொண்டிருக்கையில் அதை யோட்டுவதற்காக யாதவர் சிஷ்ய பரிவார ஸமேதராய் ராஜ க்ருஹத்திற்குச் சென்ற வளவிலே அங்கு நடந்த கதை ஸுப்ரஸித்தமானது. * ह्रस्तोऽहं तव सविधोषितादमुष्मात् शेषांशाज्जनमवितुं

कृतावतारात् – த்ரஸ்தோஸ்மி தவ ஸவிதோஷிதாதமுஷ்மாத் சேஷாம்சாஜ் ஜநமவிதும்
க்ருதாவதாராத்" [திவ்யஸூரி சரிதே] என்று சொல்லிற்று ப்ரஹ்மரக்ஷஸ்ஸு.
"யாதவ! உனக்கு நான் அஞ்சமாட்டேன்; இவ்வுலகை ரக்ஷிக்க ஆதிசேஷாம்
சமாய்த் திருவவதரித்திருப்பவரும் உன்னருகே நிற்பவருமான ஸ்ரீராமாநுஜர்க்கே
நான் அஞ்சுவன்" என்று சொல்லிற்று. விந்த்யாடவியிலிருந்து ஓரே ராத்ரியில்
ஸத்யவ்ரத க்ஷேத்திரம் வந்து சேரும்படியான பெருமையும் யாதவப்ரகாசரோடு
ஸம்பந்தித்திருந்த காலத்தில் வெளியாயிற்று. இவ்வாறு அனேக ப்ரபாவாதிசயங்
கள் வெளியாவதற்குப் பாங்காகவும், இத்தகைய வைபவங்களைக் காட்டி யாதவரை
யீடுபடுத்திக் கொள்வதற்காகவுமே ஸ்வாமி அவரை அநுவர்த்தித்திருந்தாரென்பது
வஸ்துஸ்திதி.

(2) உத்தமாச்ரமியாய் அநுஷ்டாந சீலருமான யாதவர் எண்ணெய் தேய்த்துக்
கொள்ளுகிற வழக்கம் வைத்துக் கொண்டிருப்பரா வென்கிற சங்கை மிகச் சிறிது.
"சரீரமாத்யம் கலு தர்மஸாதநம்" ஆகையாலே உத்தமாச்ரமிகளும் சரீரரக்ஷணம்
செய்து கொள்ள ப்ராப்தமாகிறது. நாட்டாரோடியல்வொழிந்து வநேசரர்களா
யிருப்பார் அப்யஞ்ஜந-ஸ்நாந-விரேசநாதிகளை விட்டிருந்தாலும் ஸம்ஸாரிகளி
னிடையே போது போக்குவார்க்கு அவை அநுவர்த்தநீயங்களாகிறபடியைக் காணு
கின்றோம். உபாத்யாயர்க்குக் கைங்கர்யம் செய்வதில் சிஷ்யர்களுக்குக் குதூஹல
மிருப்பது ஸஹஜமாகையாலே, அப்யஞ்ஜநத்தை அவர்க்கு ஸ்வாமி செய்தாரென்
பதில் விப்ரதிபத்தி தோன்ற விரகில்லை. (3) அப்யஞ்ஜந காலத்தில் வேதாந்த ப்ரவ
சநம் நடந்ததாகவோ வேதாந்தார்த்த விசாரம் நடந்ததாகவோ யாரும் சொல்ல
வில்லை. ப்ரஸக்தாநுப்ரஸக்தமான வார்த்தாலாபங்கள் எந்த ஸமயத்திலும் நேரலாம்.
ஏதோ வார்த்தையடைவில் எம்பெருமானுடைய திருக்கண்களைப் பற்றி யாதவர்
ஹேயமாகச் சொல்லி யிருக்கிறா ரென்பது தெரியவருகிறது. 'பகவானுக்கு விக்ர
ஹமே கிடையாதென்றும், விக்ரஹ முள்ளதாகக் கொண்டாலும் அவனுக்கு மர்க்கட
ப்ருஷ்டம் போன்ற கண்ணே யுள்ளதென்றும்' ஏச்சான பேச்சு யாதவர் வாக்கில்
வெளிவந்ததென்பதில் ஸந்தேஹமில்லை. அது கேட்டுப் பொறுத்திருக்க மாட்டா
மையினாலேயே ஸ்வாமிக்கு உஷ்ணோஷ்ணமான கண்ணீர் பெருகிற்று. (4) மர்க்கட
ப்ருஷ்டப் பொருள் த்ரமிடாசார்யருடைய க்ரந்தத்திலுமிருந்தாலும் அங்கிருக்கிற
விதம் வேறு; யாதவர் அதை அநுவதித்த விதம் வேறு. * மச்சொடு மாளிகையேறி
மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி நிச்
சலும் தீமைகள் செய்வாய் * என்று ஆழ்வார்கள் திருவாக்கில் வருமவையே பிறர்
வாக்கில் வந்தால் அஸஹ்யமாகிறபடியை அநுபவத்தில் காணுகின்றோமல்லவா?

(5) ஸ்வாமி யாதவரிடத்தில் அந்தேவாஸியாயிருந்த காலத்தில் திவ்ய ப்ரபந்
தங்களில் அவகாஹமின்றிக்கே யிருந்தாரென்பது அவரை ஒரு ஸாமாந்ய புருஷ
ராக நினைத்துச் சொல்லுகிற வார்த்தையாகும். பவிஷ்யதாசார்யராய் நம்மாழ்வா
ருடைய திருவடிகளிலேயே மதுரகவிகளுக்கு ஸேவை ஸாதித்த ராமாநுஜர் அவதார
புருஷராகையாலே இயற்கையிலேயே ஸகல வித்யா ஸம்பந்நர். கண்ணபிரான்
ஸாந்தீபநிபக்கலிலே போயிருந்து சதுஷ்ஷஷ்டி கலைகளையும் வாசித்தா னென்றால்

அதற்கு முன்னே அவையறியாதிருந்தானென்று பொருளோ? * अपरं भवतो जन्म परं जन्म विवस्वतः। कथमेतद्विजानीयां त्वमादौ प्रोक्तवानिति– அபரம் பவதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத:, கதமேதத் விஜாநீயாம் த்வமாதௌ ப்ரோக்தவாநிதி," என்று அர்ஜுநன் கேட்டது போலே இங்கும் கேட்கலாம். அங்கு வெளிவந்த உத்தரமே இங்கும் வெளிவரத் தகும். * கம்பீராம்பஸ் ஸமுத்பூதேத்யாதி ஸூக்திகளாலே வெளியிடப்பட்ட அர்த்தங்கள் திவ்ய ப்ரபந்தங்களிலே மலிந்திருப்பது அபலபிக்க முடியாமல் தெறியிருக்கிறது. இவ்வர்த்தங்களை ஸ்வாமி ஸூக்திகளில் காணப்படுகின்றன வென்றால் ஸ்வாமிக்கு திவ்ய ப்ரபந்தாவகாஹநம் ஜந்மஸித்தம் என்றே நினைக்கத் தக்கது. * ஆமுதல்வனென்கிற ஆளவந்தாருடைய மங்களாசாஸநம் எதுதான் செய்யாது? ஸ்வாமியினுடைய திவ்ய ப்ரபந்தாவகாஹநம் லோக விலக்ஷணமாக இருந்தபடியினாலன்றோ "எய்ந்த பெருங்கீர்த்தி யிராமானுச முனிதன் வாய்ந்த மலர்ப் பாதம் வணங்குகின்றேன்– ஆய்ந்த பெருஞ் சீரார் சடகோபன் செந்தமிழ் வேதந் தரிக்கும் பேராதவுள்ளம் பெற," என்றும் "எங்கள் கதியே யிராமானுச முனியே, சங்கை கெடுத்தாண்ட தவராசா–பொங்குபுகழ் மங்கையர் கோனீந்த மறையாயிரமனைத்தும் தங்கு மனம் நீ யெனக்குத் தா-" என்றும் லோக விலக்ஷணமான இரண்டு தனியன்கள் அவதரித்தன.

சக்ரவர்த்தித் திருமகன் பருவம் நிரம்பின பின்பு செய்த ஜடாயு மோக்ஷ ப்ரதாநத்திலே ஆக்ஷேப ஸமாதானங்கள் வர்த்தியா நின்றன; கண்ணபிரான் நான்கு பிராயத்திலே செய்த ததிபாண்ட மோக்ஷ ப்ரதாநத்திலே ஆக்ஷேபிப்பாருமில்லை, ஸமாதானம் சொல்லுவாருமில்லை.

* பஞ்சாசார்ய பதாச்ரித * என்று, ஐந்து ஆசார்யர்களிடத்திலே அர்த்தங்கள் கேட்டதாகச் சொல்லப்படுகிற எம்பெருமானார் உபநிஷத்துக்களின் அர்த்தங்களை ஓராசார்யரிடத்திலும் கேட்டதாகத் தெரிய வில்லையே யென்று சிலர் சொல்லுவதுண்டு. * वेदवेद्ये परे पुंसि जाते दशरथात्मजे। वेदः प्राचेतसादासीत्साक्षाद्रामायणात्मना– வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே, வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா," என்கிறபடியே ஸாக்ஷாத் வேத ப்ராதுர்ப்பாவமான ஸ்ரீ ராமாயணத்திற்கும், வேதந் தமிழ் செய்த மாறன் சடகோபன் சொல்லாயிரத்திற்கும் பொருள் கேட்ட விடத்தில் வேதாந்தார்த்தங்கள் தவிர வேறு என்ன கேட்கலாகும்?

"ஆளவந்தார்க்கு ஏகலவ்யன் காணும் நான்" என்றருளிச் செய்த எம்பெருமானார் எந்த ஆசார்யரிடத்திலும் எதுவும் கேட்டிருக்கத் தேவையில்லை யென்பது பரமார்த்தம். வேதாந்த தேசிக விரசித கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகையில் * யத் பதாம்போருஹ ச்லோக வியாக்கியானத்தில் 'ஆளவந்தார்க்கு நான் ஏகலவ்யன்' என்று ஸ்வாமி ஸாதித்ததாக ஸ்பஷ்டமா யெழுதப்பட்டிருப்பதும் காண்க. ஆகவே "यस्य देवे परा भक्तिः यथा देवे तथा गुरौ। तस्यैतेऽकथिता ह्यर्थाः प्रकाशन्ते महात्मनः– யஸ்ய தேவே பரா பக்திர் யதா தேவே ததா குரௌ, தஸ்யைதே அகதிதா ஹ்யர்த்தா: ப்ரகாசந்தே மஹாத்மந:," என்று இலருக்கில் சொன்னபடி ஆசார்ய

பக்தி விசேஷத்தாலே ஸகலார்த்தங்களும் ஸ்புரிக்கப் பெறுகிற உத்தமாதிகாரிகளுக்குள் அக்ரகண்யரான ஸ்வாமி உபநிஷத்துக்களின் ஸித்தாந்தப் பொருள்களை எந்த ஆசார்யனிடத்தில் க்ரஹித்தாரென்று கேட்பதுதானும் அநுசித மென்னக் குறையில்லை. சில ஆசார்யர்களின் பக்கலிலே சில கேட்டதாகச் சொல்லி யிருப்பதும் லோகமர்யாதைக்குச் சேரவாமத்தனை. வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகள் ஸம்ஸ்க்ருதம் யாரிடத்தில் வாசித்தார்களென்றும், ஆழ்வார்கள் தமிழ் யாரிடத்தில் கற்றார்களென்றும் கேட்பது போன்ற கேள்விகளுக்குச் செவி கொடுப்பதுதானும் அபசாரமாகும். ... ... ... ...

—o—

## 24. வேதமே பரம ப்ரமாணம்.

நாம் எந்த அர்த்தத்தை அறுதியிடவேணுமானாலும் ஒரு பிரமாணத்தைக் கொண்டே அறுதியிடவேண்டி யிருக்கிறது. "मानाधीना मेयसिद्धिः– மாநாதீநா மேயஸித்தி:." என்பது சாஸ்த்ரஜ்ஞர்களின் கோஷ்டியில் பிரஸித்தமான தொரு வார்த்தை. மாந மென்றது ப்ரமாண மென்றபடி. மேயமென்றது ப்ரமேய மென்றபடி. 'ப்ரமாணாதீநா ப்ரமேயஸித்தி:' என்றதாகத் தேறிற்று. யதார்த்த ஜ்ஞான முண்டாவதற்கு ஸாதனமானது எதுவோ அதுதான் ப்ரமாண மெனப்படுகிறது. ப்ரத்யக்ஷம் அநுமாநம் என்னுமிவையும் ப்ரமாணமானாலும் அவை துர்பல ப்ரமாணங்களே யாகும்; சாஸ்த்ரமொன்றே ப்ரபல ப்ரமாணமாகும். இதைச் செய்; இதைச் செய்யாதே யென்று விதி நிஷேத ரூபமான கட்டளைகளை வெளியிடுவது எதுவோ; அதுவே சாஸ்த்ர மெனப்படும். "वेदाच्छास्त्रं परं नास्ति– வேதாத், சாஸ்த்ரம் பரம் நாஸ்தி" என்று வ்யாஸ மஹர்ஷி சபதம் பண்ணிக் கூறியிருக்கையாலே வேதத்திற்கு மேற்பட்ட சாஸ்த்ர மில்லை யென்பது வைதிகர்களின் கொள்கை. நம் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் இக்கொள்கையையே வெளியிட்டுள்ளார்கள். "உளன் சுடர் மிகு சுருதியுள்" என்றார் நம்மாழ்வார்; * आदौ वेदाः प्रमाणम्– ஆதௌ வேதா: ப்ரமாணம் * என்றார் பட்டர். வைதிகர்களான நாம் ஸ்ம்ருதி இதிஹாஸ புராணாதிகளையும் ப்ரமாணமாகக் கொள்பவர்களே யானாலும், அவை ஸ்வத: ப்ரமாணமல்ல; பரத: ப்ரமாணம் எனப்படும். வேதம் ஸ்வத: ப்ரமாண மென்று ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது.

வேத மென்கிற சொல்லுக்குப் பொருள் என்னவென்றால், वेदयतीति वेदः– வேதயதீதி வேத:—தெரிவிப்பது வேதம். எதைத் தெரிவிப்பது என்றால், ப்ரத்யக்ஷத்தாலும் அநுமாநத்தினாலும் தெரிந்து கொள்ளமுடியாத விஷயங்களை யெல்லாம் தெரிவிப்பது என்றபடி. "विदन्ति अनेनेति वेदः– விதந்தி, அநேநேதி வேத:" என்றதுமுண்டு. இதற்கு காரண வ்யுத்பத்தி யென்று பெயர். "प्रत्यक्षेणानुमित्या वा यस्तूपायो न बुध्यते । यत्तं विदन्ति वेदेन तस्माद्वेदस्य वेदता– ப்ரத்யக்ஷேணாநுமித்யா வா யஸ்தூபாயோ ந புத்த்யதே, யத் தம் விதந்தி வேதேந தஸ்மாத் வேதஸ்ய வேததா." என்றார்கள் மஹர்ஷிகளும். இந்த வசனத்தின் பொருளையே கீழே நாம் வெளியிட்டது. ஆக, ஸகலார்த்தங்களையும் வெளியிடுவதாய் அத ஏவ வேத மென்று பேர் பெற்றதான ப்ரமாண ரத்நத்திற்குப் பல பெருமைகளுள்ளன.

அவையாவன—அபௌருஷேயத்வம் நித்யத்வம் நிர்தோஷத்வம் அநந்தத்வம் என்னு மிவை. இவற்றை அடைவே விவரிக்கிறோம். அபௌருஷேயத்வமாவது ஒருவராலும் செய்யப்படாததா யிருக்கை. ஒரு புருஷனால் இயற்றப்பட்டது பௌருஷேய மெனப்படும்; அங்ஙனல்லாதது அபௌருஷேயம். வேதம் ஒருவராலுமியற்றப் படாததாகையாலே அபௌ ருஷேய மெனப்படுகிறது. புருஷனாலியற்றப்படாதது என்றதைக் கேட்டவுடனே சிலர் 'வேதம் ஸ்த்ரீயாலியற்றப் பட்டது போலும்' என்று பேசத் தலைப்படுகிறார்கள். இங்கு புருஷசப்த மானது ஸ்த்ரீ புமான்களாகிய சேதந ஸாமான்யத்தைச் சொல்லுவதாகையாலே ஒரு நபராலும் இயற்றப்பட்டதன்று என்னும் பொருளிலேயே அபௌருஷேயமென்கிற சொல் தோன்றி யுள்ளது. இனி, அபௌருஷேயமாயிருக்க எப்படி முடியும்? என்கிற ஆக்ஷேபத்தைச் சிறிது விவரிப்போம். அநேக சப்தங்களின் ராசியே யன்றோ வேதமெனப்படுகிறது; கண்டம் தாலு பல் உதடு முதலிய முகத்திலுள்ள உறுப்புகளினின்று வெளியாகும் ஒலியே யல்லவா சப்தம்; ஒவ்வொரு சப்தமும் புருஷனால் செய்யப்பட்டுத் தானே வெளியாகின்றது. புருஷன் வெறு மனே யிருந்தானாகில் சப்தம் வெளிவரவே முடியாதன்றோ. ஆகவே வேதமாகிற சப்தராசிகளும் புருஷனால் உண்டாக்கப்பட்டுப் பௌருஷேயமாகத்தானே யிருக்க வேண்டும்; அபௌருஷேய மென்று எங்ஙனே சொல்லலாம்? என்பது சிலருடைய ஆக்ஷேபம்; அல்லது ஆசங்கை இதற்கு ஸமாதானம் கூறுவோம்.

## 25. வேதத்தின் அபௌருஷேயத்வம்.

பௌருஷேய மென்று யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்ற நூல்களுள் ஒன்றை யெடுத்துக் கொள்வோம். ஸ்ரீராமாயணம் வான்மீகி முனிவராலியற்றப் பட்ட தென்கிறோம். இதிலிருந்து "இயம் ஸீதா மம ஸுதா" என்கிற வொரு ச்லோகத்தைக் கொள்வோம். இதில் இயம், ஸீதா, மம, ஸுதா என்கிற பதங்கள் வரிசையாகத் தொடுக்கப்பட்டிருக்கின்றன. இப் பதங்கள் வான்மீகி முனிவரால் புதிதாக வுண்டாக்கப்பட்டவை யல்ல வென்பது அனைவரு மறிந்ததே. ஆனால் வான்மீகி முனிவர் செய்த தென்ன? தான் வெளிப்படுத்தக் கருதிய பொருள்களை வெளிப்படுத்துவதற்கு வேண்டியபடி பதங்களை முன்பின்னாகச் சேர்த்துப் பிணைத் ததே வான்மீகி செய்த காரியம் இதைக் கொண்டே நாம் ஸ்ரீராமாயணம் வான்மீகி செய்த தென்றும் மற்றொன்று மற்றொருவர் செய்ததென்றும் வழங்கிவருகிறோம். அஸ்மதாதிகளால் இயற்றப்படுகிற க்ரந்தங்கள் வரையில் உலகில் பௌருஷேயங்களாகச் சொல்லப்பட்டு வருகிற எல்லா நூல்களுக்கும் இதுவே நியாயம்.

இனி, அபௌருஷேயமாகச் சொல்லப்படுகிற வேதத்திலிருந்து ஒரு வாக்கியத்தை யெடுத்துக் கொள்ளுவோம். "शं नो मित्रः शं वरुणः— சம் நோ மித்ரச் சம் வருண :." என்னும் வாக்யத்தைக் கொள்வோம். இதிலுள்ள பதங்களை இப்பொழுது காணப்படும் வரிசைக்கிரம மாகச் சேர்த்தது யார்? என்று ஆராய வேண்டும். அப்படி சேர்த்துப் பிணைத்தவர் யாராவது இருப்பரேயானால் அவரே வேதங்களைச் செய்தவர் எனத் தகும். ஆனால் அப்படிப் பட்டவர் ஒருவருமிலர், ஏனெனில், அப்படிப் பட்டவர் யாரேனு மொருவரிருப்பாராயின், மஹாபாரதம் ஸ்ரீராமாயணம் முதலிய க்ரந்தங்களைச்செய்த வியாஸர் வால்மீகி முதலியவர் களின் பெயர்களைப் பரம்பரையாக நாம் எப்படிச் சொல்லி வருகிறோமோ அப்படி வேதகர்த் தாவின் பெயரும் சொல்லி வந்திருக்கவேணும். உண்மையில் வேதகர்த்தாவாக ஒருவர்

இருந்திருப்பாரானால் அவர் பெயரை நாம் பாரம்பரையாகச் சொல்லி வந்தேயிருப்போம். நம் முன்னோர்களின் எந்த நூலிலும் வேதகர்த்தாவின் பெயரை நாம் காண்கின்றிலோம். கர்ண பரம்பரையாகவும் கேட்கின்றிலோம். ஸாதாரணமான சிறு சிறு நூல்களின் கர்த்தாக்களின் பெயர்களை நாம் பரம்பரையாகத் தெரிந்து கொண்டிருக்கும்போது, மிகவும் பெரிதாய் முக்கியமான வேதத்திற்குக் கர்த்தாவின் பெயரை நாம் கேட்கவும் பெறாமலிருப்பதால் உண்மையில் வேத கர்த்தா ஒருவருமில்லை யெனவே நிச்சயிக்கத் தட்டில்லை. இதுவே பௌருஷேயங்களிற் காட்டிலும் அபௌருஷேயத்திற் குண்டான வாசி. அந்தந்த நூலாசிரியர்கள் தாங்கள் சுலோகங்களை யமைக்கும்போது தங்களுக்கு இஷ்டமான பதங்களை வரிசைக் கிரமமாக அமைத்து முதன் முதலாகச் சொன்னார்கள். பிறகு அதை யொட்டி அதே வரிசைக் கிரமத்தில் பின்னுள்ளோரும் சொல்லி வருகிறார்கள். ஆனாலும் பதங்களின் வரிசைக் கிரமத்தை முதன் முதலாக அமைத்தவர் ஒருவராதலால் அவரையே உலகம் நூலாசிரியராக வழங்கி வர ப்ராப்தமாகின்றது வேதத்தை நாமெல்லாரும் ஓதுகின்றோமானாலும் வேதத்திலுள்ள பதங்களின் வரிசைக் கிரமத்தை அமைத்தவர் ஒருவருமில்லையாகையால் வேதகர்த்தா ஒருவருமில்லை யென்று கொள்ளத் தட்டில்லை.

ஆக இவ்வளவால் வேதத்திற்கு அபௌருஷேயத்வமாகிற வொரு சிறப்பை விவரித்தோமானோம். இனி வேதத்திற்கு நித்யத்வமாகிற சிறப்பைப் பற்றித் தெரிவிப்போம்.

## 26. வேதத்தின் நித்யத்வம்.

நம்முடைய ஸித்தாந்தத்தில், நித்ய வஸ்துக்கள் இரண்டு வகையாக ஒப்புக் கொள்ளப் பட்டிருக்கின்றன— ஸ்வரூப நித்ய மென்றும், ப்ரவாஹ நித்ய மென்றும். (ஸ்வரூப நித்யமாவது) எந்த வஸ்துக்கள் முக்காலங்களிலும் ஒரே தன்மையை யுடையனவாய்க் கொண்டு ஒருகாலும் அழிவில்லாமலிருக்கின்றனவோ அவை ஸ்வரூப நித்ய மெனப்படும். மூலப்ரக்ருதியும் ஜீவாத்மாக்களும் பரமாத்மாவும் மேலே சொன்ன லக்ஷணத்திற்கு லக்ஷ்யமாயிருக்கையாலே ஸ்வரூப நித்யமாம். இம் மூன்று பொருள்களின் ஸ்வரூபமும் எப்போதும் ஒரே தன்மையை யுடைத்தாய் என்றுமழியாமலிருக்கின்றது. எம்பெருமான் எந்த அவதார மெடுத்தாலும் அவனுடைய ஸ்வரூபத்தில் எவ்விதமான மாறுதலும் உண்டாவதில்லை. ஜீவாத்மாக்கள் தாம் செய்யும் கருமங்களுக்கு [—நல்வினை தீவினைகளுக்கு] ஏற்பப் பல சரீரங்களை யெடுத்தாலும் ஸ்வரூபத்தில் எவ்வகைத்தான மாறுதலுமுண்டாவதில்லை. மாறுதலாவது விகாரம்; இது இரண்டு விதம்; ஸ்வரூபத்தைப் பற்றியதும் ஸ்வபாவத்தைப் பற்றியதுமாம். ஈச்வரனுக்கு இவ்விரண்டு விதமான விகாரங்களும் கிடையாது. ஜீவாத்மாவுக்கு ஸ்வரூப விகார மில்லை யெனினும் ஸ்வபாவ விகாரம் மாத்திர முண்டு. பத்த ([illegible]) ன் என்றும் முமுக்ஷு வென்றும் முக்தனென்றும் இங்ஙனே ஸ்வபாவம் மாறுகின்றதன்றோ. மூல ப்ரக்ருதியின் ஸ்வரூபம் எப்போதும் விகாராஸ்பதமாகவே யிருந்தாலும் அது என்று மழியாத நித்ய வஸ்து வென்று ச்ருதிஸ்ம்ருதிகளில் சொல்லப் பட்டிருப்பதால் மூல ப்ரக்ருதியும் ஸ்வரூப நித்ய மேயாம். ஆகவே இம்மூவகைப் பட்ட பொருள்களும் ஸ்வரூப நித்யங்களாம்.

இனி घटपटादिपदार्थங்கள் (பானை துணி முதலிய பொருள்கள்) ப்ரவாஹ நித்ய மெனப்படும். இவை அழியும் பொருளாயிருக்க, எப்படி நித்ய வஸ்துவாகச் சொல்லப்படலா

இருந்திருப்பாரானால் அவர் பெயரை நாம் பரம்பரையாகச் சொல்லி வந்தே யிருப்போம். நம் முன்னோர்களின் எந்த நூலிலும் வேதகர்த்தாவின் பெயரை நாம் காண்கின்றிலோம். கர்ண பரம்பரையாகவும் கேட்கின்றிலோம். ஸாதாரணமான சிறு சிறு நூல்களின் கர்த்தாக்களின் அப்பெயர்களை நாம் பரம்பரையாகத் தெரிந்து கொண்டிருக்கும்போது, மிகவும் பெரிதாய் முக்கியமான வேதத்திற்குக் கர்த்தாவின் பெயரை நாம் கேட்கவும் பெறாமலிருப்பதால் உண்மையில் வேத கர்த்தா ஒருவருமில்லை யெனவே நிச்சயிக்கத் தட்டில்லை. இதுவே பௌருஷேயங்களிற் காட்டிலும் அபௌருஷேயத்திற் குண்டான வாசி. அந்தந்த நூலாசிரியர்கள் தாங்கள் சுலோகங்களை யமைக்கும்போது தங்களுக்கு இஷ்டமான பதங்களை வரிசைக் கிரமமாக அமைத்து முதன் முதலாகச் சொன்னார்கள். பிறகு அதை யொட்டி அதே வரிசைக் கிரமத்தில் பின்னுள்ளோரும் சொல்லி வருகிறார்கள். ஆனாலும் பதங்களின் வரிசைக் கிரமத்தை முதன் முதலாக அமைத்தவர் ஒருவராதலால் அவரையே உலகம் நூலாசிரியராக வழங்கி வர ப்ராப்தமாகின்றது வேதத்தை நாமெல்லாரும் ஓதுகின்றோமானாலும் வேதத்திலுள்ள பதங்களின் வரிசைக் கிரமத்தை அமைத்தவர் ஒருவருமில்லையாகையால் வேதகர்த்தா ஒருவருமில்லை யென்று கொள்ளத் தட்டில்லை.

ஆக இவ்வளவால் வேதத்திற்கு அபௌருஷேயத்வமாகிற வொரு சிறப்பை விவரித்தோமோனோம். இனி வேதத்திற்கு நித்யத்வமாகிற சிறப்பைப் பற்றித் தெரிவிப்போம்.



## 26. வேதத்தின் நித்யத்வம்.

நம்முடைய ஸித்தாந்தத்தில், நித்ய வஸ்துக்கள் இரண்டு வகையாக ஒப்புக் கொள்ளப் பட்டிருக்கின்றன— ஸ்வரூப நித்ய மென்றும், ப்ரவாஹ நித்ய மென்றும். (ஸ்வரூப நித்யமாவது) எந்த வஸ்துக்கள் முக்காலங்களிலும் ஒரே தன்மையை யுடையனவாய்க் கொண்டு ஒருகாலும் அழிவில்லாமலிருக்கின்றனவோ அவை ஸ்வரூப நித்ய மெனப்படும். மூல ப்ரக்ருதியும் ஜீவாத்மாக்களும் பரமாத்மாவும் மேலே சொன்ன லக்ஷணத்திற்கு லக்ஷ்யமாயிருக்கையாலே ஸ்வரூப நித்யமாம். இம் மூன்று பொருள்களின் ஸ்வரூபமும் எப்போதும் ஒரே தன்மையை யுடைத்தாய் என்றுமழியாமலிருக்கின்றது. எம்பெருமான் எந்த அவதார மெடுத்தாலும் அவனுடைய ஸ்வரூபத்தில் எவ்விதமான மாறுதலும் உண்டாவதில்லை. ஜீவாத்மாக்கள் தாம் செய்யும் கருமங்களுக்கு [—நல்வினை தீவினைகளுக்கு] ஏற்பப் பல சரீரங்களெடுத்தாலும் ஸ்வரூபத்தில் எவ்வகைத்தான மாறுதலுமுண்டாவதில்லை. மாறுதலாவது விகாரம்; இது இரண்டு விதம்; ஸ்வரூபத்தைப் பற்றியதும் ஸ்வபாவத்தைப் பற்றியதுமாம். ஈச்வரனுக்கு இவ்விரண்டு விதமான விகாரங்களும் கிடையாது. ஜீவாத்மாவுக்கு ஸ்வரூப விகார மில்லை யெனினும் ஸ்வபாவ விகாரம் மாத்திர முண்டு. பத்த (बद्ध) ன் என்றும் முமுக்ஷு வென்றும் முக்தனென்றும் இங்ஙனே ஸ்வபாவம் மாறுகின்றதன்றோ. மூல ப்ரக்ருதியின் ஸ்வரூபம் எப்போதும் விகாராஸ்பதமாகவே யிருந்தாலும் அது என்றுமழியாத நித்ய வஸ்து வென்று ச்ருதிஸ்ம்ருதிகளில் சொல்லப் பட்டிருப்பதால் மூல ப்ரக்ருதியும் ஸ்வரூப நித்யமேயாம். ஆகவே இம்மூவகைப் பட்ட பொருள்களும் ஸ்வரூப நித்யங்களாம்.

இனி घटपटादिपदार्थங்கள் (பானை துணி முதலிய பொருள்கள்) ப்ரவாஹ நித்ய மெனப்படும். இவை அழியும் பொருளாயிருக்க, எப்படி நித்ய வஸ்துவாகச் சொல்லப்படலா

மென்று [illegible] பிறக்கும். இவை அழியாப் பொருளல்ல வென்பது உண்மையே. ஆனாலும் ஒரு பானை உடைந்து போய்விட்டாலும் அதுபோன்ற பலபானைகள் உலகத்தில் இடைவிடாது இருந்து கொண்டுதானிருக்கின்றன. பானை இல்லை என்கிற சொல் எந்தக் காலத்திலும் கிடையாது. இங்கு பானையென்று ஒரு பொருளை யெடுத்துக் காட்டினது உபலக்ஷணம். அழியும் பொருள்களென்று நாம் காண்கிற எப்பொருளு மிப்படியே. ஆகவே, எச்சாதிப் பொருள்களுள் ஒன்று அழிந்தாலும் மற்றொன்று இருந்து கொண்டே யிருக்குமோ, உலகமுள்ள எக்காலத்திலும் அச்சாதிப் பொருள் இல்லை யென்பது கிடையாதோ, அச்சாதிப் பொருள்கள் ப்ரவாஹ நித்யமென்று கூறப்படும். வேதமும் இந்த ப்ரவாஹ நித்ய கோடியில் சேர்ந்தது. அனந்த கோடி ப்ரஹ்மாண்டங்களுள் ஏதாவதொன்றில் எந்த மூலையிலாவது ஒருவன் வேதத்தை ஓதிக் கொண்டு தானிருக்கிறான். வேத வொலியில்லாத காலமே கிடையாது. எல்லாரும் ஒரே வகையில்தான் வேதத்தை ஓதி வருகிறார்கள். ஆகவே வேதம் ப்ரவாஹ நித்யம்.

இக்காலத்து ஆராய்ச்சியாளர்கள் வேதம் இன்ன காலத்திலுண்டாயிற்றென்று தாங்கள் கண்டுபிடித்துவிட்டதாகக் கூறிச் சில பாமரர்களை மயக்குகிறார்கள். ருக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் அதர்வண வேதம் என்று சொல்லப்படுகிற நால்வகை வேதங்களுள் ஒவ்வொன்றிலும் அபரிமிதங்களான சாகைகள் உள்ளன. அவை சிறிதும் மாறுபடாத ஸ்வரத்துடன் உலகமெங்கும் கோடிக் கணக்கான அந்தணர்களால் ஒரே விதமாக ஓதப்பட்டு வருகின்ற ஓர் அதிசயத்தை ஆராய்ந்தால் இது அநாதியே யென்பதை, பிடிவாத முள்ளவர்களின் மனமும் இசைந்திடும். பத்து சுலோகங்களையோ பத்து செய்யுள்களையோ புதிதாக இயற்றி இவைகளை மனனம் செய்துள்ளவர்கள் கண்டபாடம் செய்து ஒரே விதமாய் ஒரே ஸ்வரமாய்ச் சொல்ல வேண்டும் என்று அரசாங்கத்தார் கட்டளையிட்டுப் பார்க்கட்டும். இது நடைபெற[illegible]து திண்ணம். கரை கட்டாக் காவேரிபோன்ற வேதராசிகளோ ஸகல நகரங்களிலும் ஸகல அக்ரஹாரங்களிலும் ஸகல க்ராமங்களிலும் * இமவந்தம் தொடங்கி இருங்கடலளவான ஸகல இடங்களிலும் ஒருவருடைய கட்டளையுமின்றிக்கே அநாதிகாலமாக ஏகரீதியாய் ஓதப்பட்டு வருகிறபடியால் பகவானைப் போலவே வேதமும் நித்யமென்பது நிராக்ஷேபமானது. இனி வேதத்திற்கு நிர்தோஷத்வமென்கிற சிறப்புப் பற்றி விவரிக்கிறோம்.

## 27. வேதத்தின் நிர்தோஷத்வம்.

வேதமென்பது சப்த ராசியென்று முன்பு கூறினோம். சப்தத்திற்கு தோஷமாவது என்ன வென்று விமர்சிக்க வேணும். பிசகான பொருளைத் தெரிவிப்பதே சப்தத்திற்கு தோஷமாம். தனிப்பட்டவொரு பதம் பிசகான பொருளைத் தெரிவிக்கமாட்டாது. மண் மணல் வீடு காடு பானை துணி... என்று தனித் தனியே சொல்லப்படும் சொற்களானவை பிசகான பொருளைத் தெரிவிக்க ப்ரஸக்தியில்லை யென்பதை யாவரு மறியலாம். பல பதங்கள் சேர்ந்த வாக்கியம் தப்பான பொருளைத் தெரிவிக்கும். 'இது வெள்ளி' என்ற இரண்டு சொற்கள் தனித் தனி யிருக்குமானால் எவ்விதமான தப்புப் பொருளையும் தெரிவிக்கமாட்டாது. ஆனால், இவ்விரண்டு சொற்களையும் ஒன்று சேர்த்து ஈயத்தைச் சுட்டிக் காட்டி இது வெள்ளி யென்று பிரயோகிக்கப்பட்டால், வெள்ளியல்லாததை வெள்ளி யென்று போதிப்பதால் இவ் வாக்கியம் தோஷமுடையதென்று கொள்ளப்படும். இவ்வாக்கியம் இப்படி தப்பான பொருளைப் போதிக்கக் காரணமென்ன? இரண்டு சொற்களுள் இவ்வாக்கியத்தில் என்ன தோஷமிருக்கிறது?

மென்று கேள்வி பிறக்கும். இவை அழியாப் பொருளல்ல வென்பது உண்மையே. ஆனாலும் ஒரு பானை உடைந்து போய்விட்டாலும் அதுபோன்ற பலபானைகள் உலகத்தில் இடைவிடாது இருந்து கொண்டேயிருக்கின்றன; 'பானை இல்லை' என்கிற சொல் எந்தக் காலத்திலும் கிடையாது. இங்கு நாம் பானை யென்று ஒரு பொருளை யெடுத்துக் காட்டினது உபலக்ஷணம். அழியும் பொருள்களென்று நாம் காண்கிற எப்பொருளு மிப்படியே. ஆகவே, எச்சாதிப் பொருள்களுள் ஒன்று நசித்தாலும் மற்றொன்று இருந்து கொண்டேயிருக்குமோ, உலகமுள்ள எக்காலத்திலும் அச்சாதிப் பொருள் இல்லை யென்பது கிடையாதோ, அச்சாதிப் பொருள்கள் ப்ரவாஹநித்ய மென்றதாகும். வேதமும் இந்த ப்ரவாஹ நித்ய கோடியில் சேர்ந்தது. அனந்த கோடி ப்ரஹ்மாண்டங்களுள் ஏதாவதொன்றில் எந்த மூலையிலாவது ஒருவன் வேதத்தை ஓதிக் கொண்டு தானிருக்கிறான். வேத வொலியில்லாத காலமே கிடையாது. எல்லாரும் ஒரே வகையில் தான் வேதத்தை ஓதி வருகிறார்கள். ஆகவே வேதம் ப்ரவாஹ நித்யம்.

இக்காலத்து ஆராய்ச்சியாளர்கள் வேதம் இன்ன காலத்திலுண்டாயிற்றென்று தாங்கள் கண்டு பிடித்து விட்டதாகக் கூறிச் சில பாமரர்களை மயக்குகிறார்கள். ருக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் அதர்வண வேதம் என்று சொல்லப்படுகிற நால்வகை வேதங்களுள் ஒவ்வொன்றிலும் அபரிமிதங்களான சாகைகள் உள்ளன. அவை சிறிதும் மாறுபடாத ஸ்வரத்துடன் உலகமெங்கும் கோடிக் கணக்கான அந்தணர்களால் ஒரே விதமாக ஓதப்பட்டு வருகின்ற ஓர் அதிசயத்தை ஆராய்ந்தால் இது அநாதியே யென்பதை, பிடிவாத முள்ளவர்களின் மனமும் இசைந்து தீரும். பத்து சுலோகங்களையோ பத்து செய்யுள்களையோ புதிதாக இயற்றி 'இதை சென்னை மாநகரிலுள்ளவர்கள் கண்டபாடம் செய்து ஒரே விதமாய் ஒரே ஸ்வரமாய்ச் சொல்லி வரவேணும்' என்று அரசாங்கத்தார் கட்டளை யிட்டுப் பார்க்கட்டும். இது நடைபெறுதென்பது திண்ணம். கரை கட்டாக் காவேரிபோன்ற வேதராசிகளோ ஸகல நகரங்களிலும் ஸகல அக்ரஹாரங்களிலும் ஸகல க்ராமங்களிலும் * இமவந்தம் தொடங்கி இருங்கடலளவான எல்லாவிடங்களிலும் ஒருவருடைய கட்டளையினாலன்றிக்கே அநாதிகாலமாக ஏகரீதியாய் ஓதப்பட்டு வருகிறபடியால் பகவானைப் போலவே வேதமும் நித்ய மென்பது நிராக்ஷேபமானது. இனி வேதத்திற்கு நிர்தோஷத்வமென்கிற சிறப்புப் பற்றி விவரிக்கிறோம்.

## 27. வேதத்தின் நிர்தோஷத்வம்.

வேதமென்பது சப்த ராசியென்று முன்பு கூறினோம். சப்தத்திற்கு தோஷமாவது என்ன வென்று விமர்சிக்க வேணும். பிசகான பொருளைத் தெரிவிப்பதே சப்தத்திற்கு தோஷமாம். தனிப்பட்டவொரு பதம் பிசகான பொருளைத் தெரிவிக்கமாட்டாது. மண் மணல் வீடு காடு பானை துணி...என்று தனித் தனியே சொல்லப்படும் சொற்களானவை பிசகான பொருளைத் தெரிவிக்க ப்ரஸக்தியில்லை யென்பதை யாவரு மறியலாம். பல பதங்கள் சேர்ந்த வாக்கியம் தப்பான பொருளைத் தெரிவிக்கும். 'இது வெள்ளி' என்ற இரண்டு சொற்கள் தனித்தனி யிருக்குமானால் எவ்விதமான தப்புப் பொருளையும் தெரிவிக்கமாட்டாது. ஆனால், இவ்விரண்டு சொற்களையும் ஒன்று சேர்த்து ஈயத்தைச் சுட்டிக் காட்டி இது வெள்ளி யென்று பிரயோகிக்கப்பட்டால், வெள்ளியல்லாததை வெள்ளி யென்று போதிப்பதால் இவ் வாக்கியம் தோஷ முடையதென்று கொள்ளப்படும். இவ்வாக்கியம் இப்படி தப்பான பொருளைப் போதிக்கக் காரணமென்ன? இரண்டு சொற்களுள்ள இவ்வாக்கியத்தில் என்ன தோஷமிருக்கிறது?

இச் சொற்கள் தனித்தனியே ப்ரயோகிக்கப்பட்டபோது எப்படியிருந்தனவோ அப்படியே தானே கூட்டிச் சொன்ன போதுமிருக்கின்றன; சொல்லில் எவ்விதமான தோஷமும் காணமுடியாது. ஆனபின்பு இவ்வாக்கியம் தப்பான பொருளைப் போதிப்பதேன்? எனில்; இதை ப்ரயோகித்த புருஷன் இச்சொற்றொடரைச் சரியாக உபயோகியாமல் தப்பாக உபயோகித்ததே இது தப்பான பொருளைக் காட்டுதற்குக் காரணமாயிருக்கின்றது.

மனிதர்களுக்கு இயற்கையாகவே சில தோஷங்களுண்டு; அவை, ப்ரமம் ப்ரமாதம் விப்ரலிப்ஸை முதலியனவாம். ப்ரமமாவது ஒன்றை வேறொன்றாக எண்ணுவது. இது இருவகைப்படும் — விபரீதஜ்ஞான மென்றும் அந்யதாஜ்ஞான மென்றும். ஒரு வஸ்துவை வேறொரு வஸ்துவாகத் தெரிந்து கொள்வது விபரீத ஜ்ஞானம்; ஈயத்தை வெள்ளியாகத் தெரிந்து கொள்வது, கயிற்றைப் பாம்பாகத் தெரிந்து கொள்வது, ......இவை போல்வன விபரீத ஞானமாம். ஒரு வஸ்துவை உள்ளபடி அந்த வஸ்துவாகவே தெரிந்து கொண்டிருக்கச் செய்தேயும், அதிலுள்ள தன்மையை வேறாகத் தெரிந்து கொள்வது அந்யதாஜ்ஞான மெனப்படும். வெண்ணிறமுள்ள சங்கை மஞ்சள் நிறமுள்ளதாகக் காண்பது அது. இவ்விரண்டு வகையான ப்ரமமும் மநுஷ்யனுடைய தோஷமாகும். மனிதன் வஸ்துவை உள்ளபடியறிந்து கொள்ளாமற் போகையே ப்ரமிக்கையாம்.

இனி ப்ரமாதமாவது பிசகிப்போதல். பதரிகாச்ரமம் என்று சொல்ல மனதில் நினைத்திருந்து ப்ருந்தாவனம் என்று சொல்லுதல் போன்றவை இதற்கு உதாரணமாம். இதுவும் மனிதர்களுக்குள்ள தோஷமொன்றாம். இனி விப்ரலிப்ஸையாவது பிறரை வஞ்சிக்கவேணுமென்கிற விருப்பம். தனக்கு யதார்த்தமான ஞானமிருக்கச் செய்தேயும் பிறரை ஏமாற்றவேணுமென்கிற எண்ணங்கொண்டு கயிற்றைக் காட்டிப் பாம்பென்பது, பித்தளையைக் காட்டிப் பொன்னென்பது முதலான வ்யவஹாரங்களானவை விப்ரலிப்ஸையென்னும் குற்றத்தினாலாமவை. மனிதனிடத்துள்ள இத்தகைய தோஷங்களானவை அவனால் ப்ரயோகிக்கப்படுகிற சொற்றொடர்களைக் குற்றமுடையனவாகச் செய்கின்றன. ஆக மனிதனுடைய தோஷங்களே சப்தம் அப்ரமாணமாவதற்குக் காரணமென்றும், சப்தத்தில் இயற்கையாக தோஷமில்லையென்றும் நிரூபித்தோமாயினோம். இங்ஙனம் புருஷனுடைய தோஷங்களால் அப்ரமாணமாகும் சப்தங்கள் எவையென்றால், அந்தப்புருஷன் ஒரு அர்த்தத்தைக் காட்டுவதற்காகப் பல சொற்களை வேண்டியபடி சேர்த்து வாக்கியமாக ப்ரயோகிக்கும் சப்தங்களேயாம். வேதமென்கிற சப்தராசியானது எந்த புருஷனாலும் தன்னிஷ்டப்படி முன் பின்னாகப் பிணைக்கப் பட்டவையல்லவென்றும் நித்யமென்றும் முன்னே சொன்னோமாதலால் புருஷனுடைய தோஷங்களால் துஷ்டமாகக்கூடிய நிலைமை வேதங்களுக்கு இல்லையென விளங்கிற்று. ஆகையால் வேதம் நிர்தோஷமென்னத் தட்டில்லை. ஈச்வரன் வேதகர்த்தாவல்லவா? என்று சிலர் கேட்கிற கேள்விக்கும் ஸமாதான முரைப்போமினி.

## 28. ஈச்வரனும் வேதகர்த்தாவல்லன்.

ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் ஈச்வரன் நான்முகனுக்கு வேதோபதேசம் செய்ததாகச் சொல்லப்படுகிறதே, ஸ்ருஷ்டிக்கு முன்பு வேதம் இருக்கமுடியாதே, ஆகையால் ஈச்வரனால் தான் முதலில் வேதம் இயற்றப்பட்டிருக்க வேணுமென்று ஏற்படுகிறதே, ஆனபின்பு

வேதம் அபௌருஷேய மென்பது எங்ஙனே? என்ன வேண்டா. உண்மை யென்ன
வெனில், வேதத்திற்கு நாம் எப்படி கர்த்தாக்களல்லோமோ அப்படியே ஈச்வரனும் கர்த்தா
வல்லன்; உலகத்தில் ஸ்ருஷ்டியானது ஒன்றன்பின் ஒன்ருக அநாதி காலமாய் நடந்து
வருகின்றது. ஒவ்வொரு கல்பத்தின் ஆரம்பத்திலும் ஈச்வரன் நான்முகனுக்கு வேதத்தை
உபதேசிக்கிருன். ஆனல் முன்கல்பத்தில் வேதம் எவ்விதமான வரிசைக் கிரமத்தோடு
இருந்ததோ அவ்விதமாகவே மறுகல்பத்தின் ஆரம்பத்திலும் வேதம் உபதேசிக்கப்படுகிறது.
எவ்விதமான மாறுபாடும் செய்யப்படுவதில்லை. அநாதிகாலமாக இங்ஙனமே நிகழ்ந்து வரு
கின்றது. வேதத்தின் விஷயத்தில் ஈச்வரனுடைய செயல் இவ்வளவே. புதிதாக வேதம் நிரு
மிக்கப்படுகிறதென்பது ஒருநாளிலுமில்லை. ஆகவே ஈச்வரனும் வேதகர்த்தா வல்லன். ஸ்மி
ருதி இதிஹாஸம் புராணம் என மற்றும் பல வகை நூல்களுமுள்ளன. ஆனல் வேதம் எப்படி
அநாதிகாலமாய் சிஷ்ய ப்ரசிஷ்ய பரம்பரையாய் ஓதப்பட்டு வருகிறதோ அப்படி மற்ற நூல்கள்
ஓதப்பட்டு வருவதில்லை. அந்தணன் க்ஷத்ரியன் வைசியன் என்ற மூன்று வருணத்தினரும்
தவருமல் வேதமோதிவர வேண்டுமென்றும், ஆசார்ய முகத்திலேயே வேதம் அதிகரிக்
கப்படவேண்டுமென்றும் நியமங்களை ஏற்படுத்தி, இந்த விதிகளை மீறினல் ப்ர... சித்தங்
களும் விதிக்கப்பட்டிருப்பதனலே புத்திக்கு எட்டாத காலம் முதல் ஒரே விதமாக வேதமும்
ஓதப்பட்டு வருவதோடு எவ்விதமான ஸந்தேஹத்திற்கும் இடமின்றியு மிருக்கிறது. ஆக,
இப்படி வேதம் அபௌருஷேயமாய் நித்யமாய் நிர்தோஷமாய் இடையருத பரம்பரையில் வரு
வதாயிருப்பதனலே ஆரியர்களான நமக்குப் பரம ப்ரமாணமாயுள்ளது.

மேலே நிருபித்த அதிசயங்கள் தவிர மற்றோரதிசயமுமுண்டு வேதத்திற்கு. அதாவது
இவ்வளவென்று எல்லை காண வொண்ணுதபடி அளவற்றிருக்கை. இவ் விஷயம் வேதத்தி
லேயே "अनन्ता वै वेदाः - அநந்தா வை வேதா:" என்று கூறப்பட்டுள்ளது. ஆக, வேதம்
அபௌருஷேயமாய் நித்யமாய் நிர்தோஷமாய் அநந்தமாயிருந்து கொண்டு பரமப்ரமாணமான
தென்று வேதத்தின் பெருமை விவரிக்கப்பட்டதாயிற்று.

---

## 29. நோற்ற நோன்பின் விசேஷார்த்தங்கள்.

வானமாமலைத் திருப்பதிக்குத் திருவாய்மொழியில் நம்மாழ்வாருளிய பதிகம் "நோற்ற
நோன்பிலேன்" என்று தொடங்குவது. இப்பதிகத்திலுள்ள மஹார்த்த பௌஷ்கல்யத்தை
விசதமாக விளக்குவதற்கு ஔசித்யம் இப்போது ப்ராப்தமாகிறது. நாம் உஜ்ஜீவந ஸாதன
மாகக் கொள்ளும் நூல்களில் எதையெடுத்துக் கொண்டாலும் அதில் அர்த்தபஞ்சகம் விளக்
கப் படுகிறதென்பதே நாம் முக்கியமாகக் குறிக்கொள்ளத் தக்கது. "ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ
ரூபம் ப்ராப்துச்ச ப்ரத்யகாத்மந:, ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ் ததா ப்ராப்திவிரோதி ச,
வதந்தி ஸகலா வேதாஸ் ஸேதிஹாஸபுராணகா: முநயச்ச மஹாத்மானோ வேத வேதார்த்
தவேதிந:," என்கிற ப்ரமாண வசனம் இதனையே தெரிவிக்கின்றது, "அறியவேண்டுமர்த்த
மெல்லா மிதுக்குள்ளே உண்டு; அதாவது அஞ்சர்த்தம்" என்கிற முமுக்ஷுப்படி ஸூக்தி
யினல் திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தில் அர்த்தபஞ்சகமே ப்ரதிபாதிக்கப்படுகிறதென்றும்,
அதுகொண்டே ஸகலார்த்த ப்ரதிபாதநமும் திருமந்த்ரத்தில் தேறுகின்றதென்றும் பெரி
யார்கள் உபபாதித்துவருகிருர்கள். இவ்வண்ணமாகவே திருவாய்மொழியாயிரத்திற்கும்

அர்த்தபஞ்சகத்தை விவரிப்பதிலேயே முழுநோக்கு என்னுமிடத்தை நம் முன்னோர்கள் "மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும், தக்கநெறியும் தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையும் வாழ்வினையு மோதுங் குருகையர் கோன் யாழினிசை வேதத்தியல்." என்பது முதலான பல ஸ்ரீ ஸூக்திகளால் அறிகிறோம். எம்பெருமானுடைய ஸ்வரூபம், ஜீவாத்ம ஸ்வரூபம், உபாய ஸ்வரூபம், புருஷார்த்த ஸ்வரூபம் விரோதி ஸ்வரூபம், என்னு மிவ்வைந்து விஷயங்களே அர்த்தபஞ்சக மெனப்படும். இவ்வர்த்த பஞ்சகத்தை நம்மாழ்வார் திருவிருத்தம் திருவாசிரியம் பெரியதிருவந்தாதி யாகிற மூன்று திவ்யப் பிரபந்தங்களில் சுருக்கமாக வருளிச்செய்து, சரமப்ரபந்தமாகிய திருவாய்மொழியாயிரத்தில் அவற்றை மிக விவரித்தருளிச் செய்திருப்பதாகவும் கூறுவர்.

அது தன்னிலும், * உயர்வற வுயர்நலம் * இண்ணன்வீடு * அணைவதரவணைமேல் * ஒன்றுந்தேவு * ஆகிய நான்கு திருவாய்மொழிகள் பரமபுருஷ ஸ்வரூபத்தை விசதீகரிப்பன. * பயிலுஞ்சுடரொளி * ஏறாளுமிறையோன * கண்கள் சிவந்து * கருமாணிக்கமலை * ஆகியநான்கு திருவாய்மொழிகள் ஜீவாத்ம ஸ்வரூபத்தை விசதீகரிப்பன. * வீடுமின் முற்றவும் * [illegible] விரோதம் * ஒரு நாயகம் * கொண்ட பெண்டிர் மக்கள் * ஆகிய நான்கு பதிகங்கள் விரோதி ஸ்வரூபத்தை விசதீகரிப்பன. * நோற்ற நோன்பிலேன் * ஆராவமுதே * மானேய்நோக்கு * பிறந்தவாறும் * ஆகிய நான்கு பதிகங்களும் உபாய ஸ்வரூபத்தை விசதீகரிப்பன. * எம்மாவீட்டுத்திறம் * ஒழிவில்காலம் * நெடுமாற்கடிமை * வேய்மரு தோளிணை * ஆகிய நான்கு பதிகங்கள் புருஷார்த்த ஸ்வரூபத்தை விவரிப்பன. ஆக மேலே யெடுத்துக்காட்டிய இருபது திருவாய்மொழிகளில் நான்கு நான்கு திருவாய்மொழிகள் அர்த்தபஞ்சகத்தில் ஒவ்வோரர்த்தத்தை விசதீகரிப்பதில் நோக்குடையனவாகவும் மற்ற எண்பது திருவாய்மொழிகள் அர்த்த பஞ்சகத்தையும் கலந்த கட்டியாக விஸ்தாரமாய் நிரூபிப்பனவாகவும் நம் ஆசார்யர்கள் திருவுள்ளம் பற்றியுள்ளார்கள். ஆசார்யஹ்ருதயத்தில் (211.) "மூன்றில் [illegible] ஐந்தையும் உயர் இண்ணணை யொன்று பயிலேறு கண் கரு வீடு [illegible] நோற்ற நாலும் எம்மா வொழிவில் நெடுவேயென்கிற இருபதிலே விசதமாகி [illegible] இதிலே பரப்புகையாலே ஐந்தையும்" என்ற சூர்ணையின் வியாக்யானத்தைக் [illegible] இவ்விஷயத்தை நெஞ்சிலே இடப்படுத்திக் கொள்க.

திருவாய்மொழி யாயிரத்தின் ப்ரமேயஸிரை இவ்வ[illegible]னகிற வைனமாமலைப் பதிகத்தில் ஸகல சாஸ்த்ரார்த்தங்களும் [illegible]கிறேம் அண்மின். மேலே யெடுத்துக்காட்டிய ஆசார்ய ஹ்ருதய[illegible] நோற்ற நோன்பு பதிகத்திற்கு உபாய ஸ்வரூப விசதீகரண மென்[illegible] ஸகல சாஸ்த்ரார்த்த ரஹஸ்யங்களும் இதிலே தேங்கிக் கிடக்குமழகும் அப்படிக்க [illegible]த்தா யிருக்கின்றது. அர்த்த பஞ்சகமும் இதில் விசதமாக விளங்கும்படி எங்ஙனேயெனில் "மிக்க விறை நிலையும்" என்கிற பரஸ்வரூபம் விளங்கும் படியை முன்னம் நிரூபிக்கிறோம்.

தத்வத்ரயத்தில் ஈச்வரப்ரகரணத்தில்—"ஈச்வர ஸ்வரூபந்தான் பரத்வம் வ்யூஹம் விபவம் அந்தர்யாமித்வம் அர்ச்சாவதாரமென்று அஞ்சு ப்ரகாரத்தோடே கூடியிருக்கும்" என்றருளிச் செய்தபடி ஐந்து படிப்பட்டிருக்கிற எம்பெருமானது நிலைமைகள் ஒன்று விடாமல் இப்பதிகத்தி லுண்டு. "வானநாட! எங்கார்முகில்வண்ணா!" என்றும் "வானவர் கொழுந்தே!" என்று

அர்த்தபஞ்சகத்தை விவரிப்பதிலேயே முழுநோக்கு என்னுமிடத்தை நம் முன்னோர்கள் "மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும்; தக்கநெறியும் தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையும் வாழ்வினையு மோதுங் குருகையர் கோன் யாழினிசை வேதத்தியல்." என்பது முதலான பல ஸ்ரீ ஸூக்திகளால் அறிகிறோம். எம்பெருமானுடைய ஸ்வரூபம், ஜீவாத்ம ஸ்வரூபம், உபாய ஸ்வரூபம், புருஷார்த்த ஸ்வரூபம், விரோதி ஸ்வரூபம் என்னு மிவ்வைந்து விஷயங்களே அர்த்தபஞ்சக மெனப்படும். இவ்வர்த்த பஞ்சகத்தை நம்மாழ்வார் திருவிருத்தம் திருவாசிரியம் பெரியதிருவந்தாதி யாகிற மூன்று திவ்யப் பிரபந்தங்களில் சுருக்கமாக வருளிச்செய்து, சரமப்ரபந்தமாகிய திருவாய்மொழியாயிரத்தில் அவற்றை மிக விவரித்தருளிச் செய்திருப்பதாகவும் கூறுவர்.

அது தன்னிலும், * உயர்வற வுயர்நலம் * திண்ணன்வீடு * அணைவதரவணைமேல் * * ஒன்றுந்தேவு * ஆகிய நான்கு திருவாய்மொழிகள் பரமபுருஷ ஸ்வரூபத்தை விசதீகரிப்பன. * பயிலுஞ்சுடரொளி * ஏறுஆளுமிறையோன * கண்கள் சிவந்து * கருமாணிக்கமலை * ஆகியநான்கு திருவாய்மொழிகள் ஜீவாத்ம ஸ்வரூபத்தை விசதீகரிப்பன. * வீடுமின் முற்றம் * சொன்னால் விரோதம் * ஒரு நாயகம் * கொண்ட பெண்டிர் மக்கள் * ஆகிய நான்கு பதிகங்கள் விரோதி ஸ்வரூபத்தை விசதீகரிப்பன. * நோற்ற நோன்பிலேன் * ஆராவமுதே * மானேய் நோக்கு * பிறந்தவாறும் * ஆகிய நான்கு பதிகங்களும் உபாய ஸ்வரூபத்தை விசதீகரிப்பன. * எம்மாவீட்டுத்திறம் * ஒழிவில்காலம் * நெடுமாற்கடிமை * வேய்மரு தோளிணை * ஆகிய நான்கு பதிகங்கள் புருஷார்த்த ஸ்வரூபத்தை விவரிப்பன. ஆக மேலே யெடுத்துக்காட்டிய இருபது திருவாய்மொழிகளில் நான்கு நான்கு திருவாய்மொழிகள் அர்த்தபஞ்சகத்தில் ஒவ்வோரர்த்தத்தை விசதீகரிப்பதில் நோக்குடையனவாகவும் மற்ற எண்பது திருவாய்மொழிகள் அர்த்த பஞ்சகத்தையும் கலந்த கட்டியாக விஸ்தாரமாய் நிரூபிப்பன்வாகவும் நம் ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றியுள்ளார்கள். ஆசார்யஹ்ருதயத்தில் (211.) "மூன்றில் சுருக்கிய ஐந்தையும் உயர் திண்ணணை யொன்று பயிலேறு கண் கரு வீடு சொன்னலொருக்கொண்ட நோற்ற நாலும் எம்மா வொழிவில் நெடுவேயென்கிற இருபதிலே விசதமாக்கி எண்பதிலே பரப்புகையாலே ஐந்தையும்" என்ற சூர்ணையின் வியாக்யானத்தைக் கொண்டு இவ்விஷயத்தை நெஞ்சிலே திடப்படுத்திக் கொள்க.

திருவாய்மொழி யாயிரத்தின் ப்ரமேயசிக்ஷை இங்ஙனேயிருக்க, * நோற்றநோன்பு * என்கிற வானமாமலைப் பதிகத்தில் ஸகல சாஸ்த்ரார்த்தங்களும் காணக் கிடக்குமழகை நிரூபிக்கிறோம் காண்மின். மேலே யெடுத்துக்காட்டிய ஆசார்ய ஹ்ருதய சூர்ணையின்படி இந்த நோற்ற நோன்பு பதிகத்திற்கு உபாய ஸ்வரூப விசதீகரண மொன்றிலே நோக்கு எனினும், ஸகல சாஸ்த்ரார்த்த ரஹஸ்யங்களும் இதிலே தேங்கிக் கிடக்குமழகும் அபலபிக்க வொண்ணாததாயிருக்கின்றது. அர்த்த பஞ்சகமும் இதில் விசதமாக விளங்கும்படி எங்ஙனே யென்னில்; "மிக்க விறை நிலையும்" என்கிற பரஸ்வரூபம் விளங்கும் படியை முன்னம் நிரூபிக்கிறோம்.

தத்வத்ரயத்தில் ஈச்வரப்ரகரணத்தில்—"ஈச்வர ஸ்வரூபந்தான் பரத்வம் வ்யூஹம் விபவம் அந்தர்யாமித்வம் அர்ச்சாவதாரமென்று அஞ்சு ப்ரகாரத்தோடே கூடியிருக்கும்" என்றருளிச் செய்தபடி ஐந்து படிப்பட்டிருக்கிற எம்பெருமானது நிலைமைகள் ஒன்று விடாமல் இப்பதிகத்திலுண்டு. "வானநாடா! எங்கார்முகில்வண்ணா!" என்றும் "வானவர் கொழுந்தே!" என்று

முள்ள பாசுரங்களால் பரத்வத்தை யநுபவிக்கிறோம். "அரவினணையம்மானே!" என்றதனால் வ்யூகத்தை யநுபவிக்கிறோம். படாதூரம்மாள் பரத்வாதி பஞ்சகத்தில், "व्यूहाधिष्ठितवासुदेवमपि तं क्षीराब्धिनाथं भजे-வ்யூஹாதிஷ்டித வாஸுதேவமபி தம் க்ஷீராப்திநாதம் பஜே" என்றருளிச்செய்திருக்கையாலே திருப்பாற்கடல் நிலையாயிற்று வியூஹமெனபது. * வெள்ளை வெள்ளத்தின் மேலொரு பாம்பை மெத்தையாக விரித்து அதன் மேலே கள்ள நித்திரை கொள்கின்ற என்றும் * ஐந்து பைந்தலையாடரவணை மேவிப் பாற்கடல் யோகநித்திரை சிந்தை செய்த வெந்தாய் * என்றும் 'க்ஷீரஸாகர தரங்க......போகி போக சயநீய சாயினே" என்றும் சொல்லுகிறபடியே க்ஷீரார்ணவத்தில் திருவனந்தாழ்வான் மீது பள்ளி கொண்டருளும்படியாதலால் "அரவினணையம்மானே!" என்றதனால் வ்யூஹ நிலை அநுபவிக்கப்பட்டதென்னக் குறையில்லை. இனி, விபவாவதாராநுபவம் * எனமாய் நிலங்கீண்ட வென்னப்பனே கண்ணா! * என்பது முதலான சந்தைகளிலே வ்யக்தம். அந்தர்யாம்யநுபவம் * வந்தருளி யென்னெஞ்சிடங் கொண்ட * என்கிற சந்தையிலே விசதம். தத்வத்ரயத்திலே அந்தர்யாமித்வத்தை நிரூபிக்குமிடத்து "ஹ்ருதயகமலத்திலே யெழுந்தருளியிருக்குமிருப்பு" என்று தலைக்கட்டுகையாலும், "स्वाङ्गुष्ठप्रमितं च योगिहृदयेष्वासीनम्- ஸ்வாங்குஷ்ட ப்ரமிதஞ்ச யோகிஹ்ருதயேஷ்வாஸீநம்" என்று படாதூரம்மாளும் (அந்தர்யாமிச்லோகத்திலே) அருளிச் செய்கையாலும், "என்னெஞ்சிடங்கொண்ட" என்ற சந்தை அந்தர்யாம்யநுபவத்தைக் காட்டுகிறதென்பது நிர்விவாதம். இனி அர்ச்சாநுபவம் பாசுரந்தோறுமுள்ளதனாலே அது விவரண நிரபேக்ஷம். ஆக பரத்வாதி பஞ்சகமும் இப்பதிகத்தில் அநுபவிக்கப்பட்டமை சொல்லியாயிற்று. இதுபோலவே ஸ்வரூப ரூபகுண விபூதி சேஷ்டிதங்களும் இப்பதிகத்தில் மிக விளங்கக் காணலாம். எங்ஙனே யென்னில்; "என் கருமாணிக்கச்சுடரே!" என்ற சந்தை ஸ்வரூபத்தை நிரூபிக்குமது ஈச்வர ஸ்வரூபமானது * அகில ஹேயப்ரத்யநீகாநந்த ஜ்ஞாநாநந்தைகமயமாதலால் அதுதான் 'கருமாணிக்கச்சுடரே!' என்றதனால் தெரிவிக்கப்பட்டதாகிறது. "எங்கார்முகில் வண்ணா!" என்கிற சந்தையினால் ரூபம் [திவ்யமங்கள விக்ரஹம்] தெரிவிக்கப்பட்டது. குணம் தெரிவிக்கப்பட்ட விஷயம் "ருசி விவசர்க்குப் பாதமே சரணாக்கு மௌதார்யம் வானமாமலையிலே கொழுந்துவிடும்" என்ற ஆசார்யஹ்ருதய சூர்ணையினால் ப்ரஸித்தம். விபூதி யோகமானது 'வானநாடா!' என்றும் 'சிரீவர மங்கல நகர் வீற்றிருந்த வெந்தாய்!' என்றுமுள்ள சந்தைகளால் தெரிவிக்கப்பட்டது; உபயவிபூதி நிர்வாஹகத்வமும் சொல்லிற்றாகையாலே. இனி, சேஷ்டிதங்களை நிரூபித்திருப்பது "புள்ளின்வாய் பிளந்தாய் மருதிடைபோயினாய் எருதேழடர்த்த" என்ற சந்தையில் காணத்தக்கது. ஆக இவ்வளவாலும், அர்த்த பஞ்சகத்தில் முதல்தான பரமபுருஷ ஸ்வரூப மென்னுமர்த்தம் இப்பதிகத்தில் விசதீகரிக்கப்பட்டமை விளங்கப்பட்டதாயிற்று.

இனி இரண்டாவதான * மெய்யா முயிர்நிலையை இதில் காட்டுவோம். ஜீவாத்மாக்கள் பத்தர்களென்றும் முமுக்ஷுக்களென்றும் முக்தர்களென்றும் நித்யர்களென்றும் வழங்கப்படுகிறார்களன்றோ. இவர்களை யெல்லாம் இப்பதிகத்தில் காட்டியுள்ளார். * அகற்றி யென்னையும் நீ அருஞ்சேற்றில் வீழ்த்தி கண்டாய் * என்றும், * பொருளல்லாத வென்னை * என்றும் தம்முடைய நிலைமையைத் தெரிவிக்கும் முகத்தால் பத்த சேதநர்களைத் தெரிவித்தார். "தெள்ளியார் திருநான்மறைகள் வல்லார்" "தேறுஞானத்தர் வேத வேள்வியறா" "செந்தொழிலவர் வேத வேள்வி" என்கிற சந்தைகளினால் முமுக்ஷுக்களைத் தெரிவித்தார். "கருளப்

புட்கொடி சக்கரப்படை வானநாட" "வானவர்" என்கிற சந்தைகளினால் நித்யமுக்தர்களைத் தெரிவித்தார்.



இனி மூன்றாவதான உபாயஸ்வரூபத்தைத் தெரிவித்திருக்குமழகு பரமவிலக்ஷணமானது. உபாயங்கள் கர்மஜ்ஞானபக்திப்ரபத்திகள். இவற்றுள் கர்மஜ்ஞானபக்திகள் ஸ்வரூப நாசகங்களான ப்ராபகாந்தரங்களெனப் படுகின்றன. ஸ்ரீவசநபூஷணத்தில் "ப்ராபகாந்தர பரித்யாகத்துக்கு அஜ்ஞாநாசக்திகளன்று, ஸ்வரூப விரோதமே ப்ரதாந ஹேது" என்றருளிச் செய்கையாலே அவை நமக்கு அநுபாதேயங்கள்; ப்ரபத்தியே உபாதேயமானது என்கிற ஸத்ஸம்ப்ரதாயார்த்தம் "நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்" "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்கிற சந்தைகளினால் விளங்கப்பட்டது. சரமோபாயமான ப்ரபத்தியிலும் ஸ்வகதஸ்வீகாரம் பரகத ஸ்வீகாரமென்று இரண்டாய் "அவனை இவன் பற்றும் பற்று அஹங்கார கர்ப்பம், அவத்யகரம்; அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்" என்கிற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்திப்படியே பரகத ஸ்வீகாரமே ப்ரசஸ்தமாகையாலே அதனை இங்கு என்ன அழகாகத் தெரிவிக்கின்றாரென்று பார்க்கவேணும்; "நின்பாதமே சரணாகப் பற்றினேன்" என்னாதே "சரணாகத் தந்தொழிந்தாய்" என்று ஸ்வீகாரத்தை அத்தலையிலிட்டு அருளிச்செய்தவிது ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்த ப்ரகாசகமிருந்தபடி.

இனி விரோதிஸ்வரூபம் "அகற்ற நீ வைத்த மாய வல்லைம்புலன்களாமவை" என்கிற பாசுரத்தினால் விளக்கப்பட்டது. இனி, முடிவாகப் புருஷார்த்த ஸ்வரூபத்தை விளக்குமழகு மிக நன்று. இதர தர்சநங்களில் ஆத்யந்திக துக்க த்வம்ஸமே மோக்ஷமென்றும், பாஷாண கல்பத்வமே மோக்ஷமென்றும், பரப்ரஹ்மமாகவே ஆய்விடுவதுதான் மோக்ஷமென்றும் சொல்லுவார்கள், கைங்கர்யமே மோக்ஷமென்பது நம்முடைய ஸித்தாந்தம். இதுதான் பரம புருஷார்த்தம். இதனை ஆழ்வார் இப்பதிகத்தில் "பொருளல்லாத என்னைப் பொருளாக்கி அடிமைகொண்டாய்" என்று பாசுரத்தினால் வெளியிட்டார். ஆக ஸகலார்த்தங்களும் இங்ஙனே கமழும் வகை காண்க.



# 30. கண்ணபிரானனுபவம்.

மார்கழித் திங்கள் முழுதும் திருப்பாவையைக் கொண்டு கொள்ளை கொள்ளையான அநுபவம் செய்யும் பக்த பாகவத சிகாமணிகளின் ஆத்மானந்தம் அளவிடற்பாலதன்று. பகவத் கீதையில் "जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः— ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:" என்று கண்ணபிரான் தானே சோதி வாய் திறந்தருளிச் செய்தபடி அநுஸந்திப்பவர்களுக்கு புநர் ஜந்ம நிராஸகமாய் பரம புருஷார்த்த ப்ராபகமாயிருக்கின்ற கண்ணபிரானது திவ்ய சேஷ்டிதங்கள் எவை யென்றால், கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்திலே 'धूर्तायितं तव हि यत्किल रासगोष्ठ्यां तत्कीर्तनं परमपावनमामनन्ति— தூர்த்தாயிதம் தவ ஹி யத் கில ராஸகோஷ்ட்யாம் தத்கீர்த்தநம் பரம பாவநமாமநந்தி" என்றருளிச் செய்தபடியே கண்ணபிரான் செய்த தூர்த்தக்ருத்யங்களை யென்னத் தட்டில்லை. *மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்கு, கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி, நிச்சலும் தீமைகள் செய்வாய்!* என்கிற இப்படிகளிலேயுள்ள ஆழ்வார் பாசுரங்களை எம்பெருமான் திருமுன்பே குழாங்கூடி உத்கோஷித்தால் அப்பெருமானுடைய திருமுக மண்டலம் மலர்ந்து விளங்குவதைக் காணுகின்றோம்.

இப்படிப்பட்ட தூர்த்த க்ருத்யங்களினால் கண்ண பிரானுக்கு ப்ரஹ்மசர்ய ஹாநி வாராதோ வென்று சிலர் சங்கிப்பதுண்டு. இதைப் பற்றி யாதவாப்யுதயத்தில் (4—64) ஸாதிக்கிற ஒரு ச்லோகரத்னம் கேண்மின் ;

"विमोहने वल्लवगेहिनीनां न ब्रह्मचर्यं बिभिदे तदीयम् ।
संपत्स्यते बालकजीवनं तत् सत्येन येनैव सतां समक्षम् ॥

விமோஹநே வல்லவகேஹிநீநாம் ந ப்ரஹ்மசர்யம் பிபிதே ததீயம்,
ஸம்பத்ஸ்யதே பாலகஜீவநம் தத் ஸத்யேந யேநைவ ஸதாம் ஸமக்ஷம்"

கண்ணபிரானுடைய சேஷ்டிதங்களில் ஜாரக்ருத்யங்களும் பல காண்கின்றன. "தொத்தார் பூங்குழல் கன்னியொருத்தியைச் சோலைத் தடங்கொண்டு புக்கு, முத்தார் கொங்கை புணர்ந்து இராமுழுவெல்லாம் சென்ற பின் வந்தாய்" என்ற பெரியாழ்வார் திருமொழி போன்ற பல திருமொழிகளை நாம் அநுஸந்தித்து வருகின்றோம். இப்படிப்பட்ட ஜாரக்ருத்யங்கள் எம்பெருமானுக்குத் தகுமா? இவற்றால் அவனுடைய ப்ரஹ்ம சர்யத்திற்குக் குறைபாடு நேராதா? என்று சங்கிப்பாருடைய சங்கையைத் தீர்க்கவே இந்த ச்லோகம் திருவவதரித்தது. இப்படிப்பட்ட சேஷ்டிதங்கள் எத்தனை செய்தவளவிலும் கண்ண பிரானுடைய ப்ரஹ்ம சர்யம் சிறிதும் குறைபாடுற்றதில்லை. ஏனெனில், பாரத யுத்த ஸமயத்தில் அர்ஜுநன் மகனான அபிமந்யுவின் மனைவியாகிய உத்தரை யென்பவளுடைய கருவை நோக்கி அச்வத்தாமாவினால் பிரயோகிக்கப்பட்ட அபாண்டவாஸ்த்ரத்தினால் அக்கருவிலிருந்த சிசு [பரீக்ஷித்] நீறுயொழிய, அச்சிசுவை மீண்டும் உயிர் பெறுத்த வேணுமென்று ஸுபத்ரையினால் பிரார்த்திக்கப்பட்ட கண்ண பிரான் தனது செந்தாமரை மலர் போன்ற திருவடியினால் அச்சிசுவை அடிதொடங்கி முடியீறாக ஸ்பர்சித்தருள உத்தரக்ஷணத்திலேயே அச்சிசு உயிர் பெற்றமை ப்ரஸித்தம். அப்படி கண்ணபிரான் திருவடியினால் ஸ்பர்சிக்கும் போது "यदि मे ब्रह्मचर्यं स्यात् सत्यं च मयि तिष्ठति । अव्याहतं ममैश्वर्यं तेन जीवतु बालकः ॥ —யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத் ஸத்யம் ச மயி திஷ்டதி, அவ்யாஹதம் மமைச்வர்யம் தேந ஜீவது பாலக:" [நான் உண்மையான ப்ரஹ்மசாரியாக அஸ்கலித வீர்யனாக இருப்பேனாகில் ஸத்யவாதியாயுமிருப்பேனாகில் இந்த சிசு உயிர் பெற்று எழுந்திருக்கட்டும்.] என்று சபதஞ் செய்தருளினதாகப் புராணங்கள் கூறுகின்றன. இதையே இந்த ச்லோகம் எடுத்துக் காட்டிற்று. "அது இது உது வென்னலாவன வல்ல, என்னையுன் செய்கை நைவிக்கும்" என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடி பகவானுடைய சரிதையாயிருந்தால் எதுவும் பரம பாவநமே யென்பதில் ஐயுற வேண்டா.

---

# 31. ஸ்ரீ ஸூக்தியின் உண்மைப் பொருள்.

நம்மாழ்வார் * வீடுமின் முற்றவும் என்கிற திருவாய்மொழியிலே முதன் முதலாக ஸம்ஸாரிகளுக்கு உபதேசிக்கத் தொடங்குகிறார். எதை உபதேசிக்கிறாரென்னில் ; பக்தியை யுபதேசிக்கிறார். * மயர்வற மதிநல மருளினன் * என்று தாமே யருளிச் செய்தபடியே எம்பெருமானுடைய திருவருளாலே கிடைத்த பக்தியை உபதேசிக்கிறாரே யொழிய வேதாந்த விஹிதையான பக்தியை உபதேசிக்கிறாரல்லர் என்பது ஆசார்யர்களின் திருவுள்ளம். இதற்குமேல் ஒருவர் கேட்டார்—"வேதாந்த விஹிதையான பக்திதான் ஆழ்வாருடைய பக்தி, அந்த பக்தியையே ஸம்ஸாரிகளுக்குமுபதேசிக்கிறார்" என்று கொண்டால் என்ன குறை? என்று (கேட்டார்.) அப்படி கொள்ளக்கூடாது என்பதை ஈடு முப்பத்தாறாயிரப்படியில் இரண்டு ஹேதுக்களாலே ஸாதிக்கிறார்— அவ்விடத்து ஸ்ரீ ஸூக்தி வருமாறு ; "இதுதான் வேதாந்த விஹிதை

யான பக்தி தானே யானாலோ வென்னில்; ஸர்வேச்வரன் அருள இவர் பெற்றாராகிற ஏற்றம்
போம்; அபசூத்ராதிகரணந்யாய (விரோத) மும் ப்ரஸங்கிக்கும்." என்று.

இந்த ஸ்ரீஸூக்தியின் கருத்து யாதென்னில்; ஆழ்வார்க்கு உள்ள பக்தியானது
வேதாந்தங்களிலே ஸாங்கோபாங்கமாக விதிக்கப்பட்ட பக்திதான் என்றும்; அதனையே ஆழ்
வார் முயற்சி செய்து ஸம்பாதித்தாரென்றும் சொல்லுகிற பக்ஷத்தில் ஆழ்வார் தாமே "மயர்
வற மதி நலமருளினன்" என்று தமக்குச் சொல்லிக் கொள்ளுகிற ஏற்றம் இல்லாமற் போய்
விடும். தவிர, ஆழ்வார் உபதேசிப்பதானது பிராமணர்களுக்கு மாத்திரமன்றிக்கே ஸகல
வர்ணஸ்தர்களுக்கு மாகையாலே, சதுர்த்தர்களுக்கும் உபதேசிக்கிறாரென்று தேறுகையாலே
அபசூத்ராதிகரணந்யாய விரோதமும் ப்ரஸங்கிக்கும்—என்பதேயாம். ஆகவே, இங்கு அப
சூத்ராதிகரணந்யாய விரோத ப்ரஸஞ்ஜநம் செய்வதானது உபதேஷ்டாவான ஆழ்வார் விஷ
யத்திலன்றிக்கே உபதேசத்திற்கு லக்ஷ்யபூதர்கள் விஷயத்திலே—என்றதாயிற்று. இத்தால்
நம்பிள்ளை ஆழ்வாரை சூத்ரராகவே ஸ்தாபித்து விட்டதாக இந்த ஸ்ரீஸூக்தியால் தேறுகிற
தென்று சிலர் அஸ்தானே தூஷிப்பது நிரஸ்தமாயிற்று.

உபதேஷ்டாவான ஆழ்வார் விஷயத்தில் தான் இந்த ப்ரஸஞ்ஜநம் நம்பிள்ளையினால்
செய்யப்பட்டது என்று வைத்துக் கொண்டாலும் குறையில்லை. எங்ஙனே யென்னில், ஆழ்
வார் மயர்வற மதிநல மருளப் பெற்றாரென்பது கொண்டே யன்றோ ஆழ்வார்க்கு நாம் ஏற்றம்
சொல்லுகிறோம்; அந்த ஏற்றத்தை இல்லை செய்யுமவர்களன்றோ ஈட்டில் ப்ரதிபக்ஷிகளாக
நிற்கிறார்கள். அவர்களுடைய கருத்தாலே ஆழ்வார் விசிஷ்ட வ்யக்தியாகத் தேறாமல் ஸாமா
ந்ய வ்யக்தியாகவே தேறுகிறபடியாலே அவர்களுடைய அபிப்ராயத்திற்குச் சேர இந்த ப்ரஸஞ்
ஜநம் செய்தபடியாகிறது. ஆகவே ஒருவிதத்திலும் அவத்யமில்லை.

# 32 ஈச்வரன் சாஸ்த்ரைக வேத்யன்.

ஈச்வரனை யொப்புக்கொள்ளாத நாஸ்திக மதங்கள் கிடக்க; ஈச்வரனுளனென்று ஒப்
புக் கொள்பவர்களுள் தார்க்கிகர் அநுமானத்தினால் ஈச்வரனை ஸாதிக்கின்றனர். உலகத்தில்
காணப்படுகின்ற பானை துணி வீடு மண்டபம் கோபுரம் முதலிய பொருள்களெல்லாம் ஒரு
கர்த்தாவையோ பலகர்த்தாக்களையோ உடையனவாகியே யிருப்பதால் இப்பிரபஞ்சமும் ஒரு
கர்த்தாவை யுடையதாகியே யிருக்கவேண்டும்; அந்த கர்த்தாவே ஈச்வரன்—என்பது தார்க்
கிகர்களின் அநுமானம். இவ்வநுமானங் கொண்டு ஈச்வரனை ஸாதிப்பது தவறு; ஏனெனில்,
இவ்வநுமானத்தினால் ஈச்வரனே தேறவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. விச்வாமித்ர முனி
வரும் பல ஸ்ருஷ்டிகளைச் செய்து விட்டதாக நாம் ஸ்ரீராமாயணம் முதலிய நூல்களைக்
கொண்டு அறிவதால் அம் முனிவரைப்போன்ற விலக்ஷண சக்திவாய்ந்த ஒரு புருஷன் பிர
பஞ்சத்திற்குக் கர்த்தாவாகத் தேறலாம்.

தவிரவும், தர்க்கமென்பது ஒரு நிலையில் நில்லாதது. தர்க்கமென்பது யுக்திவாதந்தானே.
அது அவரவர்களுடைய வாக் சாதுர்யத்தைப் பொறுத்தது. ஒரு தர்க்கம் மற்றொரு தர்க்
கத்தினால் தள்ளுண்டு போகவுங் காண்கிறோம். இங்கும் அங்ஙனேயாகுமாகில், பிரபஞ்ச
மெல்லாம் இயற்கையாகவே தோன்றுகின்றதென்னும் நிரீச்வரவாதமே முடிவு பெறக்கூடும்.
அவ்வாபத்திற்கு இடமறாப்படி வியாஸமுனிவர் தாம் செய்த [ப்ரஹ்மஸூத்ர மென்னும்]
சாரீரக மீமாம்ஸையில் "शास्त्रयोनित्वात्– சாஸ்த்ரயோநித்வாத்" என்றொரு ஸூத்ரமியற்றி
வேத சாஸ்திரங்களைக் கொண்டே ஈச்வரன் அறியத்தக்கவன் என்று முடிவு செய்தார். நம்
மாழ்வாரும் திருவாய்மொழியில் "உளன் சுடர் மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே" என்
கிற பாசுரத்தினால் தமது ஸித்தாந்தமுமதுவே யென்று காட்டியருளினார்.

# 33. உலகப் போக்கு.

தற்காலம் உலகில் இதரபாஷைகளின் பயிற்சி ஓங்கி வளர்ந்து வருகிறதே யொழிய ஸம்ஸ்க்ருத பாஷைப் பயிற்சி மிகவும் குன்றி விட்டதென்றே சொல்லலாம். ஆனால் ஸம்ஸ்க்ருத வித்யாப்யாஸம் அடியோடு லோப மடைந்துவிட்டதென்று சொல்ல முடியாது; ஆங்காங்கு அதுவும் நடந்துதான் வருகிறது. ஆனால் வேதாந்தப்படிப்பென்பது மிகவும் குறைந்து விட்டது. அதிலும் விசிஷ்டாத்வைத வேதாந்தப் படிப்பு முழு மோசமாய் விட்டது. சிரோமணி பரீக்ஷைகளில் வேதாந்த சிரோமணி பரீக்ஷையும் சில விடங்களில் வைக்கப் பட்டிருப்பதால் அதற்காகச் சிலர் வேதாந்த நூல்களைப் படிப்பதுண்டு. எனினும் ப்ராசீனரீதியில் வேதாந்தம் க்ரஹிக்கிற முறை அறவே மறைந்து விட்டது. ஸ்ரீ பாஷ்யம் கீதாபாஷ்யம் முதலான மஹா க்ரந்தங்களை சொக்காய் போட்டுக் கொண்டும் நாற்காலிகளில் காலைத் தொங்க விட்டுக் கொண்டும் கற்பிப்பவர்களும் கற்பவர்களுமே ஆங்காங்குக் காணப்படுகிறார்கள். நியம பூர்வமாகக் காலக்ஷேபம் செய்வதென்கிற பத்ததி ச்ரமப்பட்டுச் சில விடங்களில் தான் காணக்கூடியதாயிருக்கின்றது. இது வைதிகர்களுக்கு மிகவும் சோசநீயமான விஷயம். முறை தவறி க்ரஹிப்பதனால் பவித்ரமான ஜ்ஞானம் உண்டாவது அரிதே.

இன்னுமொன்றும் கேளீர்! இக்காலத்தில் பத்ரிகைகளின் ப்ரசாரமும் உபந்யாஸ கோஷ்டிகளும் எங்கும் வளர்ந்து வருகின்றன. 'பத்ரிகைகளை வாசித்துவிட்டால் நமக்கு எல்லாம் எளிதாகத் தெரிந்து விடுகிறது' என்றும், 'உபந்யாஸங்கள் கேட்டுவந்தால் அதிலிருந்தே நாம் எதையும் தெரிந்து கொள்ள முடியும்' என்றும் நினைத்து இக்காலத்தவர்கள் பத்ரிகைகள் வாசிப்பதிலும் உபந்யாஸங்கள் கேட்பதிலும் குதூஹலம் கொள்ளுகிறார்கள். இது தவறென்று நாம் சொல்லவில்லை. மிக நன்றே. ஆனால், பத்ரிகைகளில் வாசிக்கிற விஷயங்களும் உபந்யாஸங்களில் கேட்கிற விஷயங்களும் நன்கு க்ரஹிக்கப்படவும் தரிக்கப்படவும் வேண்டுமானால் அதற்கு எவ்வளவு யோக்யதை வேணுமென்பதை அவரவர்கள் ஆலோசிக்கவேணும்.

ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டால் உலகுக்கு மஹோபகாரமாயிருக்கும் என்று இப்படிப்பட்ட பல கோரிக்கைகளைப் பலர் வெளியிடுவதுண்டு. உயர்ந்த க்ரந்தங்களின் நூல்களை மொழிபெயர்த்து விடுவதனால் என்னாகும்? ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ள நூல்களெல்லாம் ஸம்ஸ்க்ருத பாஷையறிந்தவர்களுக்குப் பொருள் படுகின்றனவா? தமிழ்ப் பாஷையிலுள்ள நூல்களெல்லாம் தமிழ் மொழியறிந்தவர்களுக்குப் பயன்படுகின்றனவா? என்று சற்று ஆலோசிக்கவேண்டும். விஷயங்களிலுள்ள கடினத்தன்மையானது மொழி பெயர்ப்பினால் போய்விடுமா?

வேதாந்த நூல்களிலோ வியாகரண நூல்களிலோ தர்க்க க்ரந்தங்களிலோ வுள்ள பங்க்திகள் பெரும்பாலும் ஸம்ஸ்க்ருத பண்டிதர்களுக்குப் பரிசிதமான பதங்களும் வார்த்தைகளும் நிரம்பியவையே. அவ்வளவால் என்னாகிறது. பதப்பொருள் சொல்லிவிடலாமானாலும் கருத்து சிறிதும் தெரியாதன்றோ. அதற்கு என்ன காரணம்? விஷயங்களில் இயற்கையாயுள்ள கடினத்தன்மையே காரணம். குருகுலவாஸஞ் செய்து பங்க்திகளின்மேல் பலகால் உபதேசம் கேட்டாலொழிய கடினமான விஷயங்கள் மனத்திற் பதிய விரகில்லை. ஆகவே நம் முன்னோர்கள் கைப்பற்றியிருந்த வழியில் வித்யாக்ரஹணம் செய்வது மிகவும் அவசியமானது.

———o———

# 33. உலகப் போக்கு.

தற்காலம் உலகில் இதரபாஷைகளின் பயிற்சி ஓங்கி வளர்ந்து வருகிறதே யொழிய ஸம்ஸ்க்ருத பாஷைப் பயிற்சி மிகவும் குன்றி விட்டதென்றே சொல்லலாம். ஆனால் ஸம்ஸ்க்ருத வித்யாப்யாஸம் அடியோடு லோப மடைந்துவிட்ட தென்று சொல்ல முடியாது; ஆங்காங்கு அதுவும் நடந்துதான் வருகிறது. ஆனால் வேதாந்தப்படிப்பென்பது மிகவும் குறைந்து விட்டது. அதிலும் விசிஷ்டாத்வைத வேதாந்தப் படிப்பு முழு மோசமாய் விட்டது. சிரோமணி பரீக்ஷைகளில் வேதாந்த சிரோமணி பரீக்ஷையும் சில விடங்களில் வைக்கப் பட்டிருப்பதால் அதற்காகச் சிலர் வேதாந்த நூல்களைப் படிப்பதுண்டு. எனினும் ப்ராசீனரீதியில் வேதாந்தம் க்ரஹிக்கிற முறை அறவே மறைந்து விட்டது. ஸ்ரீ பாஷ்யம் கீதாபாஷ்யம் முதலான மஹாக்ரந்தங்களை, சொக்காய் போட்டுக் கொண்டும் நாற்காலிகளில் காலைத் தொங்க விட்டுக் கொண்டும் கற்பிப்பவர்களும் கற்பவர்களுமே ஆங்காங்குக் காணப்படுகிறார்கள். நியமபூர்வமாகக் காலக்ஷேபம் செய்வதென்கிற பத்ததி ச்ரமப்பட்டுச் சில விடங்களில் தான் காணக்கூடியதாயிருக்கின்றது. இது வைதிகர்களுக்கு மிகவும் சோசநீயமான விஷயம். முறை தவறி க்ரஹிப்பதனால் பவித்திரமான ஞானம் உண்டாவது அரிதே.

தவிர மற்றொன்றும் கேளீர்; இக்காலத்தில் பத்ரிகைகளின் ப்ரசாரமும் உபந்யாஸ கோஷ்டிகளும் எங்கும் வளர்ந்து வருகின்றன. 'பத்ரிகைகளை வாசித்துவிட்டால் நமக்கு எல்லாம் எளிதாகத் தெரிந்து விடுகிறது' என்றும், 'உபந்யாஸங்கள் கேட்டுவந்தால் அதிலிருந்தே நாம் எதையும் தெரிந்து கொள்ள முடியும்' என்றும் நினைத்து இக்காலத்தவர்கள் பத்ரிகைகள் வாசிப்பதிலும் உபந்யாஸங்கள் கேட்பதிலும் குதூஹலம் கொள்ளுகிறார்கள். இது தவறென்று நாம் சொல்லவில்லை. மிக நன்றே. ஆனால், பத்ரிகைகளில் வாசிக்கிற விஷயங்களும் உபந்யாஸங்களில் கேட்கிற விஷயங்களும் நன்கு க்ரஹிக்கப்படவும் தரிக்கப்படவும் வேண்டுமானால் அதற்கு எவ்வளவு யோக்யதை வேணுமென்பதை அவரவர்கள் ஆலோசிக்கவேணும்.

'ஸ்ரீபாஷ்யத்தைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டால் உலகுக்கு மஹோபகாரமாயிருக்கும்' என்று......இப்படிப்பட்ட பல கோரிக்கைகளைப் பலர் வெளியிடுவதுண்டு. உயர்ந்த கடினமான நூல்களை மொழிபெயர்த்து விடுவதனால் என்னாகும்? ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ள நூல்களெல்லாம் ஸம்ஸ்க்ருத பாஷையறிந்தவர்களுக்குப் பொருள் படுகின்றனவா? தமிழ்ப் பாஷையிலுள்ள நூல்களெல்லாம் தமிழ் மொழியறிந்தவர்களுக்குப் பயன்படுகின்றனவா? என்று சற்று ஆலோசிக்கவேண்டும். விஷயங்களிலுள்ள கடினத்தன்மையானது மொழி பெயர்ப்பினால் போய்விடுமா?

வேதாந்த நூல்களிலோ வியாகரண நூல்களிலோ தர்க்க க்ரந்தங்களிலோ வுள்ள பங்க்திகள் பெரும்பாலும் ஸம்ஸ்க்ருத பண்டிதர்களுக்குப் பரிசிதமான பதங்களும் வார்த்தைகளும் நிரம்பியவையே. அவ்வளவால் என்னாகிறது. பதப்பொருள் சொல்லிவிடலாமானாலும் கருத்து சிறிதும் தெரியாதன்றோ. அதற்கு என்ன காரணம்? விஷயங்களில் இயற்கையாயுள்ள கடினத்தன்மையே காரணம். குருகுலவாஸஞ் செய்து பங்க்திகளின்மேல் பலகால் உபதேசம் கேட்டாலொழிய கடினமான விஷயங்கள் மனத்திற் பதிய விரகில்லை. ஆகவே நம் முன்னோர்கள் கைப்பற்றியிருந்த வழியில் வித்யாக்ரஹணம் செய்வது மிகவும் அவசியமானது.

———o———

ஸ்ரீ:

# அறுபத்துமூன்றுஉபந்யாஸமாலையில்

## இரண்டாம்பகுதி—முப்பத்து மூன்றுவது உபந்யாஸம்

# 33. ப்ரபத்தியின் உபாயத்வ பூர்வபக்ஷம்.

---

நமக்கெல்லாம் முமுக்ஷுக்களென்று பெயர். மோக்ஷார்த்திகளென்றபடி. ஒரு பலனை விரும்புகிறவர்கள் ஒரு ஸாதனத்தை [அதாவது உபாயத்தை] அவலம்பித்தே யாக வேணுமென்பது உலக வியல்பு. நாம் ஒரு கிராமத்தையடைய வேணுமானல் சகடாரோஹணமோ பாதஸஞ்சாரமோ ஏதேனுமொரு காரியத்தைப் பண்ணியே யாகவேணும். ஒன்றுமே செய்யாமலிருந்தால் க்ராமம் சென்று சேரமுடியாதென்பது சொல்லவேணுமோ? இது ஒன்றேயன்று. எவ்விதமான பேறு பெற வேணுமானலும் அதற்கொன்று உபாயமாக இருந்தே தீரவேணும். ஸந்தானமுண்டாகவேணுமானல் விவாஹம் செய்துகொள்ளவேணும். வியாதி தீரவேணுமானல் ஔஷத ஸேவை பண்ணவேணும். ..........என்றிவ்வாறு பார்க்குமளவில் உபாயமில்லாமல் ஒரு பலனும் பெறமுடியாது. ஒவ்வொரு பேற்றுக்கும் ஏதேனுமோருபாயம் இருந்தே தீரவேணும். ஒரு ஸாதநாநுஷ்டானமுமில்லாமல் நமக்கு க்ராம ப்ராப்தி யுண்டாய்விடுமானல் மோக்ஷப்ராப்தியும் ஸாதநாநுஷ்டான மில்லாமலே உண்டாய் விடலாம். அப்படி உண்டாய்விடுகிறதென்னில் இன்னாரினையாரென்கிற வாசியின்றிக்கே அனைவர்க்கும் மோக்ஷப்ராப்தியுண்டாகலாம், இதுதான் ஸர்வமுக்தி ப்ரஸங்கமென்பது. இது வாராதபடி தடுக்க, முக்திக்கு ஒரு ஸாதனமுண்டென்று கொண்டுதானகவேண்டும். நாம் கர்மயோகஜ்ஞாநயோக பக்தியோகங்களை அஜ்ஞானத்தாலோ அசக்தியாலோ ஸ்வரூப விரோதத்தாலோ ஸ்வாதிகார விரோதத்தாலோ விட்டவர்கள். அவற்றைவிட்டு ப்ரபத்தியைப் பற்றினவர்களென்றும் சொல்லிக்கொள்ளுகிறோம், இதையுங் கூட உபாயமன்றென்று கழித்துவிட்டால் வேறு எதுதான் உபாயம்? எம்பெருமானைத்தான் உபாயமாகச் சொல்லுகிறோமே யென்னில், அவன் எப்போதும் யார்க்கும் ஸித்தனாகவேயுள்ளதலால் அவனை உபாயமாகச் சொல்லி லாபமென்ன? ஸர்வ முக்தி ப்ரஸங்க தோஷ பரிஹாரமில்லையே. எம்பெருமான் ஸித்தனகவே யிருந்தாலும் அவனை உபாயமாகப் பற்றவேண்டிய காரியமொன்று இருப்பதனாலே அது செய்வார்க்கே மோக்ஷமென்றும் அது செய்யாதார்க்கு மோக்ஷமில்லையென்றும் சொல்லுகிறோமாதலால் ஸர்வமுக்தி ப்ரஸங்க பரிஹாரம் வந்துவிடுகிறதென்னில், அவனை உபாயமாகப் பற்றுதலென்கிற காரியத்திற்கு உபாயத்வம் இசைந்தபடியாகத்தானே தேற்றும். இந்த உபாயத்வம் ஸ்ரீ பாஷ்யச்ருதப்ரகாசிகாதிகளாலும் உபய ஸம்ப்ரதாயஸ்தஸகலாசார்ய ஸ்ரீ ஸூக்திகளாலும் ஸ்பஷ்டமாகத் தெரியுமிருக்கிறது. திருக்கச்சிநம்பி யாறு வார்த்தைகளில் "மோக்ஷோபாய: ப்ரபத்திஸ்யாத்" என்பதும் ஒரு வார்த்தையென்று மறக்கமுடியாமலிருப்பதால் ப்ரபத்தி உபாயமன்றென்று கொள்வது தவறு என்கைக்கு இது ஒன்றே போதுமே. ப்ரபத்த்யுபாயம், ப்ரபத்த்யுபாயம் என்று பன்முறையும் ஸ்ரீ வசநபூஷணதிகளிலுமிருப்பதாலும், *சதுர்விதமான தேஹ வர்ணாச்ரமாதிகார பல மோக்ஷஸாதந* இத்யாதியான ஆசார்ய ஹ்ருதய சூர்ணையில் நான்கு நான்கான பலவற்றையும் எடுத்துக் காட்டுகிற அதடிவில் ஸாதனங்களையும் நான்காகக் காட்டியிருக்குமிடத்தில் "கர்மஜ்ஞாந

பக்தி ப்ரபத்திகளென்கிற நாலு வகைப்பட்ட ஸாதநம்" என்று மணவாளமாமுனிகளும் வியாக்கியானித்தருளி யிருக்கையாலும் ப்ரபத்தியை உபாயமென்றுதான் சொல்லவேண்டும்; அன்றென்பதில் ஔசித்யமில்லையே; ஸகலப்ரமாண விரோதமும் காண்கிறதே. இதில் அடியேனுக்குப் பரமக்ருபதிகரமாக ஸப்ரமாணமாய் ஸாதித்தருளவேணும்—என்றான் சிஷ்யன். அதன்மேல் ஸதாசார்யன் ஸாதிப்பது;—

## 34. ப்ரபத்தியின் அநுபாயத்வ ஸித்தாந்தம்.

குளத்திலிருந்து நாம் தீர்த்தம் கொள்வது இரண்டு விதம். குளத்தில் தீர்த்தமிருக்கிறபடியே அதைப் பாத்திரத்தில் மொண்டுவருவது ஒருவிதம். பலகால் வடிக்கட்டிக் கொண்டுவருவது மற்றொரு விதம். *அஸாரம் அல்ப ஸாரஞ்ச ஸாரம் ஸாரதரம் த்யஜேத், பஜேத் ஸாரதமம் சாஸ்த்ரே ரத்நாகர இவாம்ருதம்* என்கிற வசனம் ஸர்வ ஸம்ப்ரதிபந்நம். அஸாரத்தையும் அல்பஸாரத்தையும் தள்ளுகிறப்போலே ஸாரத்தையும் ஸாரதரத்தையும் தள்ள வேண்டுமென்றும் ஸாரதமத்தையே கொள்ளவேண்டு மென்றும் சிக்ஷிக்கிறார்கள். இதனால், சாஸ்த்ரங்களில் அர்த்தங்கள் கலந்த கட்டியாயிருக்குமென்றும் அவற்றை நன்கு ஆய்ந்து உத்தமோத்தமமான அர்த்தத்தைக் கடைப்பிடிக்கவேணுமென்றும் சாஸ்த்ரமே தெரிவிக்கிறதாகத் தேறுகிறது.

கம்பீரமான சாஸ்த்ரங்களில் இன்று நாம் புதிதாக ஆராய்ச்சி செய்ய அவச்யமுமில்லை, நமக்கு அதிகாரமுமில்லை. சாஸ்த்ரக் கடலில் ஆழ இழிய வல்லவர்களான கூரத்தாழ்வான், பட்டர், பிள்ளை லோகாசார்யர், வேதாந்த தேசிகன், மணவாள மாமுனிகள் போன்ற மஹாசார்யர்கள் நன்கு ஆராய்ந்து கடல் கடைந்து அமுதம் கொடுக்குமாபோலே வடிக்கட்டித்தேறின மஹார்த்தத்தை அருளியிருக்கையாலே இதில் உண்மையுணர நமக்கொரு சிரமமுமில்லை கிடாய். கூறிக்கொண்டு இது நீ கேள். முதலில் வேதாந்த தேசிகனுடைய திவ்ய ஸூக்திகளைக் கொண்டே தெரிவிக்கிறேன்; அவர் தாம் வேதாந்தாசார்யராகையாலே வேதாந்த விருத்தமாக அருளிச்செய்யகில்லார். ஆகவே அவர் தமக்கு முக்யஉபஜீவ்யமான விருந்த வேதாந்த வாக்யங்களையும் தத்பாஷ்யங்களையும் கொண்டே அருளிச்செய்கையாலே அவருடைய ஸ்ரீ ஸூக்திக்குமேல் வேறு ஒரு வேதாந்தத்திற்கும் நாம் சென்று உழல வேண்டா. அவர் தாம் அருளிச்செய்த ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் உபாய விபாகாதிகாரத்தில் முகப்பிலேயே ஒரு அற்புதமான ச்லோகமருளிச்செய்திருக்கிறார்; அதொன்றே கலங்கினவர்களுக்கு நல்ல தெளிவை யுண்டாக்கவல்லது. அந்த ச்லோகமிது:

> "உபாய: ஸ்வப்ராப்தே ருபநிஷததீதஸ் ஸ்வபகவாந்
> ப்ரஸத்த்யை தஸ்யோக்தே ப்ரபதந நிதித்யாஸநகதீ,
> ததாரோஹ: பும்ஸாம் ஸுக்ருத பரிபாகேந மஹதா
> நிதாநம் தத்ராபி ஸ்வயம் அகில நிர்மாண நிபுண:" என்று.

இதன் கருத்தாவது—எம்பெருமானையடைவதற்கு அவன்தானே உபாயமாக வேதாந்தங்களில் ஓதப்பட்டிருக்கிறான். பக்தி ப்ரபத்திகள் உபாயமல்ல; ஆனால் அவற்றைச் செய்தால் அவை அவன் திருவுள்ளமுகப்பதற்கு ஹேதுவாகும். அந்த பக்தி ப்ரபத்திகளில் ஒருவனுக்கு நிஷ்டையுண்டாக வேணுமானால் லேசாக உண்டாய்விடாது; மஹத்தான ஸுக்ருதத்தின் பலனாகவே அது விளையக்கூடியது. இந்த ஸுக்ருதத்தை நாமே ஸம்பாதித்துக்கொள்ளலாமென்று நினைக்க வொண்ணாது; அப்பெருமான் தானே அதற்

கும் மூலகாரணம் என்றதாயிற்று. இந்த ச்லோகத்தில் ஒவ்வொரு பதமும் உயிராயிருக்கச் செய்தேயும் "விதாகம் தத்ராபி ஸ்வயம் அகில நிர்மாண நிபுண:" என்கிற சரம் சரணமான து நிலையாயிருக்கும். ஸகல விரோதங்களும் இதில் முடிந்துவிடும். "தத்ரைகத்ர ஜடித்யுபாயமிதி விலயம்......கல்லோல கோலாஹல:" என்று தேசிகன் தாமே வேறொரு விஷயத்திற்கு ஸாதித்த கணக்கிலே, ப்ரபத்த்யுபாயத்வவாதி வைஹதுக கதா கல்லோல கோலாஹல ஸர்வஸ்வமும் இந்த வொரு பாதத்திலே சாந்தமாய்விடும். "ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷி பலம்" என்று முமுக்ஷுப்படியில் பிள்ளை லோகாசார்யர் அருளிச் செய்ததையே ஸ்வாமி அப்படியே ச்லோகமாக்கி வைத்தார். அங்கு பிள்ளை லோகாசார்யர் ஆறு சூர்ணைகளாலே அருளிய அர்த்தங்களையே தேசிகன் ஒரு பெரிய ச்லோகமாக்கி வைத்தருளினாராயிற்று. அந்த ஆறு சூர்ணைகளாவன :—

"இதனால் வ்ரஜ என்கிற ஸ்வீகாரத்தில் உபாயபாவத்தைத் தவிர்க்கிறது. ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது. ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷி பலம். * அதுமுலை இன்னருளே.* இத்தை யொழியவும் தானே காரியம்செய்யுமென்று நினைக்கக்கடவன். அல்லாதபோது உபாய நைரபேக்ஷ்யம் ஜீவியாது." என்னுமிவை.

இந்த ஆறு சூர்ணைகளுள் தேசிகன் நிதியாகக்கொண்ட சூர்ணை "ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷி பலம்" என்பதே. அதன் கருத்தை மணவாளமாமுனிகள் விவரித்தருளினார். "கரணகளேபர விதுரனாய் (ஸௌமம) போக மோக்ஷ சூந்யனாய் அசிதவிசேஷிதனாய்க் கிடக்கிற தசையிலே கரண களேபர விசிஷ்டனாய் ஜ்ஞாந விகாஸயுக்தனாம்படி ஸ்ருஷ்டித்து * எதிர் சூழல் புக்கென்கிறபடியே இவனை அங்கீகரிக்கைக்காக அவன் அநேகாவதாரங்களைப் பண்ணி* அவதரித்தவிடங்களிலே ஆச்ரயணருசி விச்வாஸஜநகமான தன் குணசேஷ்டிதாதிகளை ப்ரகாசிப்பித்து இவ்வழியாலே அவன் பண்ணின க்ருஷியாலே பலித்தது இது என்கை." என்று. ஸகல சாஸ்த்ரார்த்தங்களும்இதில் அடங்கிவிட்டன. "தத்ராபி ஸ்வயம் நிதாநம்" என்று வேதாந்தகுரு நிஷ்கர்ஷித்தருளின பிறகு, நம் தலையிலே ஒன்று கிடப்பதாகவும் அது ஸாதநமாகிறதாகவும் வாய் திறக்க வழியுண்டோ?

இவ்வர்த்தத்தை ந்யாஸதசகத்திலும் வெகு அற்புதமாக அமைத்துக் காட்டுகிறார்— "ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்த ஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம்" என்று. இந்த ச்லோகத்தில் எத்தனை ஸ்வபதமுள்ளனவோ [illegible] இந்த சேதநன் தலையிலே ஒன்றும் கிடையாதென்[illegible] [illegible] ஸ்வபதங்களையிட்டிருக்கிறார். இதில் உயிரான உக்தி [illegible] பண்ணவேண்டும். ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணும்படி [illegible] அவனே; ஆத்ம ஸமர்ப்பணத்தைப் பண்ணிக்கொண்டதும் அவன் [illegible] பலனைப் பெற்றுக் களிப்பதும் அவனே—என்றன்றோ ஸ்பஷ்டமாக அருளிச் செய்தார். ஸ்ரீவசநபூஷணத்தில் "ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானும் அவனே" என்ற சூர்ணையின் ஸ்வச்சப்ரதிச்சந்தமன்றோ இது.

இப்படி இப்பேராசிரியர்கள் அருளிச்செய்வதற்கு யாது காரணமென்னில்; எம்பெருமானுடைய திவ்ய ஸ்வாதந்த்ர்யமே காரணம். கீதையில் (8—14ல்) "மத்ப்ராப்த்ய நுகுண—உபாஸகவிபாகம் அஹமேவ கரோமீதி அர்த்த:" என்றன்றோ பாஷ்யகாரர் பணித்தது. *யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:* என்னும் ச்ருதி மூலமான இவ்வர்த்தம் யதார்த்தவாதமே யொழிய

கும் மூலகாரணம் என்றதாயிற்று. இந்த ச்லோகத்தில் ஒவ்வொரு பதமும் உயிராயிருக்கச் செய்தேயும் "நிதாநம் தத்ராபி ஸ்வயம் அகில நிர்மாண நிபுண:" என்கிற சாமசரண மானது ஜீவநாடியாயிருக்கும். ஸகல விவாதங்களும் இதில் முடிந்துவிடும். "தத்ரைகத்ர ஜடித்யுபைதி விலயம்......கல்லோல கோலாஹல:" என்று தேசிகன் தாமே வேறொரு விஷயத்திற்கு ஸாதித்த கணக்கிலே, ப்ரபத்த்யுபாயத்வவாதி ஹைதுக கதா கல்லோல கோலாஹல ஸர்வஸ்வமும் இந்தவொரு பாதத்திலே சாந்தமாய்விடும். "ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷி பலம்" என்று முமுக்ஷுப்படியில் பிள்ளை லோகாசார்ய் அருளிச் செய்ததையே ஸ்வாமி அப்படியே ச்லோகமாக்கி வைத்தார். அங்கு பிள்ளை லோகாசார்யர் ஆறு சூர்ணைகளாலே அருளிய அர்த்தங்களையே தேசிகன் ஒரு பெரிய ச்லோகமாக்கி வைத்தருளினார்ஆயிற்று. அந்த ஆறு சூர்ணைகளாவன :—

"இததால் வ்ரஜ என்கிற ஸ்வீகாரத்தில் உபாயபாவத்தைத் தவிர்க்கிறது. ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது. ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷி பலம். *அதுவுமவனதின்னருளே.* இத்தை யொழியவும் தானே காரியஞ்செய்யுமென்று நினைக்கக்கடவன். அல்லாதபோது உபாய நைரபேக்ஷ்யம் ஜீவியாது." என்னுமிவை.

இந்த ஆறு சூர்ணைகளுள் தேசிகன் நிதியாகக்கொண்ட சூர்ணை "ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷி பலம்" என்பதே. அதன் கருத்தை மணவாள மாமுனிகள் விவரித்தருளினார். "கரணகளேபர விதுரனாய் (ஹா ம) போக மோக்ஷ சூந்யனாய் அசித்விசேஷிதனாய்க் கிடக்கிற தசையிலே கரண களேபர விசிஷ்டனாய் ஜ்ஞாந விகாஸ யுக்தனாம்படி ஸ்ருஷ்டித்து * எதிர் சூழல் புக்கென்கிறபடியே இவனை அங்கீகரிக்கைக்காக அவன் அநேகாவதாரங்களைப் பண்ணி அவதரித்தவிடங்களிலே ஆச்ரயணருசி விச்வாஸ ஜநகமான தன் குணசேஷ்டிதாதிகளை ப்ரகாசிப்பித்து இவ்வழியாலே அவன் பண்ணின க்ருஷியாலே பலித்தது இது என்கை." என்று. ஸகல சாஸ்த்ரார்த்தங்களும் இதில் அடங்கி விட்டன. "தத்ராபி ஸ்வயம் நிதாநம்" என்று வேதாந்தகுரு நிஷ்கர்ஷித்தருளின பிறகு, நம் தலையிலே ஒன்று கிடப்பதாகவும் அது ஸாதநமாகிறதாகவும் வாய் திறக்க வழியுண்டோ?

இவ்வர்த்தத்தை ந்யாஸதசகத்திலும் வெகு அத்புதமாக அமைத்துக் காட்டுகிறார்— "ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்த ஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம்" என்று. இந்த ச்லோகத்தில் எத்தனை ஸ்வபதமுள்ளதென்று எண்ணிப்பார்க்கவேணும். இந்த சேதநன் தலையிலே ஒன்றும் கிடையாதென்பதை வெளியிடுகைக்கன்றோ ஒன்பது ஸ்வபதங்களையிட்டிருக்கிறார். இதில் உயிரான உத்தரார்த்தத்தை புத்திமான்கள் மனனம் பண்ணவேண்டும். ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணும்படி புத்தியைக் கொடுத்ததும் அவனே; ஆத்ம ஸமர்ப்பணத்தைப் பண்ணிக்கொண்டதும் அவனே — ஸ்வலாபரூபமான பலனைப் பெற்றுக் களிப்பதும் அவனே — என்றன்றோ ஸ்பஷ்டமாக அருளிச் செய்கிறார். ஸ்ரீவசநபூஷணத்தில் "ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானும் அவனே" என்ற சூர்ணையின் ஸ்வச்சப்ரதிச்சந்தமன்றோ இது.

இப்படி இப்பேராசிரியர்கள் அருளிச்செய்வதற்கு யாது காரணமென்னில்; எம்பெருமானுடைய திவ்ய ஸூக்தியே காரணம். கீதையில் (8—14ல்) "மத்ப்ராப்த்யநுகுண — உபாஸநவிபாகம் அஹமேவ ததாமீதி அர்த்த:" என்றன்றோ பாஷ்யகாரர் பணித்தது. *யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:* என்னும் ச்ருதி மூலமான இவ்வர்த்தம் யதார்த்தவாதமே யொழிய

அதிவர்தமன்று—என்று அங்கு தாத்பர்ய சந்த்ரிகையில் தேசிகனுமருளிச் செய்தபடியால் இவ்வர்த்தம் அசைக்கமுடியாதபடி யன்றோ ஸ்தாவர ப்ரதிஷ்டை பெற்றுளது. கூரத்தாழ்வானும் "வரத! தவகலு ப்ரஸாதாத் ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்" என்கிறார். பேரருளாளனே! என் வாயில் சரணமென்கிற சொல்லை வருவித்ததும் நீயேயன்றோ. இவ்விதமாக நீ அநுக்ரஹம் செய்யாவிடில் என்வாயில் சரணமென்கிற சொல்தானும் வருமோ? என்கை.

நம்மாழ்வார் *உணர்விலும்ப ரொருவனை.........என்னுணர்வினுள்ளே யிருத்தினேன்* என்று, தாம் ஏதோ செய்ததாக முதலில் சொல்லிவிட்டு உடனே "அதுவும் அவனதின்னருளே" என்று உண்மையான சாஸ்த்ரார்த்தத்தை வெளியிட்டருளினர். ஆக இவ்வளவையும் தேசிகன் தமது திருவுள்ளத்தில் நன்கு தேக்கிக்கொண்டிருப்பவராதலால் * நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண: * என்று சீமைத் தீர்ப்பாக முடித்துப் பேசினர். நிதாநம் என்கிற சொல்லின் பொருள் தெரியுமன்றோ. 'நிதாநம்து ஆதிகாரணம்' என்பது அமரகோசம். எம்பெருமானே மூல ஸுக்ருதமென்றபடி.

ஒருவன் கடையிலே போய் கடைக்காரன் கொடுத்த காசைக் கொண்டே ஒரு பீதாம்பரம் வாங்கியணிந்துகொண்டு 'இதை நான் விலை கொடுத்து வாங்கினேன்' என்று சொல்லத் துணிவனோ? எம்பெருமான் தானே ஸ்வார்த்தமாக நம் வாயில் சரணமென்கிற சொல்லை வருவித்துக் கொள்வதும் கைகூப்பும்படி செய்வதும் கீழே விழுந்து இறைஞ்சும்படி செய்வதுமான செயல் இது என்று தேறிவிட்டபின்பு உபாயமென்று வாய் திறக்க யோக்யதை யுண்டோ? ஆனால், உபாயமென்று பல மஹான்களும் சொல்லியிருக்கிறார்களே யென்று சிலர் கலங்கக்கூடும். இந்த கலக்கத்தையும் நன்கு சமிப்பிக்கிறேன். ஸ்ரீ வசநபூஷணத்தில், (55) "இது தனக்கு ஸ்வரூபம் தன்னைப் பொறுகொழிகை" என்றசூர்ணையின் மணவாள முனிகளின் வியாக்கியானம்: "........உபாய வரணாத்மகமான தன்னை உபாயமென்ன ஸஹியாதபடி யிருக்கை; அதாவது, ஆபாத ப்ரதீதியிலொழிய உள்ளபடி நிரூபித்தால் ஸ்வஸமிக் உபாயத்வ ப்ரதிபத்திக்கு யோக்யமாகமாட்டாதபடியிருக்கை யென்றபடி." என்பதாம்.

மேலே (134) "ப்ரபத்த்யுபாயத்துக்கு இக்குற்றங்களொன்றுமில்லை" என்ற சூர்ணையின் வியாக்கியானத்தில்—" இக்குற்றங்களொன்றுமில்லை யென்கையாலே மற்றொரு குற்றமுண்டென்னுமிடம் தோற்றுகிறது; அதாவது, வஸ்துத: உபாயத்வம் தனக்கின்றிக்கே யிருக்கச்செய்தே ஆபாத ப்ரதீதியிலே உபாயத்வ ப்ரதிபத்த்யர்ஹமாம்படி யிருக்கை" என்றருளினர். ... ... ... ... (34)

## 35. ப்ரபத்தியின் அநுபாயத்வ ப்ரதிஷ்டாபனர்

உலகில், ஒரு பலனுக்கு ஒரு ஸாதனம் வேணுமென்று நினைத்திருக்கை ஸாமான்யமான இயல்பாகையாலே ப்ரபத்தியையே ஸாதநமாக நினைத்துக்கொள்கவென்னுமபிப்ராயத்தாலே இதை உபாயமென்றும் ஸாதனமென்றும் சொல்லுவதனால் பாதகமொன்றுமில்லை. உடையவர் ஸ்ரீ வைகுண்ட கத்யத்தில் " தத்பாதாம்புஜத்வயப்ரபத்தேரந்யத் நமே கல்பகோடி ஸஹஸ்ரேணாபி ஸாதநமஸ்தி" என்றருளிச் செய்தது ப்ரபத்தியை ஸாதநமென்று நிஷ்கர்ஷித்தபடியன்று. ஒரு ஸாதநாநுஷ்டாநம் வேணுமென்று நிர்ப்பந்தமுண்டாகில் இந்த ப்ரபத்திக்கு மேற்பட்ட ஒரு ஸாதனமும் கிடைப்பதரிது என்று கூறினமாத்ரமே; ஆப்தனொருவனையே கடையிலே சென்று ஒரு வஸ்துவை விரும்பி, இதற்கு என்பால் விலை

வேணுமென்று நிர்ப்பந்தமுண்டாகில் இந்த அஞ்ஜலியையே விலையாகக் கொள், வேறு விலை என்னிடமெதிர்பாராதே என்கிறுனொருவன். இதனால், அஞ்ஜலி விலையாய்விடாது. ஆழ்வான் ஸ்ரீ வைகுண்ட ஸ்தவத்தின் முடிவு ச்லோகமான *நிர்ப்பந்த ஏஷ யதி தே* என்பதில் இதனை நன்கு தெளியவைத்தார்.

அவருடைய திருக்குமாரரான பட்டர் இவ்விஷயத்தில் ஒருவரும் கலங்காதபடிக்கு மிகச் சிறந்த ஸூக்தியொன்று அருளியிருக்கிறார் "உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் நது குணௌ" என்று. உபாயத்வமும் உபேயத்வமும் பகவானுக்கு குணங்களல்ல, கிந்து, ஸ்வரூப நிரூபகதர்மம் என்றபடி. இதன் கருத்து தெரியுமோ? உலகில் பல வஸ்துக்களை உபேயமாகக் கொள்வாரிருந்தாலும் எம்பெருமானொருவனுக்குத்தான் உபேயத்வம் உண்மையாக உள்ளதுபோல, உபாயத்வமும் அவனொருவனுக்குத்தான் உள்ளது: வேறு எதிலும் அது கிடையாது, பொருந்தாது என்றபடி. "தவ தத்வம் நது குணௌ" என்கிற இந்த ஸ்ரீஸூக்திக்கு வேறு பொருள் கிடையாது. 'ப்ரபத்தி உபாயம்' என்று சொன்னால் *ந்யாஸ இதி ப்ரஹ்ம; *ந்யாஸ இத்யாஹுர் மநீஷிணோ ப்ரஹ்மாணம்* என்ற உபநிஷத்தின்படி ப்ரபத்தவ்யனை எம்பெருமானையே உபாயமாகச் சொன்னதாய்த் தேறுமேயொழிய வேறொன்றும் தேறாது.

தேசிகனுடைய ந்யாஸ திலகத்தில் மிக அற்புதமானவொரு ஸ்ரீஸூக்திரத்னமுள்ளது. (11) *த்வய் யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம்* என்று. இதன் பொருள் தெரியுமா? நம்முடைய செயல் ஒன்றும் உபாயமன்றென்று தள்ளி எம்பெருமானொருவனையே உபாயமாகக்கொண்டார்கள் சில ஏகாந்திகள்; அந்த எம்பெருமானிடத்தில்கூட உபாயத்வ புத்திவைக்காமல் உபேயத்வ புத்தியை மாத்திரமே வைக்கிற பரமைகாந்திகளே நமக்குத் தஞ்சமென்கிறார் இதில். எம்பெருமானுக்குக் கூட உபாயத்வத்தை ஸஹியாதவர்கள் அவன் செய்வித்தவொரு சிறு காரியத்தை எங்ஙனே உபாயமாகக் கொள்வர்?

*த்வய் யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம்* என்கிற இந்த பரமாத்புத ஸூக்தியை மனனம் பண்ணப் பண்ண ஒரு அரும் பெரும்பொருள் தோன்றும். அதாவது, பாம்பு புலி சிங்கம் முதலிய ஜந்துக்கள் மிகவும் பயங்கரம் என்று உலகமெல்லாம் கொண்டிருக்கிறது. இதைக் கண்டிப்பாரில்லை, கண்டிக்க அவசியமுமில்லை. ஆனால், பயங்கரத்வம் என்பது அதற்கு அவர்ஜநீயமான தன்மையன்று; அவற்றைக் கண்டு அஞ்சுகிறவர்களுக்கு அவை பயங்கரம். அவற்றோடேயே கலந்து பழகுகிறவர்களுக்கு அவை ஸௌமுகங்களே. பெரியாழ்வார் *இலைவேய் குரம்பைத் தவமாமுனிவர் இருந்தார் நடுவே சென்றணுச் சொறியக் கோலவாய்ச் சினவேங்கைகள் நின்றுறங்கும்* என்கிறார். பதினறடி வேங்கைப் புலிகள் சில மஹான்களினருகே சென்று நிற்க, அவர்கள் இவற்றின் கழுத்தைச் சொறிய இவை நின்றபடியே உறங்குவதாக அருளிச்செய்தபடி. சித்திரகூட மலையில் இராமன் லக்ஷ்மணனுக்கு ஆயிரக்கணக்கான மலைப் பாம்புகளைக் காட்டி "கடிய மாசுணம் கற்றறிந்தவரெனவடங்கிச், சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாம் மிதித்தேறப், படிகள் தாமெனத் தாழ்வன கிடப்பன பாராய்" என்று, அந்த மலைப்பாம்புகள் முனிவர்கள் மிதித்தேறத்தக்க மலைப்படிகளாயிருக்கும்படியைக் கூறுவதாகக் கம்பராமாயணமுள்ளது. அவ்வளவுதூரம் போகவேணுமோ? சிங்கம் புலிகளின் வாயிலே ஸதா கையிட்டு உணவூட்டுவாரைக் கண்ணாரக் காணுகின்றோம். இதனால் என்ன தெரிகிறது. அவரவர்கள்

தம்தம் கொள்கைக்கும் பழக்கத்திற்கும் தக்கபடி வஸ்துக்களின் தன்மைகளை க்ரஹிக்கிறார்களத்தனை என்று ஸ்பஷ்டமாகிறது. இதே ந்யாயந்தான் ப்ரபத்தி விஷயத்திலும்.

லக்ஷம் ரூபாய் விலையுள்ள ஒரு ரத்னம் மதிப்பறியாத செம்படவன் கையில் கிடைத்தால் அது இரண்டணா விலைக்கு மாறுகிறது. அதுவே ஒரு வணிகன் கையில் கிடைத்தால் உயர்ந்த விலைக்கு மாறுகிறது. அதுவே ஸார்வபௌமனான மஹாராஜன் கையில் கிடைத்தால் ஒரு விலைக்கும் மாறாமல் ஸ்வயம், போக்யமாய்த் திகழ்கின்றது. இவ்வண்ணமாகவே, ப்ரபத்தியையோ ப்ரபத்தவ்யனான எம்பெருமானையோ அல்ப ப்ரயோஜனங்களுக்கு உபாயமாக்குவாருமுண்டு; சிரிதான மோக்ஷத்திற்கு உபாயமாக்குவாருமுண்டு; *வைகுண்டே வாஸேபி நமே பிலாஷ:* என்றிருக்கும் உத்தமாதிகாரிகள், உபாயமென்று வாயால் சொல்லுவதையும் நெஞ்சால் நினைப்பதையுங்கூட ஸஹியாமல் உபேயமாகவே அறுதியிடுகிறார்கள். ஆகவேதான் "நின் காதலை அருளெனக்கு" என்றும் "பகவந் பக்திமபி ப்ரயச்ச மே" என்றும் ப்ரார்த்திக்கிறார்கள். உபாயமாயிருந்தால் இப்படி ப்ரார்த்திப்பர்களா? கடையில் பணத்தைக்கொடுத்து சரக்கு கேட்பாருண்டேயன்றி, பணம் கொடு என்று கேட்பாருண்டோ? அப்படியொருவர் கேட்டால், அவர்க்குப் பணம் உபேயமேயல்லது உபாயமன்று என்று தேறுவதற்கு அருமையுண்டோ?

ஏவஞ்ச, செம்படவனைப்போன்றவர்கள் ப்ரபத்தியை அற்ப பலன்களுக்கு ஸாதனமாக்குகின்றனர்; வியாபாரியான வைச்யனைப் போன்றவர்கள் மோக்ஷ பல ஸாதனமாக்குகின்றனர்; ஸார்வ பௌம ஸதர்மாக்கள் ஒன்றுக்கும் ஸாதனமாக்காதே ஸ்வயம் போக்யமாகக் கொள்ளுகின்றனர். இதுதான் *த்வய்யேகஸ்மிந்நபி ஸாதநத்வம் விஜஹத:* என்கிற தேசிக திவ்ய ஸூக்தியால் தெளிவிக்கப் பட்ட மஹார்த்தம். இந்த ரீதியில் ப்ரபத்தியை உபாயமாகக்கொள்வாரைத் தடுக்கவல்லாருண்டோ? ஒட்டுமாம்பழத்தைப் பறித்து விற்பனை செய்பவன் ஒருவன்; திருத்தி புஜிப்பவனொருவன். விற்பவனுக்கு அது உபாயமாய், புஜிப்பவனுக்கு உபேயமாகிறது. அதிகாரிகளுக்குத்தக்கபடி உபாயத்வத்தையும் உபேயத்வத்தையும் கொண்டிருக்கிற ஒரு வஸ்துவிலே உபாயத்வத்தைத் தடுப்பாரார்?

ஸாரமான வார்த்தை இவ்வளவே; ப்ரபத்தியானது அதமாதிகாரிகளுக்கு அல்ப பல ஸாதனம்; மத்யமாதிகாரிகளுக்கு மோக்ஷ பல ஸாதனம். * நல்வீடு பெறினும் கொள்வதெண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே * (திருவாசிரியம்-2) என்றிருக்கும் உத்தமாதிகாரிகளுக்கு அது உபேயமேயொழிய உபாயமன்று. உபாயந்தானென்று முஷ்டி பிடிக்கிறவர்கள் தங்கள் அதிகாரத்திற்குச் சேர அங்ஙனே வாதிப்பது மிகப் பொருந்தியதே.

திருக்கச்சிநம்பியின் ஆறுவார்த்தைகளில் * மோக்ஷோபாய: ப்ரபத்திஸ் ஸ்யாத் * என்றதும் மிகப் பொருத்தமே. 'ப்ரபத்தி உபாயமே' என்று சப்த ப்ரயோகமா? ப்ரபத்தியே உபாயம் என்று சப்த ப்ரயோகமா? என்று பார்க்கவேணும். ப்ரபத்தி உபாயமா அன்று? என்கிற கேள்வியும் அதற்கு ஸமாதானமும் அங்கே கிடையாதாகையாலே 'ப்ரபத்தி உபாயமே' யென்கிற சப்த ப்ரயோகமில்லை. ஸாத்யத்திற்கு ஸாதனமாக ஒன்றைப் பற்ற வேணுமே, எதைப் பற்றுவது? என்று சங்கை; ப்ரபத்தியைப்பற்றுவது என்று ஸமாதானம். சரணாகதியென்னும் சார்வுடன் மற்றொன்றை அரணாகக்கொள்ளலாகாது என்ற தத்தனை.

## இவ்வளவு கேட்ட ஸச்சிஷ்யன் விஜ்ஞாபிக்கிறான்.

[illegible] இவ்விஷயத்தில் ஆயிரம் குதர்க்கிகள் வந்தாலும் அ[illegible] [illegible] *[illegible]தோஸ்மி கதலங்தேஹ:* ... ...

# 36. நம்மாழ்வார் பெருமை.

ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வாருடைய பெருமைக்கடலில் சில திவலைகளைப் பருகிக் களிக்கிறோம். பொய்கையார் பூதத்தார் பேயார் திருமழிசைப்பிரான் முதலான மற்றையாழ்வார்களும் தோன்றித் திவ்யப்ரபந்தங்களையருளிச் செய்திருந்தாலும் ஒரு கால விசேஷத்திலே அத்திருமொழிகளெல்லாம் உலகில் ப்ரசாரமற்று மறைந்தனவாக, ஸ்ரீமந் நாதமுனிகளென்னும் பேராசிரியர் ஆழ்வார்திருநகரிக் கெழுந்தருளித் திருப்புளியாழ்வாரடியிலே நியமத்துடனிருந்து கண்ணிநுண் சிறுத்தாம்பென்கிற நம்மாழ்வார் துதியைப் பன்முறை ஆவ்ருத்தி செய்து யோகதசையிலே நம்மாழ்வாரை ஸாக்ஷாத்கரிக்கப் பெற்று அவருடைய திருவாக்கிலிருந்தே நாலாயிரம் பாசுரங்களையும் அருள் செய்யப் பெற்றாரென்பது ஸம்பிரதாயம். இதுபற்றியே "நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே" என்று நம்மாழ்வார் வாழ்த்தப்பட்டு வருகின்றார். இதுவே காரணமாகத்தான் ப்ரபந்நஜநகூடஸ்தரென்கிற விருதும் நம்மாழ்வார்க்கு நிகழ்ந்து வருகின்றது. இவரையே அவயவியாகவும் மற்றையாழ்வார்களை அவயவபூதர்களாகவும் பூருவர்கள் நிரூபித்துள்ளார்கள். அப்படியே இவருடைய திவ்யப்ரபந்தங்களையே அங்கியாகவும் மற்றையாழ்வார்களினருளிச் செயல்களை அங்கோபாங்கங்களாகவும் அறுதியிட்டுள்ளார்கள்.

இக்காலத்தில் சிலர் கூறுகிற வாதங்களை நாம் இங்கு எடுத்துக் காட்டி ஆஸ்திகர்கள் த்ருப்தியடையுமாறு ஸமாதானம் வெளியிட விரும்புகின்றோம். ஆனால், வழிப்போக்கர்களின் வாதங்களை நாம் பொருள்படுத்தவே தகாதென்றும் அவற்றுக்கு ஸமாதானங் கூறுவதென்கிற வழியிலேயே நுழையலாகாதென்றும் சில பெரியார் கருதுவதுண்டு. இப்படியே நாம் உபேக்ஷித்துப் போவதனால் நம்முடைய ஸம்பிரதாயத்திற்கு நஷ்டமே மலிகின்றது. சிறிது ஆஸ்திக்யமுடையவர்களும் கலங்கித் தெளிவுபெறாமல் விபரீத புத்திகளைக் கொண்டு நசித்துப்போக ஹேதுவாகிறது. ஆகவே இக்காலத்தவர்களின் கூற்றுக்களை அநுவதித்து நாம் ஸமாதானம் தெரிவிக்கவேண்டியது மிக அவசியமென்றும், இது நமது ஸம்பிரதாயத்திற்கு உபகாரகமென்றும் திண்ணமாக வெண்ணுகிறோம்.

சிலருடைய வாதமென்னவென்றால், காலவிசேஷங்களில் ஒவ்வொரு நாட்டிலும் பக்தர்கள் தோன்றியதுண்டு. அவர்கள் தங்களுடைய பக்தியினாலோ அல்லது தங்களுடைய பாண்டித்யத்தைக் காட்டவேண்டியோ தங்களுக்கமைந்த பாஷைகளில் ப்ரபந்தங்களைச் செய்திருப்பதுண்டு. தெலுங்கு கன்னடம் ஹிந்தீ குஜராதீ மராடீ முதலான பலபாஷைகளிலும் பல பக்தர்களால் பலபல ப்ரபந்தங்கள் இயற்றப்பட்டேயுள்ளன. அவைபோலவே ஆழ்வார்களின் ப்ரபந்தங்களுமாம். துளஸீதாஸர், தியாகராயர், கபீர், ராமதாஸர் என்றிப்படி சொல்லப்படுகிற மஹான்களுக்கும் அவர்களது நூல்களுக்கும் எவ்வளவு கௌரவமுள்ளதோ அவ்வளவு கௌரவமேதான் ஆழ்வார்களுக்கும் அவர்களின் ப்ரபந்தங்களுக்கும் ஏற்கும். இவற்றை வேதங்களென்றும் வேதங்களிற்காட்டிலும் சிறந்தவையென்றும் கொள்வது எதற்காக? ............என்றிப்படிப்பட்ட வாதங்கள் இக்காலத்தவர்களால் ஆங்காங்கு அட்டஹாஸமாக அறையப்படுகின்றன.

இந்த விஷயத்தில் நாஸ்திகர்களை எளிதில் த்ருப்திபடுத்த ஒருவராலுமாகாது. வேதங்கள் ப்ரமாணமென்பதை இசைகின்றவர்கள் இசைந்து போருகிறார்களேயல்லது இசையாதவர்கள் ஒருநாளும் இசைவதில்லை. பகவானுடைய உண்மையிலும் அவனது விபவாவதார அர்ச்சாவதாரங்களிலும் நம்பிக்கையில்லாதவர்கள் உலகமெங்கும் நிறைந்திருக்

## 36. நம்மாழ்வார் பெருமை.

ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வாருடைய பெருமைக்கடலில் சில திவலைகளைப் பருகிக் களிக்கிறோம். பொய்கையார் பூதத்தார் பேயார் திருமழிசைப்பிரான் முதலான மற்றையாழ்வார்களும் தோன்றித் திவ்யப்பிரபந்தங்களையருளிச் செய்திருந்தாலும் ஒரு கால விசேஷத்திலே அத்திருமொழிகளெல்லாம் உலகில் பிரசாரமற்று மறைந்தனவாக, ஸ்ரீமந் நாதமுனிகளென்னும் பேராசிரியர் ஆழ்வார்திருநகரிக் கெழுந்தருளித் திருப்புளியாழ்வாரடியிலே நியமத்துடனிருந்து கண்ணிநுண் சிறுத்தாம்பென்கிற நம்மாழ்வார் துதியைப் பன்முறை ஆவ்ருத்திசெய்து யோகதசையிலே நம்மாழ்வாரை ஸாக்ஷாத்கரிக்கப் பெற்று அவருடைய திருவாக்கிலிருந்தே நாலாயிரம் பாசுரங்களையும் அருள் செய்யப் பெற்றாரென்பது ஸம்பிரதாயம். இதுபற்றியே "நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே" என்று நம்மாழ்வார் வாழ்த்தப்பட்டு வருகின்றார். இதுவே காரணமாகத்தான் ப்ரபந்நஜநகூடஸ்தரென்கிற விருதும் நம்மாழ்வார்க்கு நிகழ்ந்து வருகின்றது. இவரையே அவயவியாகவும் மற்றையாழ்வார்களை அவயவபூதர்களாகவும் பூருவர்கள் நிரூபித்துள்ளார்கள். அப்படியே இவருடைய திவ்யப்ரபந்தங்களையே அங்கியாகவும் மற்றையாழ்வார்களினருளிச் செயல்களை அங்கோபாங்கங்களாகவும் அறுதியிட்டுள்ளார்கள்.

இக்காலத்தில் சிலர் கூறுகிற வாதங்களை நாம் இங்கு எடுத்துக் காட்டி ஆஸ்திகர்கள் த்ருப்திபடையுமாறு ஸமாதானம் வெளியிட விரும்புகின்றோம். ஆனால், வழிப்போக்கர்களின் வாதங்களை நாம் பொருள்படுத்தவே தகாதென்றும் அவற்றுக்கு ஸமாதானங் கூறுவதென்கிற வழியிலேயே நுழையலாகாதென்றும் சில பெரியார் கருதுவதுண்டு. இப்படியே நாம் உபேக்ஷித்துப் போவதனால் நம்முடைய ஸம்பிரதாயத்திற்கு நஷ்டமே மலிகின்றது. சிறிது ஆஸ்திக்யமுடையவர்களும் கலங்கித் தெளிவுபெறாமல் விபரீத புத்திகளைக் கொண்டு நசித்துப்போக ஹேதுவாகிறது. ஆகவே இக்காலத்தவர்களின் கூற்றுக்களை அநுவதித்து நாம் ஸமாதானம் தெரிவிக்கவேண்டியது மிக அவசியமென்றும், இது நமது ஸம்பிரதாயத்திற்கு உபகாரகமென்றும் திண்ணமாக வெண்ணுகிறோம்.

சிலருடைய வாதமென்னவென்றால், காலவிசேஷங்களில் ஒவ்வொரு நாட்டிலும் பக்தர்கள் தோன்றியதுண்டு. அவர்கள் தங்களுடைய பக்தியினாலோ அல்லது தங்களுடைய பாண்டித்யத்தைக் காட்டவேண்டியோ தங்களுக்கமைந்த பாஷைகளில் பிரபந்தங்களைச் செய்திருப்பதுண்டு. தெலுங்கு கன்னடம் ஹிந்தீ குஜராதி மராடி முதலான பலபாஷைகளிலும் பல பக்தர்களால் பலபல பிரபந்தங்கள் இயற்றப்பட்டேயுள்ளன. அவைபோலவே ஆழ்வார்களின் பிரபந்தங்களுமாம். துளஸீதாஸர், தியாகராயர், கம்பர், ராமதாஸர் என்றிப்படி சொல்லப்படுகிற மஹான்களுக்கும் அவர்களது நூல்களுக்கும் எவ்வளவு கௌரவமுள்ளதோ அவ்வளவு கௌரவமேதான் ஆழ்வார்களுக்கும் அவர்களின் பிரபந்தங்களுக்கும் ஏற்கும். இவற்றை வேதங்களென்றும் வேதங்களிற்காட்டிலும் சிறந்தவையென்றும் கொள்வது எதற்காக ?.........என்றிப்படிப்பட்ட வாதங்கள் இக்காலத்தவர்களால் ஆங்காங்கு அட்டஹாஸமாக அறையப்படுகின்றன.

எந்த விஷயத்திலும் நாஸ்திகர்களை எளிதில் த்ருப்திபடுத்த ஒருவராலுமாகாது. வேதங்கள் ப்ரமாணமென்பதை, இசைகின்றவர்கள் இசைந்து போருகிறார்களேயல்லது இசையாதவர்கள் ஒருகாலும் இசைவதில்லை. பகவானுடைய உண்மையிலும் அவனது விபவாவதார அர்ச்சாவதாரங்களிலும் நம்பிக்கையில்லாதவர்கள் உலகமெங்கும் நிறைந்திருக்

[illegible] அவர்களைத் தெளிவிக்க ஸர்வசக்தனான எம்பெருமானுமாகவில்லை. இயற்கையில் ஆஸ்திகர்களாயுள்ளவர்களுக்கும் ஒரு கலக்கம் ஏற்பட்டால் அதைப்போக்க முடியுமேயல்லது "ஜ்ஞாநலவதுர்விதக்தம் ப்ரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி" என்னப் பிறந்தவர்களைத் தெளிவிக்க ஆராலுமாகாது. ஸ்ரீ வைஷ்ணவ ஸந்ததியிலேயே ஜனித்து நல்ல தெளிவுடனிருந்து சில விதண்டாவாத ச்ரவணங்களாலே கலங்கினவர்களை மாத்திரம் நாம் தெளிவு பெறுத்தவல்லோம்.

ஸ்ரீ வைஷ்ணவகுலதிலகர்களான ஆழ்வார்கள் திவ்யப்ரபந்தமருளிச் செய்திருப்பது போலவே, சைவர்களிலே நாயன்மார்கள் தேவாரத்திருமுறைகள் பணித்துள்ளார்களென்பது யாவருமறிந்ததே. அந்தப்ப்ரபந்தங்களையாவது அவற்றை இயற்றிய பக்தர்களையாவது சிவபக்தர்களான பிராமணர்கள் யாரேனும் ஆதரிக்கிறார்களாவென்று பார்க்கவேணும். அன்றியும் வேதாந்த நிர்வாஹத்திற்கு அந்தப் பிரபந்தங்களைச் சிறிதேனும் துணைகொள்ளுகிறார்களோவென்றும் நோக்கவேணும். சிவாலயங்களில் அவற்றுக்குப் பாராயண நியதியேதேனும் வைத்திருக்கிறார்களோ வென்றும் ஆராயவேணும். இவையொன்றுமில்லையென்பது எவர்க்கும் ப்ரத்யக்ஷம். யாரோ சில சதுர்த்தர்கள் அத்தேவாரங்களைப் பார்ப்பதும் பாடுவதுமாயிருக்கிறார்களேயல்லது பிராமணர்கள் அவற்றில் சிறிதும் கண் செலுத்துவதில்லை. ஆகவே வேதாந்த நிர்வாஹத்திற்கு அவற்றைத் துணைகொள்ள ப்ரஸக்தியேயில்லை. ஒரு சிவாலயத்திலும் அவற்றுக்குப் பாராயண நியதி யொன்றும் காண்கின்றிலோம். இவ்விஷயங்களை இங்கு நாம் அவற்றின்மீது பழிப்பாக எழுதுவதாய் ஒருவரும் கருதலாகாது. உள்ள நிலைமையை உணர்த்துகின்றோமத்தனை. வியாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகள் இயற்றிய இதிஹாஸ புராணங்களுக்கும் தேவாலயங்களில் ஒரு சிறப்புக் கண்டிலோம். அந்த மஹர்ஷிகளில் ஒருவரையும் ஒரு ஸந்நிதியிலும் விக்ரஹ ப்ரதிஷ்டை செய்து ஆராதநோத்ஸவாதிகள் நடத்துகிற முறைமையும் காண்கின்றிலோம். துளஸீராமாயணம் கம்பராமாயணம் முதலிய மற்றுமுள்ள பிரபந்தங்களுக்கு எவ்வளவு மதிப்பு என்பதை உலகம் நன்கறிந்தேயுள்ளது.

இனி நம் ஆழ்வார்களினருளிச் செயல்களை யெடுத்துக் கொள்வோம். இவற்றில் இன்று நேற்று நாமும் நம்போன்றவர்களும் காட்டுகின்ற ஆதரம் கிடக்கட்டும். ப்ராஹ்மண குலதிலகராய் வடமொழி வேதவேதாந்த வேதாங்கங்களில் ஆழ அவகாஹித்து ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் கையிலங்கு நெல்லிக்கனியாகக் கண்டவர்களான ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் தொடக்கமான ஆசாரியர்கள், ப்ரமாதாக்களில் ஆழ்வார்களுக்கு மேலில்லையென்றும் ப்ரமாணங்களில் அருளிச் செயல்களுக்கு மேலில்லை யென்றும் கொண்டிருந்த கொள்கையில் யாருக்காவது விப்ரதிபத்தியுளதோ? ஸ்ரீமந்நாதமுனிகளின் வாழ்நாள் முழுவதும் திவ்யப்ரபந்தங்களைப் புநருத்தாரம் செய்வதிலேயே பெரும்பாலும் சென்றதென்று காண்கிறோம். ஆளவந்தார்க்கு ஸமமான ஸம்ஸ்க்ருதவித்வான்-சதுச்சாஸ்த்ரப்புலவர் * ந பூதோ ந பவிஷ்யதி என்று உலகமெல்லாம் போற்றுகின்றது. அப்படிப்பட்ட வைபவம் பொலிந்த ஆளவந்தார் த்ரிஜகத்ப்ரஸித்தமான தம்முடைய ஸ்தோத்ரரத்நத்தில் ஆழ்வார்க்கு ஒரு ச்லோகந்தான் அருளிச்செய்துள்ளார்—*மாதா பிதா யுவதய: என்று. இந்த ச்லோகம் அமைந்திருக்கு மமைப்பை என்சொல்லவல்லோம். எம்பெருமானுக்குக் கூட இப்படியொரு ச்லோகம் அமையவில்லையே. ஆழ்வாருடைய திருநாமத்தைச் சொல்லாமலே *ஆத்யஸ்ய ந: குலபதே:* என்கிறாரே, இது எவ்வளவு ஆச்சரியமான பக்தியின் காரியம்! நம்முடைய ஆசார்ய பரம்பரையில் * லக்ஷ்மீநாதஸமாரம்பா மென்கிறபடியே முதல் ஸ்தானத்தில் எம்

பெருமான் விற்பகுஞஸ் ஆத்யஸ்ய ந: குலபதே: என்றது அ[illegible]னையே நோக்கியதாகு மென்று சிலர் கொள்ளவுங் கூடுமென்று சங்கித்து உடனே வகுளாபிராமம் என்றருளிச் செய்கிறார். மகிழ்மாலையணிந்த தெய்வத்தைப்பற்றி இங்கு நான் பேசுகின்றேனே யன்றித் திருத்துழாயணிந்த தெய்வத்தைப் பற்றியன்று—என்றன்றோ காட்டுகின்றார். நம்மாழ்வார் திருவாய்மொழியில் *சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய்தந்தையும் அவரேயினியாவாரே* என்று எம்பெருமான் விஷயத்தில் காட்டின துணிவை யன்றோ ஆளவந்தார் ஆழ்வார் திறத்திலே காட்டியுள்ளார். அந்த ஸ்தோத்ரரத்னத்தில் மேலே ஒவ்வொரு சுலோகமும் ஆழ்வாரருளிச் செயல்களையே யன்றோ மிகமிகத் தழுவி அவதரித்துள்ளன. ஆளவந்தாருடைய காலம் இற்றைக்கு ஆயிரமாண்டுகட்கு முற்பட்டதென்பது நிர்விவாதம். அக்காலத்திலேயேயன்றோ ஆழ்வாருடையவும் அருளிச்செயல்களினுடையவும் மேன்மை நாடும் நகருமுலகுமறியநின்றது. அக்காலத்திலேயே ஆழ்வார்களுக்கு ஸந்நிதிகளில் விக்ரஹ ப்ரதிஷ்டையும் நடைபெற்றிருந்ததாக நன்கு தெரிகின்றது. எங்ஙனேயென்னில், பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "பராங்குசாத்யா: ப்ரதமே ப்ராகாரே நிஷேதிவாம்ஸோ ந மாம் தயேரந்" என்றருளிச் செய்திருப்பது ஸ்பஷ்டம். இதனால் நம்மாழ்வார் முதலான ஆழ்வார்கள் பதின்மரும் அப்போது திருக்கோலங்கொண்டு எழுந்தருளியிருந்தமை கைகொள் கனியாகக் காண்கின்றது. பட்டர் உடையவர்காலத்தில் எழுந்தருளியிருந்தவரும் உடையவர் ஸ்தானத்தில் அபிஷிக்தருமானவர்.

பட்டருடைய திருத்தகப்பனாரும் உடையவருடைய அந்தரங்க சிஷ்யருமான கூரத்தாழ்வான் தமது பஞ்சஸ்தவத்தில் நம்மாழ்வாரைப் போற்றியிருப்பது பரமாத்புதம்.

"த்ரைவித்யவ்ருத்த ஜநமூர்த்த விபூஷணம் யத் ஸம்பச்ச ஸாத்விகஜநஸ்ய யதேவ நித்யம், யத்வா சரண்யமசரண்யஜநஸ்ய புண்யம் தத் ஸம்ச்ரயேம வகுலாபரணாங்க்ரியுக்மம்". என்றும் "பக்திப்ரபாவ பவதத்புத பாவபந்த ஸந்துக்ஷிதப்ரணயஸாரரஸௌகபூர்ண:, வேதார்த்தரத்ந நிதிரச்யுத திவ்யதாம ஜீயாத் பராங்குசபயோதிரஸீமபூமா" என்றுமுள்ள சுலோகங்களிற் காணும் பக்தி விசேஷம் வாய்கொண்டு வருணிக்கத்தக்கதோ? எம்பெருமானைப் பற்றிப் பேசிக்கொண்டு போம்போதும் ஆழ்வாருடைய நினைவேயன்றோ ஆழ்வானுக்கும் பட்டருக்கும் இடையறாது செல்லுகின்றது. அதிமாநுஷஸ்தவத்தில் எம்பெருமானுடைய திருவடிகளை வருணிக்கிற ஆழ்வான் *ஸ்ரீமத் பராங்குச முநீந்த்ர மநோநிவாஸாத் தஜ்ஜாநுராகரஸமஜ்ஜநமஞ்ஜஸாப்ய, அத்யாபி அநாபத தத்புத்தித ராகயோகம் ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜம்* என்கிறார். எம்பெருமானுடைய திருவடிகள் செந்தாமரை போலச் சிவந்திருப்பது ஏனென்றால் நம்மாழ்வாருடைய திருவுள்ளத்திலேயே நெடுங்காலம் உறைந்திருந்து அங்குள்ள அநுராகரஸத்திலே ஊறிக்கிடந்தமையாலே [அநுராகத்தைச் சிவப்பாகவருணிப்பது கவிமரபு] செம்மை மாறாதவை என்கிறார். கச்சி யத்திகிரித் தேவப்பெருமானைத் துதிக்கும்போது அவரை நோக்கிக் கேட்கிறார் கூரத்தாழ்வான்—"யச் ச மூர்த்தா சடாரே: ஹஸ்த்யத்ரேர் வா கிம் அதிஸம்மதம் தேஷு பாதாப்ஜயோஸ் தே" என்று. அதாவது, தேவப்பெருமாளே! உம்முடைய திருவடிகளுக்கு நம்மாழ்வார் திருமுடிமீது வாஸம் செய்வது பாங்கா? அத்திகிரியுச்சியில் வாஸம் செய்வது பாங்கா? என்கிறார். இப்படியே பட்டரும் தம்முடைய ஸ்தவத்தில் "வடதள தேவகீஜடர வேதசிர: கமலாஸ்தந சடகோப வாக்வபுஷி ரங்கக்ருஹே சயிதம்" என்கிறார்.

இங்ஙனே ஒவ்வொரு ஆசார்யரும் ஆழ்வாரைப்பற்றி வாய்வெருவியிருக்கின்றமை பன்னியுரைக்குங்கால் பாரதமாம். வேதாந்ததேசிகரின் ஈடுபாடும் வாசாமகோசரம்.

பெருமான் கிற்பதனால் *ஆஞ்யஸ்ய ந: குலபதே: என்றது அப்பெருமானையே நோக்கியதாகு மென்று சிலர் கொள்ளவுங் கூடுமென்று சங்கித்து உடனே வகுளாபிராமம் என்றருளிச் செய்கிறார். மகிழ்மாலையணிந்த தெய்வத்தைப்பற்றி இங்கு நான் பேசுகின்றேனே யன்றித் திருத்துழாயணிந்த தெய்வத்தைப் பற்றியன்று—என்றன்றோ காட்டுகின்றார். நம்மாழ்வார் திருவாய்மொழியில் *சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய்தந்தையும் அவரேயினியாவாரே* என்று எம்பெருமான் விஷயத்தில் காட்டின துணிவை யன்றோ ஆளவந்தார் ஆழ்வார் திறத்திலே காட்டியுள்ளார். அந்த ஸ்தோத்ரரத்னத்தில் மேலே ஒவ்வொரு சுலோகமும் ஆழ்வாருளிச் செயல்களையே யன்றோ மிகமிகத் தழுவி அவதரித்துள்ளன. ஆளவந்தாருடைய காலம் இற்றைக்கு ஆயிரமாண்டுகட்கு முற்பட்டதென்பது நிர்விவாதம். அக்காலத்திலேயேயன்றோ ஆழ்வாருடையவும் அருளிச்செயல்களினுடையவும் மேன்மை ஊரும் நாடுமுலகுமறியநின்றது. அக்காலத்திலேயே ஆழ்வார்களுக்கு ஸந்நிதிகளில் விக்ரஹ ப்ரதிஷ்டையும் நடைபெற்றிருந்ததாக நன்கு தெரிகின்றது. எங்ஙனேயென்னில், பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸோ நிஷேதிவாம்ஸோ தச மாம் தயேரந்" என்றருளிச் செய்திருப்பது ஸ்பஷ்டம். இதனால் நம்மாழ்வார் முதலான ஆழ்வார்கள் பதின்மரும் அப்போது திருக்கோலங்கொண்டு எழுந்தருளியிருந்தமை கைகொள் கனியாகக் காண்கின்றது. பட்டர் உடையவர்காலத்தில் எழுந்தருளியிருந்தவரும் உடையவர் ஸ்தானத்தில் அபிஷிக்தருமாவர்.

பட்டருடைய திருத்தகப்பனாரும் உடையவருடைய அந்தரங்க சிஷ்யருமான கூரத்தாழ்வான் தமது பஞ்சஸ்தவத்தில் நம்மாழ்வாரைப் போற்றியிருப்பது பரமாத்புதம்.

"த்ரைவித்யவ்ருத்த ஜநமூர்த்த விபூஷணம் யத் ஸம்பச்ச ஸாத்விகஜநஸ்ய யதேவ நித்யம், யத்வா சரண்யமசரண்யஜநஸ்ய புண்யம் தத் ஸம்ச்ரயேம வகுலாபரணாங்க்ரியுக்மம்". என்றும் "பக்திப்ரபாவ பவதத்புத பாவபந்த ஸந்துக்ஷிதப்ரணயஸாரரஸௌகபூர்ண:, வேதார்த்தரத்ந நிதிரச்யுத திவ்யதாம ஜீயாத் பராங்குசபயோதிரஸீமபூமா" என்றுமுள்ள சுலோகங்களிற் காணும் பக்தி விசேஷம் வாய்கொண்டு வருணிக்கத்தக்கதோ? எம்பெருமானைப் பற்றிப் பேசிக்கொண்டு போம்போதும் ஆழ்வாருடைய நினைவேயன்றோ ஆழ்வானுக்கும் பட்டருக்கும் இடையறாது செல்லுகின்றது. அதிமாநுஷஸ்தவத்தில் எம்பெருமானுடைய திருவடிகளை வருணிக்கிற ஆழ்வான் *ஸ்ரீமத் பராங்குச முநீந்த்ர மநோநிவாஸாத் தஜ்ஜாநுராகரஸமஜ்ஜநமஞ்ஜஸாப்ய, அத்யாபி அநாரத தத்துத்தித ராகயோகம் ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜம் * என்கிறார். எம்பெருமானுடைய திருவடிகள் செந்தாமரை போலச் சிவந்திருப்பது ஏனென்றால் நம்மாழ்வாருடைய திருவுள்ளத்திலேயே நெடுங்காலம் உறைந்திருந்து அங்குள்ள அநுராகரஸத்திலே ஊறிக்கிடந்தமையாலே [அநுராகத்தைச் சிவப்பாகவருணிப்பது கவிமரபு] செம்மை மாறாதவை என்கிறார். கச்சி யத்திகிரித் தேவப்பெருமாளைத் துதிக்கும்போது அவரை நோக்கிக் கேட்கிறார் கூரத்தாழ்வான்—"யச் ச மூர்த்தா சடாரே: ஹஸ்த்யத்ரேர் வா கிம் அதிஸுபகதம் தேஷு பாதாப்ஜயோஸ் தே" என்று. அதாவது, தேவப்பெருமாளே! உம்முடைய திருவடிகளுக்கு நம்மாழ்வார் திருமுடிமீது வாஸம் செய்வது பாங்கா? அத்திகிரியுச்சியில் வாஸம் செய்வது பாங்கா? என்கிறார். இப்படியே பட்டரும் தம்முடைய ஸ்தவத்தில் "வடதள தேவகீஜடர வேதசிர: கமலாஸ்தந சடகோப வாக்வபுஷி ரங்கக்ருஹே சயிதம்" என்கிறார்.

இங்ஙனே ஒவ்வொரு ஆசார்யரும் ஆழ்வாரைப்பற்றி வாய்வெருவியிருக்கின்றமை பன்னியுரைக்குங்கால் பாரதமாம். வேதாந்ததேசிகரின் ஈடுபாடும் வாசாமகோசரம்.

அவருடைய திருவாக்குக்களில் "செய்ய தமிழ் மாலைகள் நாம்தெளிய வோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே" என்ற பாசுரமொன்றே போதும். நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளை லோகாசாரியர், திருவாய்மொழிப்பிள்ளை, மணவாளமாமுனிகள் முதலான பேராசிரியர்களின் ஈடுபாடு விவரிக்க வேண்டியதோ? ஸ்ரீ வைஷ்ணவாசார்ய பரம்பரையிலே ஸேனை முதலியார்க்கும் ஸ்ரீமந் நாதமுனிகட்கும் இடையில் நம்மாழ்வாரைச் சேர்த்து அநுஸந்தானம் பண்ணிவருகிற முறைமை இன்று நேற்றுத் தோன்றியதன்று. இதெல்லாம் கூரத்தாழ்வான் முன்னான பூருவாசாரியர்களின் திருவாக்குகளிலேயே ஸந்தேஹவிபர்யயமற விளங்கின்றன. அப்பரமாசார்யர்களின் காலத்திலேயே திவ்யப்ரபந்தங்களானவை தமிழ் வேதமாகவும் அர்ச்சாவதார வேதமாகவும் பாராட்டப்பெற்று திவ்யதேசங்கள் தோறும் கொண்டாடப்பட்டுவந்த விஷயம் கம்பரியற்றிய சடகோபரந்தாதியிலும் சேமம் பெற்றுளது; * அந்தமிலாமறையாயிரத் தாழ்ந்தவரும் பொருளைச் செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத்தேவர்களும் தந்தம் விழாவுமழகுமென்னாம்* என்கிறார் கம்பர். திவ்யப்ரபந்தமவதரித்திராவிடில் ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மணர்களின் கதி என்னாகுமோ! கோவில்களின் ஸ்திதி என்னாகுமே'வென்று வயிறுபிடிக்கிறார் காண்மின்.

ஆக இவ்வளவு நிரூபணங்களினால்—வேதவேதாந்தப் புலவர்களும் சதுச்சாஸ்த்ர பாரங்கதர்களும் ப்ராஹ்மணோத்தமர்களுமான நம் பூருவாசாரியர்கள் தாமே ஒப்புமுயர்வுமறக் கௌரவித்த ஆழ்வார்களைப் பற்றியும் அருளிச்செயல்களைப் பற்றியும் சிலர் ஏது பேசினாலென்ன? அப்பேராசிரியர்களுடைய திருவடிகளையே தஞ்சமாகக்கொண்ட நமக்கு மனம் கலங்க ப்ரஸக்தியில்லை. அந்தப் பூருவாசாரியர்களையும் சேர்த்தே நாம் ஆக்ஷேபிக்கிறோமென்றும், அவர்களும் தவறாகவே கௌரவித்துவிட்டார்களென்று சொல்லுகிறோமென்றும் கூறுவார்களைப்பற்றி நமக்குப் பணியில்லை. நமது முன்னோர்களின் வழியிலே பக்தி விச்வாஸமுள்ள ஆஸ்திகர்களுக்கு இந்த நிரூபணங்கள் அருமருந்தாகக் குறையில்லை. (36)

## 37. அந்யாபதேச ஸ்வாபதேச சப்தவிசாரம்.

ஸ்வாபதேசம் அந்யாபதேசம் என்கிற ஸம்ஜ்ஞை ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரமர்யாதையின்படி பொருந்துமா? இச்சொற்களில் அடங்கியுள்ள அபதேசமென்கிற சொல்லானது அந்ய என்கிற சொல்லோடு இணங்குமே தவிர ஸ்வ என்கிற சொல்லோடு இணங்கமாட்டாதே; ஏனென்றால், வ்யாஜமாகக் கைக்கொள்ளப்பட்ட அமுக்யத்தைக் குறிப்பதான அபதேசபதமானது அந்ய என்கிற சொல்லோடு இணங்குவதுதான் ஸஹஜம். ஸ்வ என்கிற சொல்லோடு அது எப்படி சேரும்? வ்யாஜமாகக் கைக்கொள்ளப்பட்ட அமுக்யம் அந்யமேயல்லது ஸ்வம்மாயிருக்கமுடியாதே—என்றிப்படிச் சிலர் கலங்குகிறார்கள். அவர்களுக்குத் தெளிவு பிறக்குமாறு உபபாதிக்கிறோம்.

வடமொழியில் வ்யபதேசமென்றொரு சொல் ப்ரஸித்தம். அதற்கு என்ன பொருளோ அதுவேதான் அபதேசமென்பதற்கும் பொருள். வி என்கிற உபஸர்க்கம் சேர்ந்தாலும் சேராவிடினும் பொருள் ஒன்றே. வ்யபேக்ஷ', அபேக்ஷா என்கிற சொற்களை இங்கு த்ருஷ்டாந்தமாகக் கொள்வது. அப்பய தீக்ஷிதர் குவலயாநந்தத்தில், "ஸ்வக்ரியாலாதநவ்யக்ரோ நாலமந்யத் வ்யபேக்ஷிதும்" என்றொரு காரிகை காட்டுகிறார். இதில் வ்யபேக்ஷிதும்' என்பதிலுள்ள (வி) என்கிற உபஸர்க்கத்திற்கு தனியே ஒரு பொருள் கிடையாது. ஸாபேக்ஷ:, நிரபேக்ஷ: என்கிற பதங்களின் ஸ்தானத்திலேயே ஸவ்யபேக்ஷ:, நிர்வ்யபேக்ஷ: என்கிற சொற்களையும் பண்டிதர்கள் ப்ரயோகிப்பதுண்டு.

இவ்வண்ணமாகவே வ்யபதேசமென்பதும் அபதேசமென்பதும் பர்யாயமாக வழங்கும். வ்யபதேசமென்பதற்கு குறித்தல் என்று பொருள். அபதேசமென்பதற்கும் அதுவே பொருள். முக்கியமாக உத்தேசிக்கப்பட்ட பொருளைக்காட்டிலும் வேறானவொரு பொருளைக் குறிப்பது அந்யாபதேசமெனப்படுகிறது. உண்மையில் விவக்ஷிதமான பொருளைக் குறிப்பது ஸ்வாபதேச மெனப்படுகிறது. ஸ்வஸ்ய அபதேச:—ஸ்வாபதேச:; அந்யஸ்ய அபதேச:—அந்யாபதேச:. அதவா, ஸ்வம் அபதிச்யதே அஸ்மிந்நிதி—ஸ்வாபதேச:; அந்யத் அபதிச்யதே அஸ்மிந்நிதி அந்யாபதேச: என்கிற வழிகளால் இவ்விரண்டு சொற்களும் உபபத்தி பொருந்தியவை. நன்னூலில் "எப்பொருளெச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர், செப்பினரப்படி செப்புதல்மரபே" என்பது ஒரு சூத்திரம். முன்னோர்கள் எந்தச் சொல்லையிட்டு எந்தப்பொருளைச் சொல்லிவந்தார்களோ, அந்தச் சொல்லையிட்டே அந்தப்பொருளைக் கூறிவருவது ஸம்பிரதாயம் என்கிறதிதில். இதுவே மரபு எனப்படும். அந்யாபதேசம் ஸ்வாபதேசமென்கிற இச்சொற்கள் நேற்று இன்று ஒருவரால் தொடுக்கப்பட்டனவல்ல. ஸ்ரீமந்நாதமுனிகள் காலந்தொடங்கி ஸம்பிரதாய பரம்பரையாய் வழங்கி வரும் சொற்களிவை. இச்சொற்களைப்பற்றி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விப்ரதிபத்தி விளையக் காரணமேயில்லை. நமது ஸம்பிரதாயத்தில் புருஷகாரமென்கிற சொல் வழங்கிவருகின்றது. இது எப்படி ஸித்தமாகிறதென்று தேசிகனே விமர்சித்து என்ன ஸமாதானம் எழுதியிருக்கிறாரென்பதை நோக்கவேணும். இது தர்மபரமான சொல்லா? யதிஉவாதமான சொல்லா? என்கிற விசாரமும் செய்யவேணும். இவ்விசாரங்களை தேசிகரே செய்து ஸம்ப்ரதாய முறைமையில் வழங்கிவரும்இச்சொல்லில் நமக்கென்ன விசிகித்ஸை என்று முடித்து நின்றார். ஸ்வாபதேசாந்யாபதேச சொற்கள் புருஷகார சப்தம்போலே ஸைகூப்பி நிற்கவேண்டியவையல்ல. சாஸ்த்ரீயமான உபபத்தி பொருந்தியவையே. (37)

## 38. தேவப்பெருமாளுடைய திவ்யப்ரபந்த வ்யாமோஹம்

எம்பெருமானார் காஞ்சீபுரியிலே தம் அடிபணிந்த பலபல சிஷ்யவர்க்கங்களுக்கு உபயவேதாந்த க்ரந்த ப்ரவசனம் செய்து போராநிற்கையில், நம்பெருமாள் ஸன்னிதியில் தாம் கைங்கர்யமுமில்லாத குறைதீர இவரை அவ்விடத்திற்கெழுந்தருளச் செய்யவேணுமென்று பாரித்துக்கொண்ட கோயில் முதலிகள் ஓர் ஸதுபாயம் கண்டனர்;— பேரருளாளப் பெருமாள் ஆழ்வாரருளிச்செயல்களிலே போரவும் பித்தராயிருப்பராகையாலே நம் அரையரைக்கொண்டு பாட்டுக் கேட்பித்து உகப்பித்து வரப்ரஸாதமாக ஸ்ரீராமாநுஜரைப் பெற்று இங்கே யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு வரலாமென்று.

அக்காலத்து, இசைபாடி விண்ணப்பஞ்செய்வதில் மிகவல்லவராயிருந்த ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையரைப் பேரருளாளப் பெருமாள் ஸன்னிதிக்கு விடைகொண்டு இக்காரியத்தைச் செவ்வனே தலைக்கட்டிக்கொண்டு வரும்படி பெரியபெருமாள் நியமித்தருள, அந்த நியமனத்தைச் சிரமேற்கொண்ட அரையர் பேரருளாளன் ஸன்னிதிக்கு வந்து சேர்ந்து அங்குள்ள வரந்தரும் பெருமாளரையரையும் திருக்கச்சி நம்பியையும் முன்னிட்டுக்கொண்டு தேவப்பெருமாளைத் திருவடிதொழுது *அத்தியூரான் புள்ளையூர்வான் *என்னெஞ்சமேயான்* நன்னிவினியுனக்குச் சொல்லுவன்* உரந்தருமெல்லணைப் பள்ளிகொண்டான் முதலான பாசுரங்களைத் தேவகானத்திலேயிட்டுத் தேவப்பெருமாள் திருவுள்ளம் நீர்ப்பண்டமாயுருகும்படி செவிக்கினிதாகப் பாடிக்கொண்டிருக்கையில் தேவபிரானும் திருவுள்ளம்பூரித்து 'வாரீர் அரையரே! உம்முடைய பாட்டுக்குப் போரவுகந்தோம்; நீர்

இவ்வண்ணமாகவே வ்யபதேசமென்பதும் அபதேசமென்பதும் பர்யாயமாக வழங்கும். வ்யபதேசமென்பதற்கு குறித்தல் என்று பொருள். அபதேசமென்பதற்கும் அதுவே பொருள். முக்கியமாக உத்தேசிக்கப்பட்ட பொருளைக்காட்டிலும் வேறானவொரு பொருளைக் குறிப்பது அந்யாபதேசமெனப்படுகிறது. உண்மையில் விவக்ஷிதமான பொருளைக் குறிப்பது ஸ்வாபதேச மெனப்படுகிறது. ஸ்வஸ்ய அபதேச:—ஸ்வாபதேச:; அந்யஸ்ய அபதேச:—அந்யாபதேச:. அதவா, ஸ்வம் அபதிச்யதே அஸ்மிந்நிதி—ஸ்வாபதேச:; அந்யத் அபதிச்யதே அஸ்மிந்நிதி அந்யாபதேச: என்கிற வழிகளால் இவ்விரண்டு சொற்களும் உபபத்தி பொருந்தியவை. நன்னூலில் "எப்பொருளெச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர், செப்பினரப்படி செப்புதல்மரபே" என்பது ஒரு சூத்திரம். முன்னோர்கள் எந்தச் சொல்லையிட்டு எந்தப்பொருளைச் சொல்லிவந்தார்களோ, அந்தச் சொல்லையிட்டே அந்தப்பொருளைக் கூறிவருவது ஸம்பிரதாயம் என்கிறதிதில். இதுவே மரபு எனப்படும். அந்யாபதேசம் ஸ்வாபதேசமென்கிற இச்சொற்கள் நேற்று இன்று ஒருவரால் தொடுக்கப்பட்டனவல்ல. ஸ்ரீமந்நாதமுனிகள் காலந்தொடங்கி ஸம்பிரதாய பரம்பரையாய் வழங்கிவரும் சொற்களிவை. இச்சொற்களைப்பற்றி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விப்ரதிபத்தி விளையக் காரணமேயில்லை. நமது ஸம்பிரதாயத்தில் புருஷகாரமென்கிற சொல் வழங்கிவருகின்றது. இது எப்படி நிஷ்பந்நமாகிறதென்று தேசிகனே விமர்சித்து என்ன ஸமாதானம் எழுதியிருக்கிறாரென்பதை நோக்கவேணும். இது தர்மபரமான சொல்லா? யதிபரமான சொல்லா? என்கிற விசாரமும் செய்யவேணும். இவ்விசாரங்களை தேசிகரே செய்து ஸம்ப்ரதாய முறைமையில் வழங்கிவருமிச்சொல்லில் நமக்கென்ன விசிகித்ஸை என்று முடித்து நின்றார். ஸ்வாபதேசாந்யாபதேச சொற்கள் புருஷகார சப்தம்போலே கைகூப்பி நிற்கவேண்டியவையல்ல. சாஸ்த்ரீயமான உபபத்தி பொருந்தியவையே. (37)

## 38. தேவப்பெருமாளுடைய திவ்யப்ரபந்த வ்யாமோஹம்

எம்பெருமானார் காஞ்சிபுரியிலே தம் அடிபணிந்த பலபல சிஷ்யவர்க்கங்களுக்கு உபயவேதாந்த க்ரந்த ப்ரவசனம் செய்து போராநிற்கையில், நம்பெருமாள் ஸன்னிதியில் தர்சநநிர்வாஹகர் ஒருவருமில்லாத குறைதீர இவரை அவ்விடத்திற்கெழுந்தருளச் செய்யவேணுமென்று பாரிப்புக்கொண்ட கோயில் முதலிகள் ஓர் ஸதுபாயம் கண்டனர்;— பேரருளாளப் பெருமாள் ஆழ்வாரருளிச்செயல்களிலே போரவும் பித்தராயிருப்பாரகையாலே நம் அரையரைக்கொண்டு பாட்டுக் கேட்பித்து உகப்பித்து வரப்ரஸாதமாக ஸ்ரீராமாநுஜரைப் பெற்று இங்கே யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு வரலாமென்று.

அக்காலத்து, இசைபாடி விண்ணப்பஞ்செய்வதில் மிகவல்லவராயிருந்த ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையரைப் பேரருளாளப் பெருமாள் ஸன்னிதிக்கு விடைகொண்டு இக்காரியத்தைச் செவ்வனே தலைக்கட்டிக்கொண்டு வரும்படி பெரியபெருமாள் நியமித்தருள, அந்த நியமனத்தை சிரஸாவஹித்த அரையர் பேரருளாளன் ஸன்னிதிக்கு வந்து சேர்ந்து அங்குள்ள வரந்தரும் பெருமாளரையரையும் திருக்கச்சி நம்பியையும் முன்னிட்டுக்கொண்டு தேவப்பெருமாளைத் திருவடி தொழுது *அத்தியூரான் புள்ளையூர்வான் *என்னெஞ்சமேயான்* துன்னிவினியுனக்குச் சொல்லுவன்* உரந்தருமெல்லணைப் பள்ளிகொண்டான் முதலான பாசுரங்களைத் தேவகானத்திலேயிட்டுத் தேவப்பெருமாள் திருவுள்ளம் நீர்ப்பண்டமாயுருகும்படி செவிக்கினிதாகப் பாடிக்கொண்டிருக்கையில் தேவபிரானும் திருவுள்ளம்பூரித்து 'வாரீர் அரையரே! உம்முடைய பாட்டுக்குப் போரவுகந்தோம்; நீர்

எதுகேட்டாலும் தரக்கடவோம்' என்று ஒருகாலைக்கிருகால் உறுதியருளிச் செய்ய, அரையரும் அருகேயிருந்த இளையாழ்வாரைக் காட்டி நம் இராமாநுசனை நம்பெருமாளுக்குத் தந்தருளவேணும்' என்று பிரார்த்திக்க, அதுகேட்டுத் தேவப்பெருமாள் திடுக்கிட்டு ஒன்றுந் தோன்றாமே நிற்க, சொன்னசொல் தவறாதே தந்தருளவேணுமென்று அரையர்வேண்ட "நம்மிராமாநுசனைத் தவிர மற்றதைக் கேளுமென்று நாம் முதலிலேயே சொல்லத்தவறினோம்; நம் இழவுக்கு இனி வருந்திப் பயனில்லை; சொற்படியே இராமாநுசனைப் போகவிட வேண்டியதே" என்று துணிந்து, "அரையரே! நம்மை இங்ஙனே வஞ்சித்து ஸர்வஸ்வமும் கொள்ளைகொள்ள வந்தீர் போலும்; நாமும் உமது வஞ்சனையிலே அகப்பட்டோம்; இனி என் செய்வது? விரும்பினபடியே கொண்டுபோகக் கடவீர்" என்று தேவப்பெருமாள் விடை கொடுத்தருள, அன்றே அப்போதே ஸ்வாமி யெம்பெருமானார் தமது சிஷ்ய வர்க்கங்களுடனே புறப்பட்டு அரையரை முன்னிட்டுக்கொண்டு நம்பெருமாள் ஸந்நிதிக்கு வந்து சேர்ந்து *தெண்ணீர்ப் பொன்னியிலே தீர்த்தமாடி ஆஹ்நிகங்களை முடித்துக்கொண்டு அரவணைமேல் பள்ளிகொண்ட முகில்வண்ணனைக் கண்ணாரக்கண்டு 'ஆஹா! என்னே இப்படியும் அருள்வெள்ளம் பெருகுவதே!' என்று ஈடுபட்டு நிற்கையில், பெரியபெருமாள் தாமும் திரும் பொலிந்த சேவடியை இவரது சென்னிமேல் பொறித்து "உடையவரீர்! *பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகு மென்கிற உபயவிபூதிச் செல்வத்தையும் உமக்கும் உம்முடையார்க்கும் தந்தோம், இனி நம்முடைய கோயிலைத் திருத்திப் பணிகொள்ளக்கடவீர்" என்று நியமித்தருளியாயிற்று. அன்று முதலாக ஸ்வாமிக்கு உடையவர் என்கிற திருநாமம் வழங்கி வந்தது. [உடையவர்—உபய விபூதியையும் தம் கையிலே யுடையவர் என்றபடி.] இங்ஙனே பெரியபெருமாளுடைய பேரருளைப் பெற்றதும் அருகேயிருந்த பெரியநம்பியை நோக்கி *பெரியார்க்கு ஆட்பட்டக்கால் பெறாத பயன் பெறுமாறு வரிவாள்வா யரவணை மேல் நம்பெருமாள் காட்டினரேயென்று பாசுரஞ் சொல்லி தேவரீருடைய திருவடி ஸம்பந்தம் பெற்ற சேர்மையாலே பெரியபெருமாள் அடியேனை இப்படி விஷயீகரித்தருளினார் என்று ஆனந்தக்கண்ணீர் பெருகநின்று விண்ணப்பஞ் செய்ய, பெரியநம்பியும் "*கலியுங் கெடுங்கண்டு கொண்மினென்று அன்று ஆழ்வாரருளிச்செய்த எதிர்காலச்செய்தி இன்று பலிக்கக்கண்டோம்; நல்லது; இனி பெருமாள் நியமனப்படியே இவ்விடத்துப் பணிகளெல்லாம் பாங்காகப் பார்த்தருளீர்" என்றருளிச் செய்ய, அன்று முதலாகவே "தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே" என்கிற வாழ்த்து அன்வர்த்தமாம்படி அனைத்தும் ஆராய்ந்தருளி நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவங்களெல்லாம் குறையற நடைபெறுமாறு சேமஞ் செய்தருளிவந்தார். (38)



## 39. பாகவத சேஷத்வம்.

பகவச் சேஷத்வத்திற் காட்டிலும் பாகவதசேஷத்வம் மிகச் சிறந்ததென்று ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர்களின் கொள்கை. இவ்விஷயம் வேத வேதாங்க வேதாந்தங்களெல்லாவற்றிலும் தெளிவாகக் கண்டதேயாயினும், வேத வேதாந்தங்களில் வல்லவர்களான ஸ்ரீ வைஷ்ணவேதரஸம்பிரதாயஸ்தர்கள் இதை ஒரு பொருளாக மதிக்கக் காண்கிறிலோம். ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர்கள் மாத்திரமே இவ்வர்த்தத்தை விசேஷித்து அபிமானித்து வருகிறார்கள். ஒவ்வொரு மதக்காரர்களும் தங்கள் தங்கள் மதத்திற்கு அஸாதாரணமாகச் சில அர்த்த விசேஷங்களைக் கொள்வதுண்டு; அந்த முறையில் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர்களே [—எம்பெருமானார் தர்சநஸ்தர்களே] பாகவத சேஷத்வ மென்பதையும், இது மிக வுயர்ந்ததென்பதையும் தங்கள் ஸம்பிரதாயத்தில் சிறப்பாகக் கொள்ளுகிறார்கள்.

## 39. பாகவத சேஷத்வமும்.

வேதத்தில் பூர்வபாகத்திலுங்கூட பல விடங்களில் அரிய பெரிய ஸம்ப்ரதாயப் பொருள்கள் காட்டப்படுகின்றன வென்பதை நாம் உபந்யாஸங்கள் தோறும் எடுத்துரைப்ப துண்டு. இவ்விஷயத்திலும் அப்படியெடுத்துரைப்பதை ஈண்டு நிரூபிக்கிறோம். நமது யஜுர் வேதத்தில் ஆறுவது காண்டத்தில் இரண்டாம் ப்ரச்நத்தில் *யாவந்தோ வை ராஜாநமநுசரந்தி தேப்ய ஸ்ஸர்வேப்ய ஆதித்யம் க்ரியதே * என்பது ஒரு வாக்யம். இதன் பொருள் என்னவென்றால், அரசன் அநுசரர்களோடு வந்தானாகில் அவ்வநுசரர்களைவிட்டு அரசனுக்கு மாத்திரம் விருந்து செய்யப்படுவதில்லை; அநுசரர்களான எத்தனை பேர்களுடன் அரசன் வருகிறானோ அத்தனை பேர்களுக்கும் விருந்து செய்யப்படுகிறது—என்பதாம். இவ் விஷயத்தை வேதஞ்சொல்லியே நாம் தெரிந்து கொள்ளவேணுமென்பதில்லை; உலகில் கட் கூடாகக் காணும் விஷயமிது. அரசனளவும் செல்லவேண்டிய அவசியமுமில்லை; மாமனு டைய க்ருஹத்திற்கு வருகிற மருமகப்பிள்ளை சில நேசர்களுடன் வந்தால் அந்த ஜாமாதா வின் முகோல்லாஸத்திற்காக அந்த நேசர்களிடத்திலும் பேரன்புகாட்டி அவர்களுக்கும் உப சாரங்கள் செய்யக் காணுகின்றோம். பர்த்தாவானவன் பார்யையினிடத்தில் வைத்த ப்ரீதி யின் பரீவாஹமாக அந்த பார்யைக்கு விருப்பமானவர்களிடத்திலும் ப்ரீதி செய்வது போன்ற இத்தகைய அநுபவங்கள் உலகில் எங்கும் யாவருங்கண்டவை. இந்த ரீதியில், பகவானிடத் தில் நாம் வைக்கும் அன்பானது அவனளவிலேயே விச்ராந்தமாகாமல் அவனடியாரடியாரடி யாரளவிலும் பெருகிச் செல்லுவது அவர்ஜநீயமே யாகும்.

பகவத்பக்தி நிஷ்டர்களின் வகுப்பு வேறு; பாகவத பக்தி நிஷ்டர்களின் வகுப்புவேறு என்று இரண்டு வகுப்பாகப் பிரித்துப் பெரியார்கள் வழங்குவதுண்டெனினும் உண்மையில் இரண்டு வகுப்பன்று; ஒரே வகுப்புத்தானென்று கொள்ளலாம். பகவானொருவனிடத்தி லேயே விச்ரமித்து நிற்கிற பக்திக்கு பகவத்பக்தி யென்று பெயர்; அவ்வளவோடு நிற்காமல் மேன்மேலும் பெருகிச் செல்லுகின்ற அதற்கே பாகவதபக்தி யென்று பெயர். இப்படி கொள்வதனால் ஒருபெரிய ஆக்ஷேபத்திற்கு இடமற்றதாகிறது. (அதாவது) பகவத்பக்தியை விட 'பாகவதபக்தியே ச்ரேஷ்டமென்று சொல்லி அதிலேயே ஊன்றியிருக்கக் காண்கிறோமே, இது எப்படி கூடும்?' என்று சிலர் ஆக்ஷேபிப்பதுண்டு. இது விஷய மண்மையறியாதார் செய் யும் ஆக்ஷேபமாத்தனை. 'பாகவத பக்தியே ச்ரேஷ்டம்' என்பவர்களின் கருத்தை உள்ளபடி யுணரவேணும். பகவத்பக்தியானது தத்பக்தபக்தபக்த பர்யந்தமாகப் பெருகிச் சென்று வல்லது ப்ரதிஷ்டிதமாகாது என்பதே கருத்தாம்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் மூன்றும்பத்தில் (7.) * பயிலுஞ்சுடரொளி * யென் னும் பதிகத்தில் * அடியாரடியார் தம்மடியாரடியார் தமக்கடியாரடியார்தம் அடியாரடியோங் களே * என்பது முதலான பாசுரங்களினால் பாகவத சேஷத்வ காஷ்டையின் சீர்மையைச் சொல்லிவிட்டு உடனே * முடியானே மூவுலகுந் தொழுதேத்தும் சீரடியானே * என்கிற அடுத்தபதிகத்தில் பகவான் திறத்தில் தமக்குண்டான மையலின் திறத்தைப் பேசுகிறார்; இப்படியே எட்டாம்பத்தின் முடிவிலே * நெடுமாற்கடிமை செய்வேன்போல் * என்னும் பதிகத்தில் பாகவத கைங்கர்யமே சீரியதென்று சொல்லி முடித்து உடனே ஒன்பதாம்பத்தின் தொடக்கத்தில் * எண்டிசையுங் கீழும்மேலும் முற்றவுமுண்டபிரான் தொண்டரோமாயுய்ய வல்லாலில்லை கண்டீர் துணையே * என்று பகவத் கைங்கர்ய ப்ரசஸ்தியை அபரிமிதமாகப் பேசுகிறார்; இவை பரஸ்பரவிருத்தமல்லவா வென்று சிலர் கலங்குவதும் வீணகலக்கமென்று தெளிவது. .... .... .... ....

## 40 திருமந்த்ரமும் பாகவதசேஷத்வமும்

பாகவத சேஷத்வமானது ஸ்ரீமதஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்திலே ஸித்தித்த மஹார்த்த மென்று எம்மவர்கள் விசேஷித்து ஆதரிக்கிறார்கள். இதை முதன்முதலாக வெளியிட்டருளி னவர் திருமங்கையாழ்வார். இவ்வாழ்வார் திருக்கண்ணபுரத்தெம்பெருமான் பக்கலிலே திரு மந்திரப்பொருள் உபதேசம் பெற்றதாக ஸம்பிரதாயத்தலைவர்கள் கூறுவர்கள். அப்பெரு மான் விஷயமாக இவ்வாழ்வார் பத்துப் பதிகங்கள் [நூறுபாசுரம்] அருளிச் செய்துள்ளார். பெரிய திருமொழியில் எட்டாம்பத்து முழுவதும் திருக்கண்ணபுரத்தெம்பெருமான் விஷய மன்றோ. அதில் பத்தாவது பதிகத்தில் (3) * மற்றுமோர் தெய்வமுளதென்றிருப்பாரோடுற்றி லேன், உற்றது முன்னடியார்க்கடிமை, மற்றெல்லாம் பேசிலும் நின்திருவெட்டெழுத்துங் கற்றுநான், கண்ணபுரத்துறையம்மானே! * என்கிற பாசுரத்தினால் பாகவத சேஷத்வமே திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தில் தேறின பரமார்த்தம் என்று வெளியிடுகிறார். திருமந்தி ரத்தில் முதலிலேயுள்ள ப்ரணவத்தின் முதலெழுத்தாகிய அகாரத்தினாலும் மேலேயுள்ள நாரா யணபதத்தினாலும் எம்பெருமான் சொல்லப்படுகிறானேயல்லது பாகவதர்களுக்கு வாசகமான சொல் அதில் ஒன்றும் காணப்படவில்லையே; பகவச் சேஷத்வம் தெரிவிக்கப்படுகிறதேயன்றி பாகவதசேஷத்வம் அதில் தெரிவிக்கப்படவில்லையே. அப்படியிருக்க "நின் திருவெட்டெழுத் துங்கற்று நான் உற்றது முன்னடியார்க்கடிமை" என்று திருமங்கையாழ்வார் எதுகொண்டு அருளிச்செய்கிறாரென்று பலரும் சங்கிக்கக்கூடியதுண்டு. இதைப்பற்றிச் சிறிது சொல்லு கிறோமிங்கு.

பிள்ளைலோகாசார்யர் முமுக்ஷுப்படியில் திருமந்த்ரப்ரகரணத்தில் நம: பதார்த்தத்தை விவரித்தருளுமிடத்து "உற்றதுமுன்னடியார்க்கடிமை யென்கையாலே இதிலே பாகவத சேஷத்வமநுஸந்தேயம்" என்றருளிச்செய்து உடனே "இது அகாரத்திலே யென்றும் சொல் லுவர்கள், உகாரத்திலே யென்றுஞ் சொல்லுவர்கள்" என்றருளிச்செய்தார். சாப்தமாகச் சொல்லப்படாமல் ஆர்த்தமாகவநுஸந்திக்கப்படுகிற இந்த பாகவத சேஷத்வமானது நமஸ் ஸில் அல்லாமல் அகாரத்திலே சிலராலும் உகாரத்திலே சிலராலும் அநுஸந்திக்கப்படுவதுண்டு என்பது கருத்து. அதாவது, ப்ரணவத்திலுள்ள அகாரத்தின் பொருளை நாம் தெரிந்துகொள் ளும்போது அதிலே எறிக்கழிந்த [லுப்த] சதுர்த்தியாலே ஆத்மாவினுடைய பகவச்சேஷத்வம் சொல்லப்படுவதாகத் தெரிந்து கொள்ளுகிறோம்; அப்போதே பகவச் சேஷத்வ காஷ்டை யான இந்த பாகவத சேஷத்வாநுஸந்தானமும் ப்ராப்தமாகையாலே அகாரத்திலேயே பாக வத சேஷத்வத்தைச் சில மஹான்கள் அநுஸந்திப்பர்கள். அகாரத்திற்கடுத்த உகாரமானது அநந்யார்ஹ சேஷத்வத்தை ப்ரதிபாதிக்கிறதாக முடிக்கப்பட்டிருக்கிறது. பாகவதசேஷத்வத் தளவிலே நின்றாலல்லது அநந்யார்ஹசேஷத்வம் ஸித்திக்கமாட்டாதாகையாலே அந்த அநந் யார்ஹத்வத்தைக் காட்டுகின்ற உகாரத்திலே பாகவதசேஷத்வத்தைச் சில மஹான்கள் அநு ஸந்திப்பர்கள் — என்றதாயிற்று. இனி பிள்ளைலோகாசார்யருடைய திருவுள்ளம் என்ன வென்பதை நாம் தெரிந்துகொள்ளவேணும்; அதை மணவாள மாமுனிகள் கையிலங்கு நெல் லிக்கனியாக எடுத்துக் காட்டுகிறார் — "ஆர்த்தமாகையாலே அவ்வவ ஸ்தலங்களிலும் சொல்ல லாயிருந்ததேயாகிலும் கந்தல்கழிந்தவிடத்திலே சொல்லுகையே உசிதமென்று கருத்து" என்கிற வியாக்கியான ஸ்ரீஸூக்திகளால். இதன் கருத்து யாதெனில்; சப்தஸித்தமன்றிக்கே அர்த்தஸித்தமாகும் விஷயத்தை எந்த இடத்திலே அநுஸந்தித்தாலும் குறையில்லை; ஆனால் நமஸ்ஸானது அஹங்காரமமகாரமாகிற கந்தலை அறவே கழிக்கிறபடியாலும், அஹங்கார மம காரங்களின் ஸவாஸந நிவ்ருத்தியே பாகவத சேஷத்வத்திற்கு பீஜமாகையாலும் அந்த பாக

வத சேஷத்வத்தை நாமஸமிலே அநுஸந்திப்பதுதான் உரியதென்று நம்பூருவாசாரியர்கள் கொண்டிருப்பர்கள் என்றதாயிற்று.

இத்தால்—பாகவத சேஷத்வம் கணமவெண [ஸ்வபஷ்டமாக] ரஹஸ்யத்தில் ப்ரதிபாதிக்கப்படவில்லையேயென்று குறைகூறலாகாது; பகவச்சேஷத்வத்தின் எல்லைநிலமே [அதாவது பாகவத்பர்யந்தமான பகவச்சேஷத்வமே] பாகவதசேஷத்வமாம்—என்று தெளியக்கடவது. .... .... .... .... (40)

## 41 கடகமன்று—கர்க்கடகம்.

மாதங்களை ஸௌரமாகப்ரகாரமாக வழங்கிவருமவர்கள் ஆடிமாதத்தைக் கடக மாஸமென்று கூறிவருகிறார்கள். பண்டிதர்களுங்கூட ஸங்கல்பம் செய்துகொள்வது முதலான ஸமயங்களில் 'கடகமாஸே' என்றே சொல்லிவருவது பெரும்பாலும் எங்கும் காண்பதாகும். லக்னங்களைச் சொல்லிவரும்போதும் கடகலக்னம் என்றே சொல்லிவருகின்றார்கள். இது சுத்தமான ப்ரயோகமா? என்பதை வித்வான்கள் விமர்சிப்பதுண்டு. அசுத்தப்ரயோகமென்றே நிஷ்கர்ஷித்துள்ளார்கள். 'நண்டு' என்கிற ஜந்துவுக்கு வாசகமான பதமே இங்குக் கொள்ளப்படவேண்டும். குளீரம், கர்க்கடம் என்கிற பதங்கள் நண்டுக்கு வாசகங்களாக ப்ரஸித்தங்கள். கடகம் என்கிறபதம் தோள்வளை, தாழ்வரை என்கிற பொருள்களில் வருமேயல்லது நண்டு என்கிற பொருளில் வருமதன்று. ஆகவே கர்க்கடலக்நம், கர்க்கடமாஸம் என்று சொல்லத் தகுமேயல்லது, கடகலக்நம், கடகமாஸம் என்று சொல்லத்தகுதியில்லை.

வித்வான்களுக்கு இவ்விஷயத்தில் ஸந்தேஹமாவது ப்ரமமாவது சிறிதும் கிடையாது. குளீரபர்யாயமாகக் கடகம் என்கிற சொல் ஒரு நிகண்டுவிலும் கிடைக்காதாகையினால் கடகம் என்று வ்யவஹரிக்க ஒருவழியும் சிறிதும் உபபத்தி இல்லையென்றே சொல்லவேண்டியிருக்கின்றது. பெரும்பாலும் ப்ராஜ்ஞர்களும் கடகலக்நம் கடகமாஸம் என்றே விசிகித்ஸையில்லாமல் வ்யவஹரித்துவரக் காண்கின்றோம். அதுகொண்டே நாம் அதை ஸாதுவென்று கொள்வதற்கில்லை. ஆடி மாதத்தில் அவதரித்த ஆண்டாள் ஆளவந்தார் அண்ணா முதலானோரைப் பற்றி அவதரித்துள்ள ச்லோகங்களுள் ஒன்றிலும் கடகமென்கிற ப்ரயோகம் காணக் கிடைக்கவில்லாமல் கர்க்கடே என்றுதான் காண்கின்றது.

ஆனால் சிலர் சொல்லக்கூடும்; சோதிடர்கள் ஆதரிக்கும் நூல்களில் கடகம் என்கிற ப்ரயோகம் காண்கையாலே அது அசுஷ்டமென்னத்தகாது—என்று. சோதிட நூல்களில் இங்ஙனே ப்ரயோகமிருக்கலாம். அதைக்கொண்டு ப்ரயோகசுத்தியை ஸ்தாபிக்கப் பார்ப்பது வேண்டா. சோதிட நூல்கள் அர்த்தத்தில் நோக்காகவே அவதரித்துள்ளனவேயன்றி சப்தத்தில் சிறிதும் நோக்கம் கொண்டில. * மீநமேஷசதுஷ்பாதேஷு வ்ருஷகும்பே சதுஸ்த்ரிபௌ; வ்ருச்சிகே மகரே ஸிம்ஹமிதுநே பஞ்சபாதயோ: * என்றிப்படிப்பட்ட ச்லோகங்கள் பல நூற்றுக்கணக்கில் உலகமெங்கும் பரவியிருக்கின்றன. இவற்றில் பாட பேதங்களும் பல வுண்டு. இத்தகைய ச்லோகங்களை வித்வான்கள் கேட்டுச் சிரிப்பது வழக்கம். இப்படிப்பட்ட ச்லோகங்களிலுங்கூட "கந்யபஞ்ச துலாபஞ்ச பஞ்சார்த்தே தநு கர்க்கடே" என்று கர்க்கட சப்த ப்ரயோகம் காணுகின்றோம். தர்ம சாஸ்த்ர ச்லோகங்களையும் ஜ்யோதிச் சாஸ்த்ர ச்லோகங்களையும் கொண்டு சப்தஸ்வரூப நிஷ்கர்ஷம் பண்ணப்புகவேண்டா.

நெடுநாளாகப் பல பெரியார்கள் சொல்லிவருவதை ஸஹஸா தவறென்று சொல்லத் துணிவது பிசகு என்பதையும் நாம் அறிவோம். ஏற்கெனவே பெரியோர்கள் நிஷ்கர்ஷித்

வத சேஷத்வத்தை நமஸ்ஸிலே அநுஸந்திப்பதுதான் உரியதென்று நம்பூருவாசாரியர்கள் கொண்டிருப்பர்கள் என்றதாயிற்று.

இத்தால்—பாகவத சேஷத்வம் கூணமவெண [ஸுஸ்பஷ்டமாக] ரஹஸ்யத்தில் ப்ரதிபாதிக்கப்படவில்லையேயென்று குறைகூறலாகாது; பகவச்சேஷத்வத்தின் எல்லைநிலமே [அதாவது பரமகாஷ்டாபந்நமான பகவச்சேஷத்வமே] பாகவதசேஷத்வமாம்—என்று தெளியக்கடவது. .... .... .... .... (40)

## 41 கடகமன்று—கர்க்கடகம்.

மாதங்களை ஸௌரமாநப்ரகாரமாக வழங்கிவருமவர்கள் ஆடிமாதத்தைக் கடக மாஸமென்று கூறிவருகிறார்கள். பண்டிதர்களுங்கூட ஸங்கல்பம் செய்துகொள்வது முதலான ஸமயங்களில் 'கடகமாஸே' என்றே சொல்லிவருவது பெரும்பாலும் எங்கும் காண்பதாகும். லக்னங்களைச் சொல்லிவரும்போதும் கடகலக்னம் என்றே சொல்லிவருகின்றார்கள். இது சுத்தமான ப்ரயோகமா? என்பதை வித்வான்கள் விமர்சிப்பதுண்டு. அசுத்தப்ரயோகமென்றே நிஷ்கர்ஷித்துள்ளார்கள். 'நண்டு' என்கிற ஜந்துவுக்கு வாசகமான பதமே இங்குக் கொள்ளப்படவேண்டும். குளீரம், கர்க்கடம் என்கிற பதங்கள் நண்டுக்கு வாசகங்களாக ப்ரஸித்தங்கள். கடகம் என்கிறபதம் தோள்வளை, தாழ்வரை என்கிற பொருள்களில் வருமேயல்லது நண்டு என்கிற பொருளில் வருமதன்று. ஆகவே கர்க்கடலக்நம், கர்க்கடமாஸம் என்று சொல்லத் தகுமே யல்லது, கடகலக்நம், கடகமாஸம் என்று சொல்லத்தகுதியில்லை.

வித்வான்களுக்கு இவ்விஷயத்தில் ஸந்தேஹமாவது ப்ரமமாவது சிறிதும் கிடையாது. குளீரபர்யாயமாகக் கடகம் என்கிற சொல் ஒரு நிகண்டுவிலும் கிடைக்காதாகையினால் கடகம் என்று வ்யவஹரித்து வருவதில் சிறிதும் உபபத்தி இல்லையென்றே சொல்லவேண்டியிருக்கின்றது. பெரும்பாலும் ப்ராஜ்ஞர்களும் கடகலக்நம் கடகமாஸம் என்றே விசிகித்ஸையில்லாமல் வ்யவஹரித்துவரக் காண்கின்றோம். அதுகொண்டே நாம் அதை ஸுஷ்டுவென்று கொள்வதற்கில்லை. ஆடி மாதத்தில் அவதரித்த ஆண்டாள் ஆளவந்தார் அண்ணா முதலானோரைப் பற்றி அவதரித்துள்ள சுலோகங்களுள் ஒன்றிலும் கடகமென்கிற ப்ரயோகம் காணக் கிடைக்கவில்லாமல் கர்க்கடே என்றுதான் காண்கின்றது.

ஆனால் சிலர் சொல்லக் கூடும்; சோதிடர்கள் ஆதரிக்கும் நூல்களில் கடகம் என்கிற ப்ரயோகம் காண்கையாலே இது துஷ்டமென்னத்தகாது—என்று. சோதிட நூல்களில் இங்ஙனே ப்ரயோகமிருக்கலாம். அதைக்கொண்டு ப்ரயோகசுத்தியை ஸ்தாபிக்கப் பார்ப்பது வேண்டா. சோதிட நூல்கள் அர்த்தத்தில் நோக்காகவே அவதரித்துள்ளனவேயன்றி சப்தத்தில் சிறிதும் நோக்கம் கொண்டில. * மீநமேஷசதுஷ்பாதௌ வ்ருஷகும்பே சதுஸ்த்ரிபௌ; வ்ருச்சிகே மகரே ஸிம்ஹமிதுநே பஞ்சபாதயோ: * என்றிப்படிப்பட்ட ச்லோகங்கள் பல நூற்றுக்கணக்கில் உலகமெங்கும் பரவியிருக்கின்றன. இவற்றில் பாட பேதங்களும் பலவுண்டு. இத்தகைய சுலோகங்களை வித்வான்கள் கேட்டுச் சிரிப்பது வழக்கம். இப்படிப்பட்ட ச்லோகங்களிலுங்கூட "கந்யபஞ்ச துலாபஞ்ச பஞ்சார்த்தே தநு கர்க்கடே" என்று கர்க்கட சப்த ப்ரயோகம் காணுகின்றோம். தர்ம சாஸ்த்ர சுலோகங்களையும் ஜ்யோதிச் சாஸ்த்ர ச்லோகங்களையும் கொண்டு சப்தஸ்வரூப நிஷ்கர்ஷம் பண்ணப்புகவேண்டா.

நெடுநாளாகப் பல பெரியார்கள் சொல்லிவருவதை ஸஹஸா தவறென்று சொல்லத் துணிவது பிசகு என்பதையும் நாம் அறிவோம். ஏற்கெனவே பெரியோர்கள் நிஷ்கர்ஷித்

துள்ள விஷயத்தை இங்கு நாம் அநுவதிக்கின்றோமே யன்றி இன்று நாம் புதிதாக இந்தத் திருத்தம் செய்கின்றிலோம். பல வருஷங்களில் உபாகர்மம் ஆடிமாதத்தில் வருவதுண்டே. அப்போது உபாத்யாயர்கள் பெரிய திரளில் **கடகமாஸே** என்று சொல்வதும், அதை வித்வச் சிகாமணிகள் கண்டித்து, கர்க்கடகமாஸே என்று திருத்திக்கொடுப்பதுமுண்டு. .... (41)

## 42. கீதையின் தொடக்கத்தில் ஓர் ஆராய்ச்சி.

ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா தன்னுடைய பரமபக்தனை அர்ஜுநனுக்குத் தேர்ப்பாகனையிருந்துகொண்டு குருக்ஷேத்ரமென்னுமிடத்தில் வந்து போர்புரிய அணிவகுத்து நின்றனன். அப்பொழுது அர்ஜுனன் கண்ணபிரானை நோக்கி "பெருமானே! இந்தப்போரில் யான் யாருடன் போர் புரிவது தகுதியானது? துர்ப்புத்தி வாய்ந்த துரியோதனனுக்குத் துணை புரிவதற்காக யார் யார் வந்திருக்கின்றார்களென்பதை நான் கண்டு தெரிந்து கொள்ளுமாறு தேரை இரண்டு சேனைகளின் இடையில் நீ நிறுத்தவேணும்" என்று கூற, அப்படியே கண்ணபிரான் இரண்டு படைகளினிடையே நிறுத்தி 'அர்ஜுனா! இவ்விருபடைகளினு மிருக்கின்ற போர்வீரர்களைப் பாராய்' என்றனன்.

அப்போது அர்ஜுனன் போர்க்களத்தில் வந்து நின்றிருக்குமவர்கள் தந்தைகளாயும் பாட்டனாராயும் மாமன்மார்களாயும் ப்ராதாக்களாயும் புத்திரர்களாயும் பேரன்மார்களாயும் தோழன்மார்களாயும் இருப்பது கண்டு அவர்களிடத்து இரக்கங்கொண்ட மனத்தனாய் ஸ்ரீக்ருஷ்ணனை நோக்கி, 'கண்ணா! போர்புரிய ஆயத்தர்களாயிரா நின்ற இந்த உற்றாருறவினரைக் காணவே எனது காண்டீவ தனுசு கையில் நின்றும் சோருகின்றது; என்னுடல் எரிகின்றது; மயிர்கூச்செறிகின்றது; தேகம் நடுங்குகின்றது; நான் நிற்கமாட்டேன்; என்மனம் குழம்புகின்றது; அபசகுனங்கள் காண்கின்றன; அமர்க்களத்தில் இவ்வுறவினர்களைக் கொன்று நான் என்ன நன்மையடையப்போகிறேன்; எனக்கு யுத்தமும் வேண்டா; இராச்சியமும் வேண்டா; இன்பமும் வேண்டா. உற்றாருறவினர்களோடு கூடிக்களித்து வாழ்வதற்காகவன்றோ பொருட்செல்வம் விரும்பப்படுகின்றது; அன்னவர்களனைவரும் உயிரையும் உடலையும் செல்வத்தையும் பொருள்படுத்தாது போர்புரிய வந்து நிற்கின்றனரே; அவர்களை வென்று கொன்றபின்பு இந்த ராஜ்யத்தினாலுண்டாகும் இன்பம் யாதோ? பிறகு நான் பிழைத்திருந்துதான் என்ன பயன்? மூவுலகவின்பமும் கிடைப்பதாயிருந்தாலும் நான் இவர்களைக் கொல்லமாட்டேன்; இந்த அற்ப பூமிக்காக இவர்களைக்கொல்ல நினைப்பதும் ஏலாதது. 'ஆததாயிகள் கொலைசெய்யத் தகுந்தவர்களே' என்று சாஸ்த்ரங்கள் கூறியிருந்தாலும், இந்தத் துரியோதனாதியர் ஆததாயிகளேயானாலும் இவர்களைக்கொல்ல நான் விரும்பவில்லை. [ஆததாயிகள் என்றால் என்ன? நெருப்பிட்டுக் கொல்பவர்கள், விஷமிட்டுக் கொல்பவர்கள், பிறருடைய தனங்களையும் பூமியையும் மாதரையும் கொள்ளை கொள்பவர்கள் '**ஆததாயிகள்**' எனப்படுவர்கள்] இந்த பந்துக்களைக் கொன்று நான் எப்படி ஸுகமடைவேன்? குலம் நாசமடையுமாயின் குலதருமங்கள் நாசமடையும்; தர்மங்கள் நஷ்டமாயின் அதர்மங்கள் குலத்தைக் கெடுக்கும்; அதர்மத்தினால் குல ஸ்த்ரீகள் கெடுவார்கள்; அதனால் வர்ண ஸாங்கர்யமும் விளையும்; [வர்ணஸாங்கர்யமாவது ஜாதிக்கலப்பு.] அப்படி ஸங்கர ஜாதியிற் பிறந்தவர்கள் பித்ருக்களுக்குப் பிண்டோதகங்கள் கொடுக்க அதிகாரமற்றவர்களாதலால் அவர்களுடைய பித்ருக்கள் பிண்டோதக க்ரியைகள் பெறாதவர்களாய் நரகத்தில் விழுவார்கள். துரியோதனாதிகள் ராஜ்யலோபத்தினால் புத்தி கெட்டு, குலக்ஷயத்தினாலுண்டாகும் தோஷங்களை உணராமல் போர்புரிய முற்பட்டிருந்த போதிலும் மேற்கூறிய தோஷங்களை உணர்ந்திருக்கும் என்னைப் போன்றவர்கள் இத்தகைய பாபக்ருத்யங்களில் எப்படி ஊக்கங்கொள்ள முடியும்? க்ருஷ்ணா! ராஜ்ய ஸுகங்களுக்காக

உறவினரைக் கொல்லிப் பெறும் ராஜ்யம் தகுமல்லவோ? ஆகையால் சாஸ்த்ரங்களையும் அஸ்த்ரங்களையும் நான் ப்ரயோகிக்கப் போகிறதில்லை; ப்ரயோகியாமல் வாளா நிற்கும் என்னைத் துரியோதனாதிகள் கொன்றுபோடினும் அதனால் எனக்கு வருத்தமில்லை; அது எனக்கு க்ஷேமமேயாகும் என்று சொல்லி வில்லைக் கீழே போட்டு வருத்தமும் கலக்கமும் மிகப்பெற்றுத் தேரிடையே உட்கார்ந்துவிட்டான்—என்பது கீதையில் அர்ஜுநவிஷாதயோகமென்கிற முதலத்யாயத்தின் கருத்து.

இப்படி அஸ்தானத்திலே கலங்கின அர்ஜுனனுடைய கலக்கத்தைப் போக்கி அவனை யுத்தத்திலே மூட்டுவதற்காகக் கண்ணபிரான் இரண்டாமத்யாயத்திலிருந்து பல பல உபதேசங்களைச் செய்தருள அவனும் தெளிவுபெற்று "ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசனம் தவ" என்று சொல்லிப் போர் புரிய இசைந்தானென்பது கீதையின் முழுப்பொருள். இவ் விஷயத்தில் புத்திமான்கள் முக்கியமாக ஆலோசிக்கத்தக்கவை இரண்டு விஷயங்களுண்டு. யுத்தத்திற்குக் குதூஹலியாய் வந்து சேர்ந்த அர்ஜுநன் யுத்தாடம்பரம் செய்ய வேண்டியிருக்க அது செய்யாமல் தேர்ப்பாகனாயிராநின்ற தேவனை நோக்கி உபயஸைன்யங்களிலுமிருக்கிற பந்துக்களை இன்னாரின்னாரென்று பார்ப்பதற்காக இந்தத் தேரைச் சிறிது முன்னே கொண்டுபோய் உபயஸேனைகளின் முன்னே நிறுத்து என்றானே; இப்போது அர்ஜுனன் இப்படிச்சொல்லவேண்டிய அவச்யமேயில்லை. ஏற்கெனவே இவன் தெரிந்துகொள்ளாத அம்சம் என்ன இருக்கிறது? யுத்தத்தில் எதிரிகளாக வரப்போகிறவர்கள் அல்லது வந்திருக்கிறவர்கள் இன்னாரின்னாரென்பதை அர்ஜுனன் இதற்குமுன் தெரிந்துகொள்ளாமல் இனி மேலா தெரிந்துகொள்ளப்போகிறான்; இல்லையே. அவர்களையெல்லாம் வதைத்தொழிக்க வேணுமென்கிற ஊக்கங்கொண்டே போர்புரிய ஆயத்தனாய் வந்துநின்றவன் இப்போது இன்னாரின்னார் போர்புரிய வந்திருக்கிறார்களென்பதைக் கண்டறிந்து கொள்ளவேணுமென்றது சிறிதும் பொருத்தமாக இல்லையே. இது எப்படி பொருந்தும்? இது முதல் முதலாக ஆலோசிக்க வேண்டிய விஷயம். இனி மற்றொரு விஷயமாவது, யுத்தம் பண்ண மாட்டேனென்ற அர்ஜுநனை யுத்தஞ் செய்ய இசைவிக்க வேண்டியதுதானே கண்ணபிரானுக்குக் கர்த்தவ்யம்; அதற்கு இவ்வளவு விஸ்தாரமான கீதாசாஸ்த்ரம் வேணுமோ? 'அப்பா! நீ க்ஷத்ரியனாகையாலே யுத்தம்செய்யக் கடமைப்பட்டவனாகிறாய்' என்கிற விவ்வளவை உபபத்திகளுடன் சொன்னால்போதும்; இதற்கு ஒரு அத்யாயமே அதிகம். அத்தனையத்யாயங்கள் வளர்த்திருப்பது எதற்காக? என்பது. ஆக இவ்விரண்டு விஷயங்களையும் ஆலோசித்துப் பொருத்தமான ஸமாதானம் யோசிக்கவேணுமென்று ஸச்சிஷ்யன் கேட்டு நின்றான். (42)

## 43. கீதாசாஸ்த்ரம் தொடங்கினதைப்பற்றின தெளிவு.

மேலே ப்ரஸ்தாவித்த இரண்டு விஷயங்களுக்கும் ஸமாதானம் தெரிவிக்கிறார் ஸதாசார்யர். (முதல் விஷயம்.) பகவான் ஸ்ரீராமாவதாரஞ்செய்து * தசவர்ஷஸஹஸ்ராணி தசவர்ஷசதானி ச, ராமோ ராஜ்யமுபாஸித்வா * என்றபடி பதினோராயிரமாண்டு இங்கிலவுலகில் வாழ்ந்திருந்தும் ஸம்ஸாரி சேதநோஜ்ஜீவநார்த்தமாக ஒரு சாஸ்த்ரமும் இட்டருளவில்லை; தன்னடிச் சோதிக்கு எழுந்தருளின பிறகு திருவுள்ளத்தில் இக்குறை மிகவும் தோன்றிற்று. அப்போதே திடமாக ஸங்கல்பம் செய்துகொண்டான்—அடுத்தபடி மண்ணுலகில் அவதாரம் செய்யும்போது மிகச்சிறந்ததொரு சாஸ்த்ரத்தை அவதரிப்பித்தே தீருவேனென்று. சாஸ்த்ரத்தை அவதரிப்பித்தலென்றால் ஓலைப்புறத்திலே எழுதிவைப்பதன்று. அப்படியெழுதி வைத்தால் மஹர்ஷிப்ரணீதங்களான இதிஹாஸபுராணாதிக்ரந்தங்கள் போலவே இதுவுமொன்று என்று நினைக்கும்படியாகுமத்தனை. ஒரு உத்தமாதிகாரிக்குத் தன் திருவாக்காலே நேராக உபதேசித்து அம்முகத்தாலே உலகில் பரவ வைக்க வேணுமென்று திருவுள்ளம் பற்றியிருந்தான்.

ஸ்ரீவசநபூஷணத்தில் "ஜிதேந்த்ரியரில் தலைவனாய் ஆஸ்திகாக்ரேஸரனாய் *கேசவஸ்யாத்மாவென்று க்ருஷ்ணனுக்கு தாரகனாயிருக்கிற அர்ஜுநனுக்கு" என்று பிள்ளை லோகாசார்யர் புகழும்படியான பெருமைவாய்ந்த அர்ஜுனனையே உபதேசஸத்பாத்ரமாகத் திருவுள்ளம் பற்றினான் கண்ணபிரான். அரும்பெரும்பொருள்களை சிஷ்யனானவனுக்கு உபதேசிக்கலாமேயல்லது மற்றையோர்க்கு உபதேசிக்கத்தகாது. அர்ஜுனன் இப்போது நண்பனென்னும் முறையிலுள்ளானேயன்றி சிஷ்யனென்னும் முறையிலில்லை. *அதிபரிசயாதவஜ்ஞா ஸந்தத கமநாத் அநாதரோ பவதி, மலயே பில்லபுரந்த்ரீ சந்தநதருகாஷ்டமிந்தநம் குருதே.* என்று ஒரு ஸுபாஷிதமுண்டே. மலயபர்வதத்தில் வாழும் குறத்திகள் சந்தனக் கட்டைகளை விறகாக உபயோகப்படுத்திக் கொள்ளுகிறார்களாம்; எதனாலே? அவ்விடத்தில் சந்தனகாஷ்டங்கள் மலிந்துகிடக்கின்றன. அவற்றோடே அவர்களுக்குப் பழக்கம் அதிகம். அதிக பரிசயமுள்ள விஷயத்தில் அவஜ்ஞை தோன்றுவது இயல்வு. ஆகவே அவர்கள் சந்தனக்கட்டைகளின் பெருமையை யுணராமல் அவற்றை யிட்டுச் சமையல் செய்வதும் குளிர்காய்வதுமாயிருக்கிறார்கள். அதுபோல, கண்ணன்பக்கலில் அதிக பரிசயமுள்ள அர்ஜுனனுக்கு சிஷ்யத்வமிருக்க ப்ரஸக்தியில்லையன்றோ. சிஷ்யவ்ருத்தி செய்யாதவனுக்கு உபதேசிக்கக் கூடாதாதலால் இவ்வர்ஜுனனை எப்படியாவது சிஷ்யனாக்கிக்கொண்டு இவனுக்கே கீதாசாஸ்த்ரத்தை யுபதேசிக்கவேணுமென்று திருவுள்ளம் பற்றினான் கண்ணபிரான்.

"கண்ணபிரானே! உனக்கு நான் சிஷ்யனாயிருக்கின்றேன்; எனக்குத் தத்வோபதேசம் செய்தருளவேணும்" என்று ப்ரார்த்திக்கும்படியாக அர்ஜுனனைச்செய்து பிறகு அவனுக்கு உபதேசிக்கவேணும். சிஷ்யத்வமென்பது எளிதாக உண்டாய்விடுமோ? *பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந்..........நிர்வேதமாயாத்* இத்யாதி யுபநிஷத்தின்படி நிர்வேத முண்டானாலல்லது சிஷ்யத்வ முண்டாக மாட்டாதாகையாலே அர்ஜுனனுக்கு சிஷ்யத்வ ப்ராப்திக்கு அங்கமாக நிர்வேதமுண்டாகவேண்டியது அவசியமாயிற்று. அந்த நிர்வேதத்தை யுண்டாக்குவதற்கு ஸமயமெதிர்பார்த்திருக்கிறான் கண்ணபிரான்.

இப்பெருமான் ஸத்திபண்ணிவைப்பதாகப் புகுந்து, முடிவில் போர்செய்வதையே திடப்படுத்திக்கொண்டு, ஸமயத்தில் கீதாசாஸ்த்ரத்தையுபதேசிக்க இடம் பெறுவதற்காக அர்ஜுநனோடு ஸாமாநாதிகரண்யம் [சேர்த்தி] ஸித்திக்கும்பொருட்டு அவனுடைய தேரில் இருப்புப் பெறுவதற்குத் தேர்ப்பாகனாயிருக்க இசைந்து அவனோடும் அவனுடைய பரிவாரத்தோடுங் கூட குருக்ஷேத்திரம் வந்து சேர்ந்து, யுத்தத்தைத் தொடங்குவதற்கு முன்னே பந்துக்களைக் கண்டு மோஹிப்பதும், அதனால் சோக விஷாதங்களை யடைவதுமாகிய இவற்றை சாதுர்யமாகவுண்டாக்கி, ஆக இவ்வளவால் சிஷ்யத்வத்திற்கு அங்கமான நிர்வேதத்தை யுண்டாக்குவதாகத் திருவுள்ளம்பற்றி, மேலே பத்தாவது அத்யாயத்தில் * அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே * என்று தானே யருளிச்செய்கிறபடியே தனக்கு அஸாதாரணமாக விருக்கும் சக்தியினால்-இப்போது போர்புரிய வந்து நிற்கும் உற்றுறவினர்களைப் பார்க்கவேணு மென்பதோராசையை அர்ஜுனனுக்கு உண்டு பண்ணினானாயிற்று.

இரண்டாமத்யாயத்தில் பதினோராவது ச்லோகமாகிய "அசோச்யாந் அந்வசோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ச்ச பாஷஸே, கதாஸூந் அகதாஸூம்ச்ச நாநுசோசந்தி பண்டிதா:" என்கிற ச்லோகந்தான் உபதேசத்தின் உபக்ரமமாகவுள்ளது. இதற்குமுன்னே அர்ஜுனன் வாயில் "சிஷ்யஸ் தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம்" என்று வெளிவந்திருக்கிறது. 'கண்ணா! எனக்கு தர்மா தர்மங்கள் தெரியவில்லை; எனக்கு ச்ரேயஸ்ஸென்று நீ அறுதியிட்டபெறுவதை எனக்கு உரைப்பாயாக. உனக்கு நான் மித்திரன் மாத்திரமல்லேன்; சிஷ்யனுமாகி

றேன்; இதோ என் இருகையில் வில்லை நழுவவிடுகிறேன் காண்; எனக்கு ஹிதாஹிதங்களை உபதேசிப்பாயாக' என்று அர்ஜுனன் சொல்லும்படி செய்துவிட்டான் கண்ணபிரான். இந்த ப்ரார்த்தனையைப்பெறாமல் இந்த சாஸ்த்ரத்தை உபதேசிப்பது தகுதியன்றாதலாலும், நிர்வேதமில்லாதவனது வாயில் இந்த ப்ரார்த்தனை வெளிவராதாகையாலும் இத்தனையும் கண்ணபிரான் செய்துவைத்த வொரு மாயம் என்பது அறியத்தக்கது. ஆகவே அர்ஜுனனுக்குண்டான வ்யாமோஹம் அவன்றன்னுடைய ஸ்வபாவத்தாலுண்டானதன்று. மாயப்போர்த்தேர்ப்பாகனுடைய மாயயந்த்ரம் செய்வித்த செயல் என்றதாயிற்று. இல்லையாகில் கீதா சாஸ்த்ரம் அவதரிக்க அவகாசமே யிராதன்றோ. (இனி இரண்டாம் விஷயம்.)

போர்புரிய மாட்டேனென்ற அர்ஜுனனைப்போரில் மூட்டுவதற்கு இந்த கீதா சாஸ்த்ரத்தில் சொல்லப்படுகிற விஷயங்களித்தனையும் வேணுமோ? க்ஷத்ரியதர்மோபதேச மொன்று போதுமே; ப்ரக்ருதத்திற்கு அநபேக்ஷிதங்களான அதிகவிஷயங்களை இதில் பரக்கக்கூறியிருப்பது ஏன்? என்கிற இரண்டாவதான ஆலோசனைக்கு இனிச் சொல்லுகிறது. ஏதோ வொரு வியாஜத்தையிட்டு அரியபெரிய சாஸ்த்ரார்த்தங்களை வெளியிடவேணுமென்று துணிந்த கண்ணபிரானது திருவாக்கில் இது ஆவச்யகம், இது அநாவச்யகம் என்று வரையறுக்க நாமார்? விஷயங்களானவை ப்ரஸக்தம் அநுப்ரஸக்தம் என்று இருவகைப்படுமன்றோ. எந்த சாஸ்த்ரமும் ப்ரஸக்த விஷயங்களோடு மட்டும் நிற்காது. அநுப்ரஸக்த விஷயங்களும் சேர்ந்தே நிற்கும். ஸ்வாமி யெம்பெருமானார் தம்முடைய கீதாபாஷ்ய அவதாரிகையின் முடிவில் "பாண்டு தநய யுத்தப்ரோத்ஸாஹநவ்யாஜேந........அவதாரயாமாஸ." என்றருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகளை இங்கே அநுஸந்திப்பது. அர்ஜுனனை யுத்தத்தில் உத்ஸாஹப்படுத்துவது என்பது வ்யாஜமாத்ர மென்றும், பரமபுருஷார்த்தமான மோக்ஷத்திற்கு ஸாதனமாக வேதாந்தங்களில் ஓதப்பட்டதாய் ஜ்ஞானகருமங்களை அங்கமாக வுடைத்தாயிருந்துள்ள பக்தியோகத்தை அவதரிப்பிப்பதுதான் இந்த கீதாசாஸ்த்ரத்திற்கு ப்ரதான லக்ஷ்யமென்றும் தெரிவித்தருளினாராயிற்று. ஆகவே முமுக்ஷுக்களுக்கு ஜ்ஞாதவ்யங்களான ஸகலார்த்தஸாரங்களும் இந்த கீதா சாஸ்த்ரத்தில் தெள்ளமுதாக அமைந்துள்ளன வென்றதாயிற்று. .... .... .... (43)

## 44. ஸீதாபிராட்டியின் நல்வார்த்தை யொன்று.

இலங்கையில் அசோகவனத்தில் ஏகாக்ஷி ஏககர்ணி முதலான எழுநூறு ராக்ஷஸிகளிடையே வாழும் ஸீதாபிராட்டி இராவணனுக்குப் பரமகருணையினால் பலபல ஹிதங்களைச் சொல்லுகிறாள்; அந்த ச்லோகங்களை வால்மீகிராமாயணத்தில் வாசிக்கும்போது கல்லும் கரையும்; மரங்களுமிரங்கும். அந்த ஸந்தர்ப்பத்திலுள்ளச்லோகங்களுள் விலையில்லாமாணிக்கமென்னும்படியான ச்லோகமொன்றே நம் ஆசாரியர்களின் திருவுள்ளத்தில் சிறந்து திகழ்வது; அதாவது,

" இஹ ஸந்தோ ந வா ஸந்தி ஸதோ வா நாநுவர்த்தஸே.
ததாஹி விபரீதா தே புத்திராசாரவர்ஜிதா."

என்பது. இதற்குப் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானம் பேரின்பமேவடிவெடுத்தது. நாடோறும் காலை யெழுந்தவுடனே அதை ஐந்து நிமிஷமாவது ஸேவிக்கப்பெற்றால் அது நம்முடைய ஆத்ம க்ஷேமத்திற்கு நல்லுரமான எருவிட்டதாகும். பிராட்டி இலங்கையைச் சுற்றிப்பார்த்தாள். அங்கு இல்லாத வஸ்து எதுவுமேயில்லையென்று தோன்றிற்று. ஸ்வர்க்கலோகத்திலும் காணக் கிடைக்காத பொருள்கள் இலங்கையில் சேமித்துவைக்கப்பட்டிருந்ததாகத் தெரியவந்தது. ஆனால் ஒரே ஒருவஸ்து இல்லையென்று குறை தோன்றிற்று; அந்த வஸ்து எதுவென்ன; [இஹ ஸந்தோ ந.] அப்பா! ராவணா! மனமும் மதியும் நல்வழியிற் செல்லும்படி நல்லவுபதேசங்களை நிச்சலும்

நல்கவல்ல நல்லார்கள் இவ்வூருக்கு அவசியமல்லவா? அப்படிப்பட்ட ஸத்துக்களைத்திரட்டி இங்கு நீ கொண்டு சேர்க்கவில்லையே! ஒவ்வொரு க்ராமத்திற்கும் நகரத்திற்கும் மருத்துவர்கள் எப்படி அவச்யமோ அப்படி நல்லுபதேசம் நல்கவல்ல நல்லார்களும் அவச்ய மென்றுணராய். தேஹத்திற்கு நேரும் வியாதிகளைப் போக்குவதற்கு வைத்யர்கள் வேண்டும்; ஆத்மாவுக்கு நேரும் நோய்களை விலக்குவதற்கு ஸதுபதேச ஸமர்த்தர்களான ஸத்துக்கள்வேண்டும். இது உனக்குத்தெரியாததன்றே. உண்பாரும் உறங்குவாரும் உடுப்பாரும் அடிப்பாருமேயான இப்பெரிய வூரிலே ஐயோ! ஸத்துக்களைத் திரட்டிவைத்தாயல்லையே என்று வருந்திச் சொன்னாள் பிராட்டி.

உடனே ஆலோசித்தாள்; தவறுதலாகச் சொல்லிவிட்டோமென்று தோன்றிற்று. அகம்பநன் மாரீசன் மால்யவான் விபீஷணன் முதலானவர்கள் [கும்பகரணனுங்கூட] ஆச்சரியமான உபதேசங்களைச் செய்தவர்களென்பது ப்ரஸித்தமாகையாலே அப்படிப்பட்ட ஸத்துக்களிருக்க, ஸத்துக்களில்லையென்று சொன்னோமே யென்று வருந்தி [ஸந்தி] என்கிறாள். ஸத்துக்கள் இருக்கிறார்கள், அதிலொரு குறையில்லை என்றபடி. இடையில் (வா) என்றது பூர்வபக்ஷவ்யாவர்த்தகம். "இஹஸந்தோ ந வா ஸந்தி" என்பதை ஒரேவாக்யமாகக் கொண்டு இவ்வூரிலே ஸத்துக்களில்லையா?" என்பதாகப் பொருள் கூறுவர் பலர். நம்பிள்ளை திருவுள்ளத்தில் தோன்றுகிற அர்த்தம் விலக்ஷணமாக வன்றோ விருக்கும். இவ்வூரில் ஸத்துக்களில்லையோவென்று முதலிலே சங்கித்து, எனில்லை. நன்றாகவுண்டு என்று முடிப்பதான அர்த்தமே சுவைமிக்கது. ஸத்துக்கள் இருந்தும் அவர்களுடைய இருப்பு கார்யகரமாகவில்லையே யென்கிற வருத்தத்தை உடனே காட்டுகிறாள் [ஸதோ வா நாநுவர்த்தஸே] என்று. ஸத்துக்களெல்லாரும் நம்மாழ்வாரையும் எம்பெருமானாரையும் போன்றவர்களல்லரே. *பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்ளவேணு மென்கிற உதாரமான எண்ணம் ஸத்துக்களெல்லார்க்கும் எளிதாக வுண்டாய்விடுமோ? * சொன்னால் விரோதமிது ஆகிலும் சொல்லுவன் கேண்மினோ * என்றார் நம்மாழ்வார். * பாருலகிலாசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறு மென்று பேசி வரம்பறுத்தார் எராரேதிராசரின்னருளால்; இப்படிப்பட்ட பெரும்புகழ் எல்லார்க்கும் வாய்க்குமோ? அநுவ்ருத்திப்ரஸந்நர்களாகவன்றோ பெரும்பாலும் ஸத்துக்களிருப்பது. அன்னவர்களை அநுவர்த்தித்தன்றோ ஹிதோபதேசம் பெறவேணும், அந்தோ! அது செய்யமாட்டிற்றில்லையே யென்றாள் பிராட்டி. "ஸதோ வா நாநுவர்த்தஸே" என்கிற இவ்வார்த்தை எவ்வளவு கம்பீரமானது! ஸத்துக்களை அநுவர்த்தித்தே ஹிதோபதேசங்கள் பெறவேணு மென்பதை எவ்வளவு அழகாகக் காட்டுகிறாள் காண்மின்.

ஸத்துக்களைப்பணிந்து ஹிதோபதேசங்கள் கேட்கப்பெறாதவர்களுக்கு விளையும் அனர்த்தத்தை உத்தரார்த்தத்தாலே காட்டுகிறாள் [ததாஹி விபரீதா தே புத்திராசாரவர்ஜிதா] என்று. ஸத்துக்களின் அநுவர்த்தனமில்லாதவர்களினுடைய புத்தியும் ஒழுக்கமும் விபரீதமாகத்தானிருக்குமென்று இதனால் காட்டினபடி. ஏதேனுமொருபடி ஸதுபதேசப்ராப்திக்கு ஆசைப்படுவர்கள்ஆஸ்திகர்கள்.

---

## 45. வைஷ்ணவரென்பது யாரை?

உலகில் வகுப்பு பேதங்களைக் குறிக்கும்போது, அந்தணர் க்ஷத்ரியர், வைசியர், நாயுடு, முதலியார் என்று பிரித்துக்குறிப்பதுபோல் 'சைவர், வைஷ்ணவர்' என்றும் விவகாரம் செய்து வருகின்றனர். வைஷ்ணவர் என்கிறவழக்கானது குறிப்பிட்ட ஒரு வகுப்பினர்க்கே உரியதென்று பலர் கருதுவர். உள்ளவாறு நோக்குங்கால் உலகில் தோன்றிய மனிதர்கள் அனைவரும் வைஷ்ணவரென்னத் தகுதியுடையார். விஷ்ணுவைச் சேர்ந்தவர்கள்—விஷ்ணு ஸம்பந்தம் பெற்றவர்கள் வைஷ்ணவரெனப்படுவர். விஷ்ணுவென்கிற சொல்லுக்கு எங்கும்

பிரச்நத்தில் "அக்நிர்வை தேவாநாம் அவமோ விஷ்ணு: பரம:—அக்கிரவமோ தேவதாநாம் விஷ்ணு: பரம:" என்று ஓதப்பட்டிருப்பதை வைதிகர்கள் யாவருமுணர்வர்கள். தேவதைகளுக்குள்ளே அக்நி கடைப்பட்ட தேவதை; விஷ்ணு, தனக்குமேல் ஒருவருமில்லாதபடி மேம்பட்ட தேவதை என்பதே மேற்கூறிய வேதவாக்கியத்தின் பொருள். அப்படிப்பட்ட ஒரு பர தேவதையின் ஸம்பந்தம் பெறாதவர்கள் இவ்வுலகில் இருக்க முடியாது; எவ்வுலகிலும் இருக்க முடியாது. ஸம்பந்தத்தை நாம் அறிந்துகொள்ளாமல் போனாலும் அது நம்மைவிட்டு அகலாது. ஒருவன் தாய்தந்தையரைவிட்டு அகன்றாலும் அவர்களது தொடர்பு எங்ஙனம் அறுபடாதோ அங்ஙனமே இதனைக்கொள்க. ஆகவே உலகிற்பிறந்த யாவரும் விஷ்ணு ஸம்பந்தம் குன்றுதலற்றோர் என்கிற காரணத்தினால் வைஷ்ணவர்களென்று வழங்கத் தகுதியுடையார். நெற்றியில் அணிகிற புண்ட்ரத்தைக்கொண்டும், தோளில் இடுகிற சங்கு சக்கர இலச்சினையைக்கொண்டும் மற்றும் சில அடையாளங்களைக்கொண்டும் வைஷ்ணவர்களென்று ஒருவருக்குப் பெயரைமட்டும் வழங்குவது பெரும்பாலும் உலகிற்காண்கிறது. இதுநிற்க. இனி ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணத்தைப்பற்றிச் சிறிது வரைகின்றோம்.

ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணத்தை விளக்குவந்த சாஸ்த்ரங்கள் பலவும் பலமுகமாகப் பேசியுள்ளன. "யே கண்டலக்ந துளஸீநளிநாக்ஷமாலா: யே பாஹுமூலபரிசிஹ்நித சங்க சக்ரா:, யே வா லலாட பலகே லஸதூர்த்வ புண்ட்ரா: தே வைஷ்ணவா:" என்கிற ச்லோகம் பெரும்பாலும் பலருமறிந்ததேயாகும். கழுத்தில் துளசிமணி மாலையையும் தாமரைமணி மாலையையும் அணிந்துகொண்டும், தோள்களில் திருவாழி திருச்சங்குகளின் கோயிற்பொறியாலே ஒற்றுண்டு நின்றும், நெற்றியில் பளபளவென்று விளங்கும் திருமண்காப்பை யணிந்துகொண்டுமிருப்பவர்கள் வைஷ்ணவர்களென்று மேற்குறித்த சுலோகத்தினாற் சொல்லுகிறது.

ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இருக்கவேண்டிய வெளிவேஷங்களை மாத்திரம் இந்த சுலோகம் தெரிவிக்கிறதேயன்றி அந்த:கரணத்தில் திகழவேண்டிய அம்சங்களில் ஏகதேசத்தையும் தெரிவிக்கவில்லை. அவற்றைத் தெரிவிக்கின்ற சுலோகங்களும் இதிஹாஸ புராணங்களில் மிக மலிந்து கிடக்கின்றன.

பகவத் கீதையில் பத்தாவது அத்யாயத்தில் (ச்லோ. 5.) "அஹிம்ஸா ஸமதா" என்றவிடத்தில் 'ஸமதா' என்பதை விவரிக்கருள்கின்ற ஸ்ரீபாஷ்யகாரர் (ராமாநுஜர்)—ஸமத்வமாவது தன்னிடத்திலும் பிறரிடத்திலும் ஒரு நிகரான புத்தியுடைமை என்று பொருள்படப் பேசியுள்ளார். அதை வியாக்கியானம் செய்கிற வேதாந்த தேசிகர் 'ந சலதி நிஜவர்ணதர்மதோ ய: ஸமமதிராத்மஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே' என்கிற ஸ்ரீ விஷ்ணுபுராண வசனத்தையெடுத்துக் காட்டியுள்ளார். இந்த சுலோகம் ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணத்தை வெகு அழகாகக் காட்டியுள்ளது. தன்னிடத்திலும் தன் நண்பர்களிடத்திலும் தன் திறத்துப் பகை பாராட்டுகிறவர்களிடத்திலும் ஒரு நிகரான புத்தியையுடையவனாயிருப்பவனே ஸ்ரீவைஷ்ணவன் என்று பராசரமுனிவர் பணித்தபடி.

இத்தகைய ஸ்ரீவைஷ்ணவத்வம் ப்ரஹ்லாதாழ்வான் போல்வாரிடத்தில் இருந்ததாகக் கேட்டுவருகின்றோமத்தனையல்லது இக்காலத்தில் சில வ்யக்திகளிடத்திலாவது இதைக் காண முடியுமோவென்று பார்த்தால் முடியாதென்றே முடிவுகட்டவேண்டியதாகும்.

முற்காலத்தில் பட்டர், நம்பிள்ளைபோன்ற ஆசிரியர்களின் சில இதிஹாஸங்களை நாம் கேட்கும்போதும் 'உண்மையாக இங்ஙனே நடந்திருக்குமா?' என்று அதிசங்கை கொள்ளு

மவர்களாக நாம் இருக்கின்றோமே யன்றி, நாமும் அந்த நடையைச் சிறிதாகிலும் அநுகரிக்க முயலவேண்டும் என்று பாரிக்கின்ற அதிகாரிகள் இல்லையென்றே சொல்லலாம். ஸ்ரீவசனபூஷணத்தில் "குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகார ஸ்ம்ருதியும் நடக்கவேணும்" என்றவிடத்து ஜநந்யாசார்யருடைய வியாக்கியானமான ஆய்ப் படியில்:—

"பட்டர் ஒருநாள் பெருமாள் ஸன்னிதியிலே அநுஸந்தானம் பண்ணு நிற்க, சிலர் செவி பொறுக்கவொண்ணாத பருஷோக்தி பண்ணக்கேட்டு, சாத்தின திருவாழி மோதிரத்தையும் திருப்பரிவட்டத்தையும் கொடுத்தருளி, முதலிகளைப் பார்த்து இவர்கள் பருஷித்ததுக்கு நான் அஞ்சிக்கொடுத்தேனன்று, நாமறியாத தோஷங்களையும் பெருமாள் திருச்செவிசாத்தும்படி சொன்ன உபகாரத்தைப் பற்றிக் கொடுத்தேனத்தனை..........என்றருளிச்செய்தார்" என்றொரு இதிஹாஸம் காண்கிறது. பட்டர் தம்மைத் தூஷித்தவர்கட்குப் பூஷண தானமும் பீதாம்பர தானமும் செய்ததாக இதனாலறிகிறோம். இதையெல்லாம் நாம் பிறர்க்கு எடுத்துரைக்கும்போது கல்லும் கரையும்படி உரைக்கின்றோம். கேட்பவர்களும் கண்ணுங் கண்ணீருமாயிருந்து புளகாங்கிதராய்க் கேட்கிறார்கள். ஆனால் அவரவர்களின் அனுட்டானம் எங்ஙனே யிராநின்றதென்று பார்த்தால் இதை நாம் விசேஷித்து எடுத்துரைக்க வேணுமோ?

நமக்கு நைச்யாநுஸந்தானம் ஸ்வரூபமென்றறிந்து நாம் 'நீசனேன் நிறையொன்று மிலேன்' என்றும் 'சீலமில்லாச் சிறியன்' என்றும் பலவாறு பாசுரங்களையும் சுலோகங்களையும் முன்னிட்டுத் தாழ்வு சொல்லிக்கொள்கிறோம்; நம் வாயினால் வெளிவந்த அந்தத் தாழ்வுதன்னையே பிறரொருவர் நம்மைநோக்கி எடுத்துரைக்கத் தொடங்கினால் 'என்னையா நீசனென்கிறாய்? என்னையா நிறையொன்றுமில்லாதவனென்கிறாய்? என்னையா சீலமில்லாச் சிறியனென்கிறாய்? பாவி! நீயன்றோ இப்படிப்பட்டவன்' என்று உடனே அவரை ஆயிரம் வகையாக தூஷிக்கவும் தண்டிக்கவும் தண்டிப்பிக்கவும் எழுகின்றோம். ஒவ்வொருவரும் தம் தம் அநுபவத்தில் இதை நிச்சயமாகக் காணலாம்.

சில விசேஷ காலங்களில் பெரியார்களை எழுந்தருளப்பண்ணி 'ஸ்வாமிந்! ஸ்ரீபாத தீர்த்தம் ஸாதிக்கவேணும்' என்று வேண்டுகிறோம். அதற்கு அவர்கள் 'ஐயோ! அடியேனுக்கு என்ன யோக்யதையுண்டு? ஸகல விதத்திலும் அயோக்யனன்றோ அடியேன்' என்று பல படியாகத் தம் தாழ்வுகளைக் கூறுகின்றனர். இங்ஙனம் அவர் நைச்யாநுஸந்தானம் செய்வது உள்ளவாறு செய்கிறபடியா? அல்லது, இங்ஙனே சொல்லிக்கொள்ளவேண்டுவது ஒரு உபசார வழக்கென்று கொண்டு செய்கிறபடியா? என்று நாம் ஆலோசித்தால், அவர்களுடைய ஹ்ருதயம் நம்மால் தெரிந்துகொள்ள முடியாதாயினும் அவர்கள் தாங்கள் அநுஸந்தித்த நீசத்தன்மையை நம் வாயினால் சொல்லிக்காட்டினவிடத்தும் (அதாவது, நீர் மிகவும் அயோக்யர் என்று பிறர் சொன்னவிடத்திலும்) அவர்கள் உகந்தேயிருப்பார்களாயின் அப்போதுதான் அவர்களுடைய நைச்யாநுஸந்தானத்தை நாம் ஸஹ்ருதயமென்று நினைக்கலாகும். தம்மைப் பற்றிப் பிறர்கூறும் தாழ்வுரைகளைச் சிறிதும் ஸஹியாமல் உடனே பிரபலமாக எதிரம்பு கோப்பவர்களையே பெரும்பாலும் காணுகின்றோம். இத்தகையார் செய்துகொள்ளும் நைச்யாநுஸந்தானம் பொருளற்றது என்றே சொல்லவேண்டும். இதற்கு அடியேன்தான் உதாரணம்.

'ஒருவன் உன்னை இடது தாடையில் அறைந்தானாகில் உடனே அவனுக்கு நீ வலது தாடையை ஆதரவோடு காட்டு!' என்று பிரஸங்கமேடைகளில் பேசுவாரை மிகமிகக் காண்கிறோம். அப்படி அவர்கள் பேசி இப்பால் வந்தவுடனே அவரை ஒருவர் அடிப்பதாகக் கையோச்சும்போதே என்ன நடக்குமென்பதை நாம் விவரிக்கவேணுமோ?

ஸபைகளில் சிலர் உபந்யாஸம் பண்ணி முடிக்கும்போது "ஒன்றுமறியாத நான் ஏதோ தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்; இதில் நல்லது ஒன்றுகூட இராது; சிறியேனை க்ஷமிக்கவேணும்" என்று கால்மணி காலம் சொல்லி முடிப்பர்கள். இதே வார்த்தையை அவர் அயலார் வாயில் கேட்பாராகில் கோபாவேசங்கொண்டு கண்கள் சிவக்கப்பெற்று 'எனக்கா ஒன்றும் தெரியாது? நானா தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்?' என்று தொடங்கி அவரே ப்ரபலமாக அட்டஹாஸங்களைச் செய்யக்காண்கிறோம். ஆசார்யபீடம் வஹிக்கின்ற எந்த வ்யக்தியும் தம் தாழ்வைத் தாம் அநுஸந்திப்பவர்களாக இருக்கிறார்களேயன்றி, தம்மைப் பற்றிப் பிறர்கூறும் தாழ்வை ஆமோதிப்பவர்களாக இல்லையே! அங்ஙனம் ஆமோதிப்பவர்களே ஸ்ரீவைஷ்ணவத்வ பூர்த்தியுடையராவர் என்பது நூற்கொள்கை.

இக்காலத்தில் இப்படிப்பட்ட வ்யக்தி தேறுவது கஷ்டமாதலால் ஒருவரும் ஸ்ரீவைஷ்ணவரல்லர் என்று நாம் சொல்லவும் நினைக்கவும் தகாது. 'ப்ராஹ்மணயோனியிற் பிறப்பதே ப்ராஹ்மண்யம்' என்று சொல்லுவதுபோல, ஸ்ரீவைஷ்ணவ குடும்பத்தில் பிறப்பதே ஸ்ரீவைஷ்ணவத்வம் என்று கொள்ளக் குறையில்லை. அன்னவர்களது திருவுள்ளமும் புண்படாதபடி வர்த்திப்பதே முக்கியமான ஸ்ரீவைஷ்ணவலக்ஷணம். ... ... ... (45)

---

## 46. வேதங்கள் அநந்தங்கள்.

நாம் ஆதரிக்கும் பிரமாணங்களில் தலையானது வேதம். அது ருக்வேதமென்றும் யஜுர்வேதமென்றும் ஸாமவேதமென்றும் ஆதர்வணவேதமென்றும் நான்கு பாகுபாடுகளுற்றது. வேதங்களுக்கு அளவு கிடையாதென்பது வேதத்திலேயே தெரிவிக்கப்பட்டுள்ளது. "அநந்தா வை வேதா:" என்ற வாக்கியம் மிகவும் பிரஸித்தமானது. இவ்வாக்கியம் தைத்திரீய யஜுர் வேதத்தில் ஒரு பகுதியான காட்கம் என்னும் சாகையில் முதல் ப்ரச்நத்தில் பதினோராவது அநுவாகத்திலுள்ளது. வேதங்கள் அளவற்றவை யென்பதைப் பற்றி அவ்விடத்தில் அழகான வோர் உபாக்கியானம் ஓதப்பட்டிருக்கின்றது. அஃது இங்கு விளக்கப்படுகின்றது.

முன்பு பரத்வாஜ ரென்னும் மஹர்ஷியானவர் ஸகல வேதங்களையும் ஓதி முடிக்க வேணுமென்ற முயற்சி கொண்டு அதற்குரிய ஆயுஸ்ஸைப் பெறுவதற்காக இந்திரனைக்குறித்து உபாஸனை செய்து அவனை ப்ரஸந்நனாக்கி அவனுடைய ப்ரஸாதத்தால் ஒரு புருஷாயுஸ்ஸுக்கு நூறாண்டு விழுக்காடு முந்நூறாண்டுகொண்ட மூன்று ஆயுஸ்ஸுக்களை வரம் பெற்று அந்த வாழ்நாளில் குருகுல வாஸஞ் செய்து வேதமோதி வந்தார். முந்நூறாண்டும் முடிந்து ஜீர்ண சரீரராய்க் கிழத்தனமடைந்து முமூர்ஷுவாய்ப் படுத்திருக்கின்ற அம்முனிவரை இந்திரன் வந்தணுகி மேல்வருமாறு ஒரு வார்த்தை சொன்னான்; —

"ஓ பரத்வாஜ முனிவரே! மீண்டும் ஒரு நூறாண்டு கொண்ட ஆயுஸ்ஸை உமக்கு நான் கொடுப்பேனாகில் அந்த வாழ்நாளை நீர் எவ்விதமாகக் கழிக்க உத்தேசிக்கிறீர்? அந்த ஆயுஸ்ஸில் நீர் ஸாதிக்க விரும்பும் புருஷார்த்தம் யாது?" என்று கேட்டான் இந்திரன். அதற்கு அம்முனிவர் "வேறு நான் என்ன செய்யப் போகிறேன்? அந்த ஆயுஸ்ஸிலும் வேதாத்யயநமே செய்யக்கடவேன்" என்றார்.

அதைக் கேட்ட இந்திரன் 'ஓ, இவர் ஸகல வேதங்களையும் ஓதிவிட வேணுமென்று நினைக்கிறார் போலும்' என்று நினைத்து, அது ஒரு நாளும் முடியாத காரியமென்பதைத் தெரிவிப்பதற்காக, "ருக்வேதம் யஜுர்வேதம் ஸாம வேதம் என்ற மூன்று வேதங்களையும் இந்திரன் தன்னுடைய யோக ஸாமர்த்தியத்தினால் மூன்று மலைகளாக்கி, இதற்குமுன் அம்முனிவர் கன்

டறியாத மலைவடிவமான அந்த வேதங்களை அவருக்குக் காட்டினான். பிறகு அவற்றுள் ஒவ்வொருமலையினின்றும் ஒவ்வொரு முஷ்டியால் தூள்களை யெடுத்துக் காட்டினான். அங்ஙனம் மூன்று முஷ்டிகளை யெடுத்துக்காட்டி 'ஓ பரத்வாஜரே' என விளித்து இந்திரன் கூறுகிறான்; இம்மூன்று மலைகளும் வேதங்களே. அதில் ஒவ்வொரு துகளும் ஒவ்வொரு வேதமாதலால் வேதங்களுக்கு எல்லையே கிடையாது என்றான்.

இவ்வார்த்தையைக் கேட்ட முனிவர், இப்படியாகில் இன்றளவும் நாம் செய்த வேதாத்யயநம் எவ்வளவாயிருக்கும் எனச் சிந்தித்தமையை அறிந்த இந்திரன் மீண்டுங் கூறுகிறான்— முனிவரே! இம்மூன்று முஷ்டிகளில் அடங்கியுள்ள வேதராசியைத் தான் நீர் இதுவரை முந்நூறாண்டுகளாகக் குருகுலவாஸம்செய்து ஓதினீர். இதோ மலையாகக் கிடக்கும் வேதங்கள் உம்மால் ஓதப்படவில்லை; ஆகவே ஸகல வேதங்களையும் ஓதி முடிப்பதென்பது ஒருநாளும் முடியாத காரியமென்று கொள்ளீர்—என்றான். ஆக இவ்வுபாக்கியானத்தினால் வேதங்களின் அளவில்லாமை சொல்லப்பட்டதென்றுணர்க. உலகவழக்கில் "கற்றது கைம்மண்ணளவு; கல்லாதது மலையளவு" என்கிற ஒரு வார்த்தை எங்கும் ப்ரஸித்தமாக வுள்ளது. மேலே விவரித்த வேதவாக்கியங்களே இதற்கு மூல மென்பதும் அறியத்தக்கது. .... .... .... (46)

## 47. ஸ்ரீராமாயண விசேஷார்த்தம்.

ஸ்ரீராமாயணம் முதலியவற்றிலுள்ள ச்லோக விசேஷங்கள் நம்முடைய பூருவாசாரியர்களின் திருவாக்கில் புகுந்து லோகோத்தரமான வைலக்ஷண்யத்தை யடைந்தன வென்பது ப்ரஸித்தம். ஆசிரியர்தலைவரான நம்பிள்ளை திருவாக்கில் திருவவதரித்த விசேஷார்த்தங்கள் வடக்குத்திருவீதிப்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளைகளால் ஏடுபடுத்தப்பட்டு விளங்குவது ஸ்ரீவைஷ்ணவ வுலகின் அரிய பெரிய பாக்கியமாகும். இப்போது ஒரு விசேஷார்த்தமுரைப்போம்;

["மரணாந்தாநி வைராணி நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம்,
க்ரியதாமஸ்ய ஸம்ஸ்கார: மமாப்யேஷ யதா தவ."] [ஸ்ரீராமா—யுத்தகாண்டம்]

என்பது, விபீஷணாழ்வானை நோக்கிப் பெருமாளருளிச் செய்ததொரு சுலோகம். இராவணன் மாண்ட பின்பு "இந்த மஹா பாபிக்கு நான் உத்தரக்ரியை பண்ண மாட்டேன்" என்று ஒரு நிலை நின்ற விபீஷணாழ்வானை நோக்கிப் பெருமாளருளிச் செய்த ச்லோகமிது. ஸாதாரணமாக வடமொழி பயின்ற அனைவரும் ஸ்ரீராமாயணத்தில் இறங்கி அர்த்தம் சொல்லப் புறப்படுவது வழக்கமாதலால், அப்படிப்பட்டவர்கள் இதற்குக் கூறும் பொருள் எங்ஙனே யென்னில்; உலகத்தில் ஒருவனிடத்து ஒருவனுக்குப் பகை மரண பரியந்தமே யாதலால், இந்த ராவணன் மாண்டொழிந்த பின்பும் இவனிடத்து நாம் பகைவைப்பது எதுக்கு? இவனை வதை செய்வதும் பிராட்டியைக் கைக்கொள்வதுமே நமக்குப் ப்ரயோஜனமாதலால் அது நிறைவேறப் பெற்ற பின்பும் இவன் மீது நாம் பகை பாராட்டலாகுமோ? பகையை மறந்து இனி இவனுக்குச் செய்ய வேண்டியதைச் செய்—என்று பெருமாள் கூறுவதாக.

இப்பொருள் பொருத்த முடையதன்றென்றும் இராமபிரானுடைய திருவுள்ளத்திற்கு ஒவ்வாதென்றும் நம்பிள்ளை திருவுள்ளம் பற்றி இன்சுவை மிக்க வியாக்கியானம் செய்தருளியுள்ளார்.

இதுவரையில் பெருமாள்மீது இராவணன் பகை பாராட்டியிருந்தானே யல்லது இராவணன் மீது பெருமாள் சிறிதும் பகைபாராட்டியிருந்ததில்லை. "விபீஷணோ வா ஸுக்ரீவ யதி வா ராவண: ஸ்வயம்" என்றருளிச்செய்த பெருமாளுடைய திருவுள்ளத்திற்கு இணங்கவல்ல

பொருளன்றோ பணிக்க வேணும். அதை நம்பிள்ளைதாமே பணிக்க வல்லவர். இங்கு நம்பிள்ளையின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் அமுதமயமே யாதலால் அவற்றை அப்படியே யெடுத்துக் காட்டிவிட்டுப் பிறகு விவரிக்கிறோம்.

நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி வருமாறு:—

"[மரணாந்தானி வைராணி] விஷயங்களின் குடியிருப்பை யொழித்து மைதிலியைப்பிரித்து, நம் உயிர் நிலையிலே நலிந்தாப்போலே ஸ்ரீ ஜடாயுமஹாராஜரை நலிந்து இவையெல்லாம் செய்யமாட்டானே இவன் இனி. [நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம்.] இவன் ஜீவிக்கிற நாளிலே நாம் செய்யும் நன்மை இவன் விலக்காதொழிய வேணுமென்று இத்தனையே எண்ணியிருந்தோம்; அது அந்நாளில் பெற்றிலோம். நாம் தேடியிருந்த அது முந்துற முன்னம் ஸித்திக்கப் பெற்றோமிறே. [க்ரியதாம் அஸ்ய ஸம்ஸ்கார:] இவன் நாம்செய்யும் நன்மை விலக்காதானனவளவு பிறந்தவின்றாய் நாம் இருக்கவேணுமோ? வேண்டுவன செய்யப் பாரும். [மமாபி ஏஷ யதா தவ.] நீர் இருப்பத்திருந்தீராகில், குடல்துடக்குடையாரிலே ஒருவன் செய்யுமித்தனை யன்றோ; நாம் இவனுக்கு வேண்டுவனசெய்ய, நீர் பின்னைக்கடக் கவில்லீர்." என்று.

இந்த திவ்ய ஸூக்திகளின் தாத்பர்ய ஸாரமாவது — விபீஷணா! இவ்விராவணன் ஜீவித்திருக்கும் நாளிலேயே இவனுக்குச்சில நன்மைகள் நான் செய்யக் கருதியிருந்தேன்; அவை நடேறுதபடிக்கு இவன் பலவகையான த்வேஷ காரியங்களை இயற்றிவந்தானதலால் நம்முடைய மனோரதம் நிறைவேற வழியில்லை யாகிறதேயென்று வருத்தத்துடனேயே நான் காலங்கழிக்க நேர்ந்தது. இப்போது இவன் மரணமடைந்து விட்டானதலால் இனி ஒருவிதமான த்வேஷ காரியமும் இவன் பண்ண ப்ரஸக்தியில்லையே. நாம் இவனுக்குச் செய்ய நினைத்த நன்மைகளுக்கு இவன் ஆபிமுக்யம் பண்ணுதொழிந்தாலும் இவற்றைத் தடை செய்யமாட்டாத நிலைமைக்கு இப்போது வந்திட்டானன்றோ. சேதநர்களிடத்தில் இவ்வளவுதானே நான் எதிர்பார்த்திருப்பது. பகவத்ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி போருமே. இதுவோ இப்போது கைபுகுந்து விட்டது. இவனுடைய உயிருக்கு நன்மை செய்ய நினைத்திருந்தேன்; அதுசெய்ய ப்ராப்தியில்லாமே இழந்த குறைதீர இவனது உடலுக்காவது சில நன்மைகளைச் செய்வாய். நீ செய்யப் பின்வாங்கினையாகில் இதோ நான் செய்யக் காத்திருக்கிறேன். நீ எப்படி எனக்கு ஆப்தனோ அப்படி இவனும் எனக்கு ஆப்தன்தானே—என்பதாம்.

இந்த ச்லோகத்தில் "வைரம்" என்று ஏக வசனமாக வன்றிக்கே வைராணி என்று பஹுவசனமாக இருப்பதையே முக்கியமாக நம்பிள்ளை குறிக்கொண்டு ரஸமயமான வியாக்கியானம் செய்தருளினாரென்றுணர்க. வைராணி என்றது வைரகார்யாணி என்றபடி. (47)

---

## 48. திருவாய்மொழியின் தசாவதாரம்.

பகவத் விஷயமென்றால் எம்பெருமானைப் பற்றியது என்று பொருள். ஸ்ரீராமாயணம் ஸ்ரீபாகவதம் ஸ்ரீ விஷ்ணுபுராணம் முதலிய உயரிய நூல்கள் பலவும் எம்பெருமானைப் பற்றியனவே யானாலும் அவற்றுக்கு பகவத் விஷயமென்கிற ப்ரஸித்தி விளையவில்லை. ஆழ்வார்களின் திவ்யஸூக்திகளைக்கொண்டு காலக்ஷேபம் செய்வதையே பகவத்விஷய காலக்ஷேப மென்று எங்கும் வழங்கிவரக் காண்கிறோம். அவை தன்னிலும் முக்கியமாகத் திருவாய் மொழிக்கே பகவத் விஷய மென்கிற ப்ரஸித்தி வாய்த்திருக்கின்றது. எம்பெருமா

[illegible]பற்றி அறிய வேணுமானால் திருவாய்மொழி கொண்டு அறியலாமத்தனை போக்கி வேறொன்றாலும் அறிய இயலாது என்னில் இது மிகையாகாது.

திருவாய்மொழி பத்துப் பத்தாக அவதரித்திருப்பதை நோக்கினால் எம்பெருமான் தசாவதாரங்கள் செய்தது போலவே திருவாய்மொழியும் இங்ஙனே பத்து அவதாரங்கள் செய்ததோ! என்னலாம்படி யிராநின்றது. இவ்வளவேயன்று; எம்பெருமானுடைய அவதாரங்களுக்கு என்ன என்ன ப்ரயோஜனங்களோ அவையெல்லாம் திருவாய்மொழியின் திருவவதாரத்தினாலும் நன்கு தேறுகின்றன வென்று அறியக்கிடக்கின்றது. இவ்விஷயம் ஆழ்வாருடைய திவ்யஸூக்திகளைக் கொண்டே இங்கு நிரூபிக்கப்படுகின்றது.



எம்பெருமானுடைய அவதார ப்ரயோஜநங்களைச் சொல்லிவருமடைவில் பகவத்கீதையில் “பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்” என்று சொல்லியிருப்பது ப்ரஸித்தம். நல்லார்களைக் காப்பதற்காகவும் தீயார்களைத் தொலைப்பதற்காகவும் எம்பெருமான் அவதரித்தானென்பது விளங்கிற்று. சாதுசனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்கு ஆதியஞ் சோதியுருவை அங்குவைத்திங்குப் பிறந்த வேத முதல்வன்” என்கிற ஸ்ரீஸூக்தியினாலும் இதை யறியலாம். திருவாய்மொழியின் அவதாரத்திற்கும் இவ்விரண்டு ப்ரயோஜனங்கள் உள்ளன வென்பது “நண்ணாவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த-பண்ணார் பாடலின்கவிகள் யானாய்த் தன்னைத் தான்பாடி” (10-7-5) என்கிற பாசுரத்தினால் விளங்கும். எம்பெருமானுடைய விரோதிகளான ஆஸுரப்ரக்ருதிகள் அழியவும் பகவத் [illegible]திபரான தேவப்ரக்ருதிகள் வாழவும் திருவாய்மொழி அவதரித்ததென்று ஆழ்வார் தாமே அருளிச்செய்துவைத்தார். அவ்விடத்திலே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;— ‘நண்ணாவசுரர் நலிவெய்த நல்லமரர் பொலிவெய்த வாய்த்தது திருவாய்மொழி தான் அவதரித்தது. ஸ்துத்யனுடைய அவதாரம் போலேயாயிற்று ஸ்துதியினுடைய அவதாரமும். *பரித்ராணாய ஸாதூநாம் * அகில ஜகத்பத்மபோதாய * என்னுமா போலே ” என்று.

இவ்விடத்தில் நம்பிள்ளை ஒரு இதிஹாஸமும் அருளிச் செய்கிறார். திருவரங்கம் பெரிய கோயிலில் க்ரிமிகண்ட சோழனென்கிற பாவி திருமதிளை இடித்துப் போட்டானாம்; அவனுக்குப்பிறகு அவனுடைய மகன், தன் தகப்பன் செய்த அதனைக்கேட்டு ‘ஐயோ! என் தகப்பனுக்கு இப்படியும் ஒரு அவிவேகம் உண்டாகுமோ? ஒரு மதிளை இடித்துப் போட்டுவிட்டதனால் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தம் குலைந்ததாய்விடுமோ? திருவாய்மொழி யென்றும் ஸ்ரீராமாயண மென்றும் இரண்டு வலிய மதிள்களை இவன் அசைக்கவும் முடியாதவனன்றோ!, என்று சொன்னானாம். ஆகவே திருவாய்மொழியானது எம்பெருமானுக்குப் பெரிய திருமதிள் போலே யிருந்து ஸாது பரித்ராணமும் துஷ்க்ருத்விநாசநமும் செய்யுமதென்னக் குறையில்லை.



இன்னமும், அஜ்ஞானத்தைப் போக்கி ஜ்ஞான பக்திகளைக் கொடுப்பதும் எம்பெருமானுடைய காரியமாகும். “மயர்வற மதிநல மருளினன்” என்கிற பாசுரத்தினால் இது விளங்கும். ‘மயர்வு அற’ என்பதனாலே அஜ்ஞானத்தைப் போக்குதலும், ‘மதிநலம் அருளினன்’ என்பதனாலே ஜ்ஞான பக்திகளைக் கொடுத்தலும் சொல்லிற்று. அஜ்ஞான நிவர்த்தகத்வம், ஜ்ஞான[illegible]த்வம், பக்தி ப்ரதத்வம் ஆகிற இம்மூன்றும் திருவாய்மொழிக்குமுண்டு. எங்ஙனே[illegible]னில், “காரிமாறன் சடகோபன் ஒலிபுகழாயிரத் திப்பத்து உள்ளத்தை மாசறுக்கும்[illegible] பாசுரத்தினால் அஜ்ஞான நிவர்த்தகத்வமும், “வண்சடகோபன் தெருள்கொள்ளச் [illegible]யிரம்” என்ற பாசுரத்தினால் ஜ்ஞான ப்ரதத்வமும், குருகூர்ச்சடகோ

பன் சொன்ன தூயவாயிரத்திப்பத்தால் பத்தராவர் துவளின்றியே" என்ற பாசுரத்தினுல் பக்தி ப்ரதத்வமும் திருவாய்மொழிக்கு அறியத்தக்கன.

எம்பெருமான் நம்மைத் தனக்கு அநந்யார்ஹ சேஷமாக அங்கீகரிப்பவன் என்பது "வெறித்துளப முடியானே! வினையேனை உனக்கடிமை அறக்கொண்டாய்" என்கிற பாசுரத்தினுல் விளங்கும். திருவாய்மொழியும் நம்மை எம்பெருமானுக்கு அநந்யார்ஹ சேஷமாக்குமென்னுமிடம் "தொண்டன் சடகோபன் தெரியச் சொன்ன வோராயிரத்துளிப்பத்தும் உரியதொண்டராக்கு முலகுண்டாற்கே." என்கிற பாசுரத்தினுல் விளங்கும்.

எம்பெருமான் ஸம்ஸாரவ்யாதிக்கு மருந்தாயிருப்பவன் என்னுமிடம் "அறிந்தனவெல்லாம் அரியை வணங்கி அறிந்தனர் நோய்களறுக்கும் மருந்தே" என்ற பாசுரத்தினுல் விளங்கும். திருவாய்மொழியும் ஸம்ஸாரிகஸகல துரிதங்களையும் உருமாய்ந்து போம்படி பண்ணுமென்னுமிடம் "தென்குருகூர்ச் சடகோபன் மிடைந்த சொல் தொடை ஆயிரத்துளிப்பத்து உடைந்து நோய்களை ஓடுவிக்குமே" என்ற பாசுரத்தினுல் விளங்கும்.

எம்பெருமான் பரமபதத்தை யளிப்பன் என்னுமிடம் "ஏற்றரும் வைகுந்தத்தை அருளும் நமக்கு — ஆற்றல்மிக்கான் பெரிய பரஞ்சோதி புக்கவரியே" என்ற பாசுரத்தினுல் விளங்கும். திருவாய்மொழியும் பரமபதப்ராப்தியைப் பண்ணிவைக்குமென்னுமிடம் "கோனை வண்குருகூர் வண்சடகோபன் சொன்னவாயிரத்துளிப்பத்தும் வானின் மீதேற்றியருள் செய்து" என்ற பாசுரத்தினுல் விளங்கும்.

எம்பெருமான் நம்மைத் திருவடிகளின் கீழ்ச் சேர்த்துக் கொள்ளுமென்னுமிடம் 'பெருந்துன்பம் வேரற நீக்கித் தன்தாளின் கீழ்ச்சேர்த்து அவன்செய்யும் சேமம்" என்ற பாசுரத்தினுல் விளங்கும். திருவாய்மொழியும் அவன் திருவடிகளின் கீழே சேர்த்து வைக்குமென்னுமிடம் "திருமாலாலருளப்பட்ட சடகோபன் சொல்லாயிரத்துளிப்பத்தால் அருளியடிக்கீழிருத்தும்" என்ற பாசுரத்தினுல் விளங்கும்.

எம்பெருமான் தன்னோடு அந்வயித்தவர்களுக்குத் தன்னுடைய அநுபவமாகிற நிரதிசயாநந்த யுக்தமான ப்ராப்யத்தைக்கொடுப்பன் என்னுமிடம் "தெளிவுற்று வீவின்றி நின்றவர்க்கு இன்பக்கதி செய்யும் தெளிவுற்ற கண்ணன்" என்கிற பாசுரத்தினுல் விளங்கும். திருவாய்மொழியும் தன்பால் அந்வயித்தார்க்கு பகவதநுபவ ஆனந்தத்தை யுண்டாக்குமென்னுமிடம் 'வண்குருகூர்ச் சடகோபன் இங்ஙனே சொன்னவோராயிரத்துளிப்பத்து எங்ஙனே சொல்லினுமின்பம் பயக்குமே" என்ற பாசுரத்தினுல் விளங்கும்.

எம்பெருமான் தன்னை யநுபவிக்க இழிந்தவர்களை த்ரவத்ரவ்யமாம்படி உருக்குமென்னுமிடம் "வடுபுக்கு எனதாவியை யுருக்கியுண்டிடுகின்ற நின்றன்னை" என்கிற பாசுரத்தினுல் விளங்கும். திருவாய்மொழியும் தன்னை யநுபவிக்க இழிந்தாரை நீர்ப்பண்டமாக உருக்குமென்னுமிடம் "தென்குருகூர்ச் சடகோபன் செல்லாயிரத்துள்ளிவை ஒன்பதோடொன்றுக்கும் மூவுலகுருகுமே" என்கிற பாசுரத்தினுலும் "தோற்றங்களாயிரத்துள் இவையு மொருபத்தும் வல்லார் ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகாநிற்பர் நீராயே" என்கிற பாசுரத்தினுலும் விளங்கும்.

ஆகவிப்படி பத்து ப்ரகாரங்களாலே எம்பெருமானோடு ஸாம்யத்தை யுடைத்தாகையாலே, வாச்யமான அந்த எம்பெருமானுடைய "பத்துடைய தோற்றம்" என்கிற பத்து அவதா

[illegible]லே "தோற்றங்களாயிரம்" என்கிற இதனுடைய பத்துப்பத்தான ஆவிர்ப்பாவமும்— என்று அறியத்தக்கது. எம்பெருமான் லோகரக்ஷணார்த்தமாக அவதரித்தது போலே திருவாய்மொழியும் லோகரக்ஷணார்த்தமாகவே அவதரித்ததென்றதாயிற்று. .... .... (48)

---

## 49. ரோமச மஹர்ஷியின் சரிதை.

ரோமசரென்பவர் சரீரமுழுவதும் கரடிபோல் அடர்ந்த ரோமங்களை யுடைய ஒரு மாமுனிவர். இவர் விண்ணுலகிற்சென்று விண்ணவர் கோனைத் தொழுதிறைஞ்சி யேத்துவதிற்காட்டிலும் இம்மண்ணுலகிலேயே நெடுங்காலம் வாழ்ந்திருந்து நெடுமாலைச் சிந்தை செய்தலாகிற பேரின்பம் பெறுதலில் மிக்க குதூஹலம் கொண்டார். "கோவிந்தற்கோர் குற்றேவல் இம்மைப் பிறவிசெய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவந்தானென்?" என்ற ஆண்டாளைப் போலே.

"வேதநூற் பிராயம் நூறு" என்னப்பட்ட ஆயுளில் த்ருப்தியற்றவராய் மிகவும் நீண்ட ஆயுள் பெற வேணுமென்று ஒரு புண்ணிய நதியின் கரையிலே இவர் தவம் புரிந்தார். *உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்தறியு மெம்பெருமான் இவருடைய அபிலாஷையை நோக்கி மிகவும் மகிழ்ந்து இவர் முன்னே வந்து ஸேவை தந்தருளி "உம்முடைய விருப்பத்தைக் கூசாதே வேண்டிக்கொள்ளும்" என்று சோதி வாய்திறந்து அருளிச் செய்தான். அது கேட்டு உவந்த மாமுனிவர் "பரந்தாமா! பரஞ்சோதி! பரம புருஷா! இவ்வுடம்போடே உன்னை வெகு காலம் வழிபட வேணுமென்று பேராசை கொண்டிருக்கிறேன் நான்; அனேகமாயிரம் ப்ரஹ்மாக்களுடைய ஆயுளை என்னொருவனுக்குக் கல்பித்தருளினால் மஹாப்ரஸாதமாகும்" என்று கைகூப்பி விண்ணப்பஞ்செய்ய எம்பெருமான் அப்படியே திருவுள்ளமுவந்து "முனிவரே! ப்ரஹ்மாவினுடைய ஆயுளின் அவதி உமக்குத் தெரிந்ததே; ஒரு பிரமன் காலஞ்சென்றால் உம்முடைய உடம்பினின்றும் ஒரு ரோமம் இற்று விழக்கடவது; இப்படி ஒவ்வொரு ப்ரஹ்மாவின் முடிவிலும் ஒவ்வொரு மயிராக இற்று விழுந்துவந்து 'இனி உம்முடைய உடம்பில் ஒரு ரோமமும் இல்லை' என்று சொல்லத்தக்க நிலைமை நேருமளவும் நீர் ஜீவித்திருந்து வழிபாடு செய்வீர்" என்று வரம் தந்தருளி மறைந்திட்டனன். அவர் காழிச்சீராம விண்ணகரம் [சீர்காழி] என்னும் க்ஷேத்திரத்தில் அவ்வண்ணமாகவே நெடுக ஜீவித்திருந்து வழிபாடு செய்தனர். இக்கதை மேற்குறித்த திருப்பதியின் பதிகத்தில் இரண்டாவது பாசுரத்தில் "நான்முகனுள் மிகைத்தருக்கை யிருக்கு வாய்மை-நலமிகுசீர் உரோமசனால் நவிற்றி" என்று திருமங்கையாழ்வாரால் அநுஸந்திக்கப்பட்டுள்ளது. இக்கதையைச் சிறிது வேறு வகையாகவும் சிலர் சொல்லக் கேட்டதுண்டு. வல்லார் ஆகரங் கண்டு விவரிக்கவேணும். ... .... ... ... (49)

---

## 50. மாரீசனுக்கு மதிப்பு.

ஸ்ரீ ராமாயணத்தில் பெருமாள் நாட்டைத்துறந்து காட்டுக் கெழுந்தருள்வதற்கு மூலகாரணம் மந்தரை என்று சொல்லப்படுவதுபோல, காட்டில் பிராட்டியைப்பிரிந்து படாத பாடுகளும் பட்டதற்கு மூலகாரணம் மாரீசனென்பது கதை வாயிலாக அறிந்த விஷயமாகும். "சுரிகுழற்கனிவாய்த் திருவினைப்பிரித்த கொடுமையிற் கடுவிசை யரக்கன்" என்று இராவணன் படுபாவியாக நிந்திக்கப்படுவதுபோல இந்த மாரீசனும் அவனுக்குத் துணைபுரிந்த காரணம்பற்றி மிகவும் நிந்திக்கத்தக்கவன், பிரதிகூலர்களில் தலைவனாகக் கருதத்தக்கவன் என்று பலர் நினைக்கக்கூடும்.

ஆனால் இவனது தன்மையை நன்கு ஆராய்ந்து பார்க்குமளவில் இவனைப் பிரதிகூலனாகக் கொள்ள நியாயமில்லையென்றும், அநுகூலனாகவே கொள்ள வடுக்குமென்றும் நன்மதியோர் கூறுவர். கேண்மின்:— சூர்ப்பணகை மூக்கறுப்புண்டு ஜனஸ்தானத்திலிருந்த தன் தமையனாகிய கரன் பக்கல் சென்று இச் செய்தியைச் சொல்லிப் புரண்டழுது அவனுக்குக் கோபத்தை உண்டாக்கினவளவில் அக்கரன் பதினாலாயிரம் சேனாதிபதிகளையும் சேனைகளையும் இராமபிரானோடு போர் செய்ய அனுப்ப, இராமன் அவர்களத்தனை பேரையும் தான் ஒருவனாகவே கொன்று வென்றிட்டு, பிறகு வந்த கரனையும் கொன்றுவிட்டு ஜனஸ்தானத்தைச் சூன்யமாக்கினபோது அங்கு இராமபாணத்துக்குத் தப்பிப் பிழைத்து ஒளிந்து ஓடிப்போன அகம்பனன் இலங்கைக்குச்சென்று, ஜனஸ்தானமடங்கலும் பாழ்பட்ட செய்தியையும் இராமன் ஒருவராலும் வெல்லமுடியாதவனென்பதையும் சொல்லி 'ஸீதையை அபஹரித்துக்கொண்டுவந்தால் அந்த வருத்தத்தினால் இராமன் முடிந்து விடக்கூடும்' என்று தெரிவிக்க, இராவணன் அவனது சொற்படியே ஸீதையைக் கொள்ளைகொள்ள உபாயமென்? என்று சிந்தித்து அங்கு நின்றும் புறப்பட்டு மாரீசனிருக்குமிடத்திற்கு வந்தான்.

வந்து, 'நீ எனக்கு ஒரு உதவி செய்யவேணும்' என்று சொல்லித் தன் கருத்தை வெளியிட்டபோது, மாரீசன் 'அப்பா! இராவணா! அந்த மஹாநுபாவனுடன் உனக்கு விரோதம் தகாது; இந்த இராமன் சிறு பிள்ளையாயிருக்கும்பொழுதே விச்வாமித்திர யாகத்தில் அவனுடைய அம்புக்கு இலக்காகி நான் பட்ட பாடு இன்னும் மறக்க முடியவில்லை. அத்திருநாமம் செவிப்படும் போதே என் உடல் நடுங்குகின்றது; இப்பேச்சை விட்டுவிடு; இதை நெஞ்சிலும் நினையாதே' என்று யுக்தமாக உபதேசிக்க, அதைக்கேட்டு இராவணன் இலங்கைக்குப் போய்விட்டான்; பிறகு சூர்ப்பணகை இலங்கைக்குச்சென்று, தான் மூக்கறுப்புண்டபடியையும் தாசரதிகளின் ஸௌந்தர்ய பராக்ரமாதி குணங்கள் எல்லையற்றிருக்கிறபடியையும் ஸீதையின் இருப்பையும் சொல்லி 'இராகவனை நீ எவ்விதத்திலாவது பங்கப்படுத்தாவிடில் நீ ஆண்பிள்ளையே அல்லை' என்று கூறி இராவணனை நிந்தித்துக் கீழே விழுந்து புரண்டு விழ, இராவணன் மறுபடியும் மாரீசனிடம் வந்து நயபயங்களினால் அவனைத் தன் சொல்வழிப் படுத்திக்கொண்டு அம்மாரீசனும் தானுமாய்ப் புறப்பட்டுவந்து தான் ஓர் இடத்தில் ஒளித்திருந்தான். மாரீசன் இராவணனுடைய வலிகட்டாயம் பொறுக்கமாட்டாமல் மனம் நொந்துகொண்டே உடன்பட்டு வந்தானே யன்றி இராமபிரானிடத்தில் கறுக் கொண்டு வந்தானல்லன்; பாபியான இவ்விராவணனுக்கு உடன்பட்டு நாம் காரியஞ் செய்யாவிடில் இவன் நம்மைக் கொலைசெய்யப்போகிறான்; இவனுக்கு உடன்பட்டுக் காரியம் செய்தோமாகில் இராமபிரான் நம்மைக் கொன்றுவிடப்போகிறார்; இப்பாவியின் கையில் நாம் கொலையுண்பதிற் காட்டிலும் அப்பரம புருஷன் கையிற் கொலையுண்பது நற்கதி நண்ணுதற்கு நேராகும்" என்றெண்ணித் தன் மரணத்தைத் திடமாக நிச்சயித்துக்கொண்டே வந்தானத்தனை. பிறகு மாரீசன் பொன்மானுருவெடுத்துக்கொண்டு ஸீதையின் பார்வையில் மேயத்தொடங்கி அக்காட்டில் இராகவனை நெடுந்தூரம் இழுத்துக்கொண்டுபோய் விட்டான். அப்பொழுது இராகவன் 'இவன் அரக்கன்' என்று தெளிந்து அம்புகளை அவன்மீது எறிந்தார். அதனால் அடியுண்ட மாரீசன் மானுருவை விட்டு நிஜ ரூபத்துடன் கீழே விழுந்து 'ஹா லக்ஷ்மணா! ஹா ஸீதே! கெட்டேன்' என்று இராகவனைப் போல் கூச்சலிட்டுக்கொண்டு மரணமடைந்தான்.

இங்கு நாம் ஆலோசிக்கவேண்டியதென்னவென்றால், இப்படி இவன் கூச்சலிட்டது இராவணனுக்கு உபகாரம் செய்யவேணுமென்கிற எண்ணத்தினாலா? அல்லது அபகாரம்

செய்யவேணுமென்கிற எண்ணத்தினாலா? என்று ஆராயவேண்டும். 'இராவணன்கையிற் கொலையுண்பதைவிட இராம பாணத்தாற் கொலையுண்டு முடிதல் நன்று' என்கிற எண்ணத்தோடுவந்த மாரீசனுக்கு இராவணன் திறத்தில் உபகாரம் செய்ய வேணுமென்கிற எண்ணமுண்டாக ப்ரஸக்தியில்லை; 'நாம் மாண்டொழிவது போல் அவனையும் மாண்டொழியச் செய்து விடவேண்டும்' என்ற எண்ணங்கொண்டே இராகவனைப்போல் கூச்சலிட்டான். மாரீசன் இப்படி கூச்சலிடாமல் வெறுமனே சென்றிருப்பானாகில் பிராட்டி லக்ஷ்மணனைப் பிரிய நேர்ந்திராது; இராவணன் பிராட்டியைக் கவர்ந்துகொண்டு போகவும் அது நிமித்தமாகத் தான் மாண்டு போகவும் நேர்ந்திராது. தேவர்களின் வேண்டுகோள் ஈடேறவும் வழியிராது. மரணகாலத்தில் மாரீசன் போட்ட கூச்சலே ராவணஸம்ஹாரத்திற்கு மூல காரணமாக நின்றமையால் ஸ்ரீ ராம விஷயத்திலே மாரீசன் உபகாரகனே யன்றி அபகாரகனல்லன் என்று நினைக்கத்தக்கது. "அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா" என்று நிலையிட்டவனான மாரீசன் பரம பாகவதனென்றே மதிக்கத்தக்கவன். ... (50)

---

## 51. மஹாகவியின் மூன்று சிறந்த ச்லோகங்கள்.

1. ஆபத்தக்ருத்ரிமஸடாஜடிலாம்ஸபித்தி:
ஆரோபிதோ ம்ருகபதே: பதவீம் யதி ச்வா,
மத்தேபகும்பதடபாடநலம்படஸ்ய
நாதம் கரிஷ்யதி கதம் ஹரிணாதிபஸ்ய?

(இதன் கருத்து.) உலகத்தில் சிங்கம் முதலிய உயர்ந்த ஜந்துக்களும் நாய் முதலிய ஹீந ஜந்துக்களும் பகவானுடைய ஸ்ருஷ்டியில் ஏற்பட்டிருக்கின்றன. ஒன்றினால் ஆகத்தக்க காரியம் மற்றொன்றினால் ஆகாது. சிங்கத்தின் உளைமயிர்களை நாய்க்கு ஏறிட்டு [அதாவது நாய்க்கு சிங்கக் கோலம் போட்டு] அந்த நாயை சிங்கம் வீற்றிருக்கவேண்டுமிடத்தில் உட்கார வைப்பதில் கஷ்டமில்லை; இதை எளிதாகச்செய்துவிடலாம். ஆனால் உண்மையான சிங்கம் செய்யக்கூடிய காரியத்தை அந்த நாய் செய்ய முடியுமா? என்பதுதான் ஆராயத்தக்கது. "மாரி மலைமுழைஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும் சீரிய சிங்க மறிவுற்றுத் தீவிழித்து, வேரிமயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப் போதரும்" என்கிற இயல்வு க்ருத்ரிம ஸிம்ஹமாகிய க்ராமஸிம்ஹத்திற்கு ஒரு நாளும் வாய்க்காது என்றபடி. ஒரு மஹாராஜ ஸபையில் ஆஸ்தான வித்வானாயிருந்த ஒரு மஹா பண்டிதனைத் தள்ளி அந்த ஸ்தானத்தில் ஒரு யதார்ஜ்தனை பண்டிதக்கோலம் செய்து பட்டுப் பீதாம்பரங்கள் போர்த்து உட்காரவைத்திட முடியுமானாலும் கம்பீரமாக வாய் திறந்தொன்று பேசமுடியுமோ? என்பது போன்ற பல விஷயங்களுக்கு இது அந்யாபதேசம்.

2. ஹேம்ந: கேதோ ந தாஹேந ச்சேதேந கஷணேந வா,
ஏததேவ மஹத் து:க்கம் யத் குஞ்ஜாஸமதோலநம்.

பொன்னைத் தீயிலிட்டுச் சுடுகிறோம்; உளியையிட்டு வெட்டுகிறோம்; உரைகல்லிலேயிட்டு கனக்கவுரைக்கிறோம்; இன்ன மெத்தனை ஹிம்ஸைகள் செய்யினும் அவற்றால் பொன் சிறிதும் வருந்தமாட்டாது. வருத்தமில்லை யென்பது மாத்திரமேயன்று; அந்த ஹிம்ஸைகளெல்லாம் தனக்குப் பரமபோக்யமே என்பது தோன்ற ஒளியை மிகுத்துக் காட்டுதலும் செய்யும். பொன்னைத் தீயிலிட்டுச் சுடும்போதும் உளியையிட்டு வெட்டும் போதும் உரைகல்லிலுரைக்கும்போதும் அதற்கு ஒளிமிகுதலைக் காண்கிறோமன்றோ. ஆனால்

அந்தப் பொன்னுக்கு ஒரு வருத்தம் மாத்திரம் சாலவுண்டு. அஃது என்னென்னில், 'மிக அற்பமானதொரு குன்றுமணியோடொக்க நம்மை நிறுப்பதே!' என்கிறவிதுவே அதற்கு மிக்க வருத்தமாம். தராசின் ஒருதட்டில் குன்றுமணியையும் மற்றொருதட்டில் பொன்னையு மிட்டு நிறுக்கக் காண்கிறோமன்றே, பொன் என்று போற்றப்படுகின்ற நமக்கு கடைகெட்ட குன்றுமணிதானு ஈடாகவேணும் என வருந்தி மிகவும் குன்றிப்போகாநின்றதாம்.

இதன் ஸ்வாபதேசார்த்தமாவது—பகவான் தாதனுப்பப் பெறுகை, தாம்பினால் கட்டுண்கை முதலானவற்றால் சிறிதும் வருத்தமுறான்; அவற்றால் மிக்க முகமலர்ச்சியும் பெற்றிடுவான். பாண்டவதூதன் என்றும் தாமோதரன் என்றும் சந்தோஷமான திருநாமம் வஹித்து விளங்கக் காண்கிறோம். * ஒத்தார் மிக்காரில்லாத மாமாயனாகிய தன்னை அதிக்ஷுத்ரவஸ்துக்களான இலைற்றோடே ஒப்பிடுகிறார்களே! என்பதுதான் துக்க ஹேதுவாம். "ஒட்டுரைத்திவ் வுலகுன்னைப் புகழ்வெல்லாம் பெரும்பாலும் பட்டுரையாய்ப் புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதீ!" என்றார் நம்மாழ்வாரும்.

3. ப்ரயத்ந: கலு கர்த்தவ்ய: மார்ஜாரஸ் தந்நிதர்சநம்.
ஜந்மப்ரப்ருதி கௌர் நாஸ்தி பய: பிபதி நித்யச:."

"முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" என்றபடி முயற்சி செய்துகொண்டேயிருந்தால் அவசியம் பலன் கிடைத்தே தீரும். இவ்விஷயத்திற்குப் பூனையே சான்றாகும். பூனையானது விலைகொடுத்துப் பசு வாங்குவதில்லை; புல் சுமையும் வாங்குவதில்லை. ஆனாலும் விடாமுயற்சியினால் அது பால் குடியாத நாளில்லை. ... ... ... (51)

---

## 52. நம் ஆசாரியர்களின் இரண்டு நல்வார்த்தைகள்.

நம்முடைய பூருவாசாரியர்கள் ஸகல சாஸ்த்ரப் புலவர்களான பரம ரஸிகர்கள். "கலைபயிலுங் மொழியாளர்" என்றபடி அவர்களது வார்த்தைகளெல்லாம் அரிய பெரிய சாஸ்த்ரார்த்தங்கள் பொதிந்து விளங்குவன. அவர்களுடைய நல்வார்த்தைகள் அருளிச்செயல்வியாக்யானங்களில் மலிந்துள்ளன. அவற்றுள் இரண்டு வார்த்தைகள் இங்கு விவரித்து வெளியிடப்படுகின்றன.

1. பட்டர் ஒரு நாள் உபந்யாஸத்தில் *பரிவதில் ஈசனைப் பாடி* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தில் "புரிவதுவும் புகைபூவே" என்ற விடத்தை யெடுத்துக் கொண்டு "இவ்விடத்தில் அகில்புகை யென்றாவது கருமுகைப்பூ என்றாவது விசேஷித்துச் சொல்லாமையாலே ஏதேனும் ஒரு புகையும் ஏதேனும் ஒரு பூவும் எம்பெருமானுக்கு அமையும்; செத்தையையிட்டுப் புகைக்கலாம்; கண்டகாலிப் பூவும் சூட்டலாம்" என்று ரஸமாக உபந்யஸித்தாராம். அதை நஞ்சீயர் கேட்டு, "ந கண்டகாரிகாபுஷ்பம் தேவாய விநிவேதயேத்" [கண்டகாலிப் பூவை எம்பெருமானுக்குச் சாத்தலாகாது] என்று சாஸ்த்ரம் மறுத்திருக்க, இப்படி அருளிச் செய்யலாமோ? என்று கேட்டாராம். அதற்கு பட்டர் அருளிச் செய்த ரஸோக்தி;— "சாஸ்த்ரம் மறுத்தது மெய்தான்; கண்டகாலிப்பூ எம்பெருமானுக்கு ஆகாதென்று மறுத்ததன்று. அடியார்கள் அப்பூவைப் பறித்தால் கையில் முள் பாயுமே! என்று பக்தர்கள் பக்கல் தயையினால் சாஸ்த்ரம் நிஷேதித்ததே யன்றி எம்பெருமானுக்கு ஆகாத பூ ஏதாவுமில்லை" என்றாம்.

ஃ திருவாய்மொழியில் (2—9—2) "ஞானக் கை தா" என்ற விடத்து ஈட்டில் "எம்பாருக்கு ஆண்டானருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது" என்றுள்ளது. இதன் விவரணம் வருமாறு:— முதலியாண்டான் ஒருகால் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருக்கையில் அவருடைய சிஷ்யரான வொரு ஸ்ரீ வைஷ்ணவர் கோயிலிலே வந்து எம்பார் ஸந்நிதியிலே கைங்கரியம் பண்ணிக் கொண்டிருந்தார். அப்போது ஒரு நாள் சில ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு எம்பார் திருவிலச்சினை ஸாதிக்கவிருக்கையில் இந்த ஸ்ரீ வைஷ்ணவர் தமக்கும் திருவிலச்சினை (சக்ராங்கனம்) ஸாதிக்கும்படி வேண்டினர். அப்போது எம்பார் 'உமக்கு விசேஷ ஸம்பந்த முண்டோ?' என்று அவரைக் கேட்க, 'தேவரீருடைய ஸம்பந்தமே ஸம்பந்தம்' என்று அவர் விண்ணப்பம் செய்தாராம். அவ்வளவிலே எம்பார் இவர் முதலியாண்டானுடைய ஸ்ரீபாதத்தவர் என்றறியாதே இவர்க்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பண்ணி இவரைக் கொண்டு கைங்கரியங்களுங் கொண்டெழுந்தருளியிரா நிற்கையில் முதலியாண்டானும் திரும்பிக் கோயிலிலே எழுந்தருள, அப்போது அந்த ஸ்ரீ வைஷ்ணவர் ஆசார்ய ப்ரேமத்தாலே ஆண்டானிடம் சென்று சேர, ஆண்டானும் முன்பு போலே இவரைக்கொண்டு வேண்டுங் காரியங்களைக் கொண்டருளி யிருந்தார். அப்போது எம்பார் விசாரித்து அந்த ஸ்ரீ வைஷ்ணவர் ஏற்கெனவே ஆண்டானுடைய சிஷ்யர் என்பதை யறிந்து, ஆண்டானிடம் எழுந்தருளி 'வெனக்க அபசாரப்பட்டேன். க்ஷமித்தருள வேணும்' என்றாராம். அப்போது ஆண்டான் எம்பாருடைய திருவுள்ளத்தில் க்லேசத்தையறிந்து எம்பாரை நோக்கி அருளிச்செய்த வார்த்தை:—

"ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டு பேர் கைகொடுத்தால் எடுக்குமவர்களுக்குமெளிதாய் ஏறுமவனுக்குமெளிதாயிருக்குமிறே. அப்படியே யாகிறது"—என்றார்.

இங்குக் கைகொடுப்பதாவது ஞானமளிப்பது. ஸம்ஸார ஸாகரத்தில் அழுந்தினவர்களுக்கு இரண்டு ஆசாரியர்கள் ஞானக்கை கொடுப்பது நல்லதே யன்றித் தீயதன்றே; நானும் கைகொடுத்து நீரும் கைகொடுத்தால் இதில் என்ன பிழை? எதுக்கு வருந்துகிறீர்; நன்மை செய்தீரே யொழியத் தீமை யொன்றும் செய்திலீரே" என்பதாக ஆண்டானுடைய திருவுள்ளம். ... ... ... ... (53)

---

## 53. வித்வான்கள் உகக்கும் ஹாஸ்யகதையொன்று.

ஒரு வித்வான் தம்முடைய பரமஸௌந்தரியான மகளுக்கு வரன் தேடிக் கொண்டிருந்தார். அவரும் அவருடை குமாரர்களும் இப்பெண்ணும் ஆக எல்லாரும் நன்கு ஸம்ஸ்க்ருதம் படித்தவர்களாதலால் நன்றாகப் படித்த வரன் வேணுமென்று தேடிக் கொண்டிருந்தார். ஒருவர் தம்முடைய குமாரனுக்கு நல்ல படிப்பு இருப்பதாகப் பொய் சொல்லி வஞ்சித்து விவாஹத்தை முடித்துக் கொண்டார். அந்த மணவாளப்பிள்ளை பாடசாலைக்குப் போய் வந்து கொண்டிருந்ததனால் மெய்யே படிப்பாளியென்று மாமனார் முதலானவர்களும் ப்ரமித்திருந்தார்கள். விவாஹமோ முடிந்துவிட்டது.

இப்படியிருக்கையில், ஸரஸ்வதீ பூஜையன்று முதல்நாள் ஜாமாதாவை மாமனார் தம் இல்லம் வரும்படி அழைத்தார். ஜாமாதாவும் தன் தகப்பனாரிடம் உத்தரவு பெறுறக் கொள்ளச் சென்றான். அப்போது தகப்பனார் 'பயலே! உனக்கோ படிப்பு ஒன்றும் பலிக்கவில்லை; உன்னை மஹாபண்டிதனாக நான் பொய் சொல்லி ஏதோ விவாஹத்தை முடித்துவைத்தேன்'

## 53. வித்வான்கள் உகக்கும் ஹாஸ்யகதையொன்று

உன் சாயம் வெளிப்படுவதற்கு இன்று ஸந்தர்ப்பம் வந்துவிட்டதே! வேறு பண்டிகை நாள்களாக இருந்தால் பாதகமில்லை; இப்போது ஸரஸ்வதி பூஜைக்காக உன்னை யழைக்கிறார்கள். அவர்களெல்லாரும் பெரிய பண்டிதர்களாகையால் அவர்களில்லத்தில் பலபல புஸ்தகங்களுண்டு; அவற்றை யெல்லாம் உன் மாமனாரும் மைத்துனர்மார்களும் எடுத்துப் பரிஷ்காரப்படுத்துவார்கள்; அந்த ஸமயத்தில் நீ அவர்களெதிரில் ஊமைபோல் உட்கார்ந்திருக்க வேண்டியதாகும்; உன்னுடைய சாயம் வெளிப்படுவதோடு நில்லாமல் என்னுடைய பொய்ம்மையும் வெளியாகிவிடுமே யென்று அஞ்சுகிறேன்' என்றார். அதற்கு அவன் ஒன்றும் பதில் சொல்லமாட்டாமல் தலை குனிந்து நின்றான்.

மறுபடியும் தகப்பனார், 'பயலே! நான் ஒரு உபாயம் சொல்லித் தருகிறேன்; நாளை காலை அவசியம் வருவதாக அவர்களுக்கு நீ பதில் சொல்லியனுப்பிவிடு; இன்றிரவு முழுவதும் ஸம்ஸ்க்ருதத்தில் நாலிரண்டு வார்த்தை உனக்கு வரும்படி நெட்டுருப் போட்டு வைக்கிறேன். அதை நீ காலைக்கு அங்கு உபயோகப் படுத்தினால் ஒருவாறு மானத்தோடு திரும்பி வரலாம்' என்றார். குமாரன் அப்படியே இசைந்தான்.

தகப்பனார் அன்றிரவு முழுவதும் மகனுக்குப் பாடம் பண்ணி வைத்தது என்னவென்றால்: உன் மாமனார் ஏதாவது ஒரு பெரிய புஸ்தகம் எடுத்தாரானால் அப்போது நீ 'கிம் இதம் புஸ்தகம்' என்று கேள்; அவர் இன்ன புஸ்தகமென்று பதில் சொல்லுவர்; அப்போது நீ "இதம் மயா படிதம்" என்று சொல்லு. மறுபடியும் அவர் வேறொரு பெரிய புஸ்தகமெடுக்கும்போது 'கோயம் ஸ்ரீகோச:' என்று கேள்; அவர் பதில் சொன்னவுடனே "ஏததபி மயா அதீதம்" என்று சொல்லு. என்றிப்படிச் சிலவார்த்தைகளை வெகு சிரமப்பட்டுக் கற்பித்து வைத்தார். அவற்றை அப்படியே [illegible] செய்துகொண்டு மறுநாள் காலை மாப்பிள்ளை மாமனாரகத்திற்குச் சென்று சேர்ந்ததாயிற்று. முன்னரியவெல்லாம் நெட்டுருப்போட்ட ஸம்ஸ்க்ருத வார்த்தைகளை உபயோகப்படுத்த ஸமயமும் வாய்த்து விட்டது.

ஸரஸ்வதி பூஜைக்கு ஆரம்பித்த மாமனார் ஒரு பெரிய ஓலைச் சுவடியை அவிழ்த்தார். 'கிம் இதம் புஸ்தகம்' (இது என்ன புத்தகம்?) என்று ஜாமாதா கேட்டார். அதற்கு மாமனார் 'அயம் தத்வஸித்தி பாஷ்ய ஸ்ரீகோச:' என்றார். உடனே மாப்பிள்ளை "இதம் மயா படிதம்" (இது நான் வாசித்திருக்கிறேன்) என்றான். அது கேட்டு எல்லோரும் ஸந்தோஷித்தார்கள். மாமனார் மறுபடியும் ஒரு பெரிய புஸ்தகம் அவிழ்த்தார். "கோயம் ஸ்ரீகோச:" என்றான் ஜாமாதா. "சாபர பாஷ்யமிதம்" என்றார் மாமனார். "ஏததபி மயா அதீதம்" (இதுவும் நான் வாசித்திருக்கிறேன்) என்றான் ஜாமாதா. அது கேட்டும் எல்லாரும் மஹாநந்தமடைந்தார்கள்.

மாமனார் வேறொரு பெரிய புஸ்தகம் அவிழ்த்தார். அஃது என்னவென்றால், இனிமேல் எழுதுவதற்காக ஏடுகளைச் சேமித்து வைத்திருக்கிற எழுதாத புஸ்தகம். 'கோயம் ஸ்ரீகோச:' என்றார் ஜாமாதா. 'அலேகக்ரந்த:' (எழுதாத ஏடு) என்றார் மாமனார். 'இதமபி மயா படிதம்' (இதுவும் நான் வாசித்திருக்கிறேன்) என்றார் ஜாமாதா. அது கேட்டவுடனே அவர்களுக்கு துக்கம் தாங்க முடியாததாயிற்று. இந்த ஜாமாதாவின் மனைவியும் நன்றாகப் படித்தவளாகையாலே இப்படிப்பட்ட உலக்கைக்கொழுந்து புத்திசாலியான பர்த்தா நமக்கு வாய்த்தானே! என்று மிக்க சோகம் பொறுக்ககில்லாமல் 'முஸலகிஸலயமே!' என்று

சொல்லி அவன் தலையில் ஒரு குட்டுக் குட்டிச் சென்றுளாம். அவன் அந்த அவமானம் பொறுக்கமாட்டாமல் உடனே எழுந்து வெளியேறி காசிக்குச் சென்று வெகு ஆஸ்தையுடன் வாஸித்து சதுச்சாஸ்த்ர பண்டிதனாய் மீண்டுவந்து முஸலகிஸலயம் என்கிற ஒரு க்ரந்தத்தை இயற்றினனும். இந்த க்ரந்தம் இப்போதும் கிடைக்கிறதென்கிறார்கள்.

சென்னை ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபையில் அச்சிட்ட (தெலுங்குலிபி) ஸம்ப்ரதாய அக்ராதியில் 'அழகிய மணவாளச் சீயர்' என்ற திருநாமத்தின் விவரணத்தில் இந்த முஸலகிஸலயக்ரந்த நாம நிர்தேசமும் வேறொரு கதையும் காண்கிறது. அது ஸம்ப்ரதாய கோஷ்டியில் ஏற்பட்ட கதையென்பர். ... .... .... .. (53)

## 54. ஆண்டாள் திருநாமமும் பெண்ணைப் பெயரும்.

ஆண்டாள் என்றும் சூடிக்கொடுத்த நாச்சியார் என்றும் திருநாமங்கள் வழங்கிவந்தாலும் இவளுக்கு இயற்கைத் திருநாமம் கோதை என்பதேயாகும். திருப்பாவையின் முடிவில் "கோதை சொன்ன" என்றது போலவே நாச்சியார் திருமொழியிலும் ஒவ்வொரு பதிகத்தின் முடிவிலும் கோதை என்கிற இத் திருநாமமே பணிக்கப்பட்டுள்ளது. ஆகவே ஆண்டாள் விபவத்தில் கோதையென்கிற சொல்லினாலேயே வழங்கப்பெற்று வந்தாளென்று நிச்சயிக்கக் குறையில்லை.

இச்சொல் தமிழ்மொழியே யன்றி வடமொழியன்று. தமிழில் பூமாலைக்கும் கூந்தலுக்கும் வாசகமானது கோதை யென்னுஞ் சொல். பூமாலைபோல் இனியள் என்பது பற்றியோ, அல்லது அழகிய கூந்தலையுடையாள் என்பது பற்றியோ இத் திருநாமம் ஆண்டாளுக்கு இடப்பட்டதாயிற்று. இவ்வாண்டாளை ஸம்ஸ்க்ருதத்தில் வ்யபதேசிக்கத் திருவுள்ளம் பற்றிய நம் ஆசாரியர்கள் கோதா என்று வ்யபதேசித்தருளினர்கள். *நீளா துங்க ஸ்தநகிரிதடீ த்யாதியான தனியனில் 'கோதா தஸ்யை' என்றுள்ளது. இது பட்டர் அருளிச்செய்த தனியன் என்பது ப்ரஸித்தம். ஆண்டாளை கோதா என்கிற வடசொல்லால் வ்யபதேசிக்க ஆரம்பித்தவர் பட்டரே யென்று தெரியவருகின்றது. பட்டருக்கு முன்னமே இங்ஙனம் வ்யபதேசித்தவர் உண்டு என்றாலும் இதில் விவாதமில்லை.

கோதா என்கிற ஸம்ஸ்க்ருத திருநாமமே முதலில் இருந்ததென்றும் அதுவே தமிழில் கோதையெனத் திரிந்ததென்றும் இதுகாறும் ஒருவரும் கூற முற்படவில்லை. அங்ஙனம் சிலர் கூற முற்பட்டால் அஃது ஆதாரமற்றதேயாகும்.

கோதை என்கிற தமிழ்த் திருநாமத்தை உள்ளபடி ஸம்ஸ்க்ருதப்படுத்தவேணுமானல் அந்தத் தமிழ்ச் சொல்லின் பொருளைக் கொண்டதொரு வடசொல்லையே பிரயோகிக்க வேணும். தாமரை என்று ஒருத்திக்குப் பெயர் இருக்குமானல் அதை ஸம்ஸ்க்ருதத்தில் வ்யபதேசிக்க வேண்டும்போது தாமரா என்று ஒருவரும் சொல்லார். அது ஒழுங்கான சொல்லன்று. பத்மா என்றோ கமலா என்றோ சொல்லுவர்கள். ஏனெனில், அவையே ஸம்ஸ்க்ருத ரீதிக்குப் பொருந்தின பதங்களாதலின்.

சோலை என்கிற தமிழ்ச்சொல்லை ஸம்ஸக்ருதப்படுத்த வேணுமானல் (சோலா) என்னலாமோ? வநம், காநநம் என்றே சொல்லுவர்கள். தலையை (தலா) என்றும்

குலையை (குலா) என்றும் சொல்லலாகாது என்பது எல்லார்க்கும் தெரிந்ததே. இவை எப்படி விபரீதமோ, அப்படியே கோதையை (கோதா) என்று சொல்லலாகாதென்பதும் விபரீதம். ஆதலால் ஆசிரியர் கோதா என்னாமல் கோதா என்றது வெகு சாதுரியம். இப்படிப்பட்ட சாதுரியம் பட்டருக்கே அஸாதாரணம் என்பதை யறிந்தே நாம் கோதா என்கிற சொல்லை பட்டரே முதன் முதலாக ப்ரயோகித்தருளினவர் என்னத் துணிந்தோம். கோதை என்கிற தமிழ்த் திருநாமத்தையே ஸம்ஸ்க்ருதத்திலும் ஒருவாறு அநுஸந்திக்கபடியாக இருக்கவேணுமென்றும், அதற்கு ஸம்ஸ்க்ருத பாஷாரீதியிலும் ஒரு அர்த்தம் இருக்கவேணுமென்றும் திருவுள்ளம்பற்றி அப்பேராசிரியர் வெகு சாதுரியமாக கோதா என்ற சொல்லை இட்டனர்.

கோ என்கிற வடசொல்லுக்குப் பலபொருள்கள் உண்டு. பூமி, பசு, எருது, கிரணம், வாக்கு என்றிப்படி பலபொருள்கள் நிகண்டுகளில் கூறப்பட்டிருக்கின்றன. "யத்கோ ஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம்" என்று ஸுப்ரஸித்தமான நம்மாழ்வார் விஷயமான ச்லோகத்தில் கோ சப்தத்திற்கு வாக்கு என்கிற பொருளிலும் பிரயோகம் காணத்தக்கது. "ஆண்டாளரங்கற்குப் பன்னு திருப்பாவைப் பல்பதியம் இன்னிசையால் பாடிக்கொடுத்தாள் நற் பாமாலை, பூமாலை சூடிக்கொடுத்தாள்" என்கிறபடியே பாமாலை பாடிக்கொடுத்தவள் என்னும் பொருள்படவே கோதா என்கிற ஸம்ஸ்க்ருதத் திருநாமம் அமைக்கப்பட்டிருக்கின்றது. இங்ஙனமே முன்புள்ளாரும் வியாக்கியானம் செய்துள்ளார்கள்.

இங்ஙனே பொருள்படுவதற்கு இடமில்லாதபடி கோதை யென்னுஞ் சொல்லை கோதா என்று ஸம்ஸ்க்ருதப்படுத்தி யிருந்தால் அதை நாம் அவ்யுத்பந்நக்ருதமென்றே உபேக்ஷிக்க நேரும். சீதை மணாளனை ஸீதாபதி என்பதுபோல, பின்னை மணாளனை நீளாபதி என்பாரில்லையே பெரியாழ்வார் திருமகளுக்குக் கோதையென்கிற திருநாமம் போல, கும்பர் திருமகளுக்குப் பின்னை யென்கிற திருநாமமுள்ளது. பின்னை மணாளனென்று ஆழ்வார்கள் வாய்வெருவுகின்றார்கள். கோதையை கோதா என்றதுபோல பின்னையை பிந்நா என்றோ ஸிந்நா என்றோ யாரேனும் வ்யபதேசித்திருக்கிறார்களா? இல்லை. ஏன் அப்படி வ்யபதேசிக்கவில்லை யென்றால் அப்படிப்பட்ட ஸம்ஸ்க்ருத வ்யபதேசத்திற்கு ஸம்ஸ்க்ருத பாஷாரீதியில் இசைந்த பொருள் பொருத்தமாகத் தேறாததுவே காரணமாகும். ஆக இவ்வளவு நிரூபணங்களால் தேறினது என்னவென்றால், ஒரு தமிழ்ச்சொல்லை அப்படியே ஸம்ஸ்க்ருதப்படுத்தவேணுமானால் ஸம்ஸ்க்ருத பாஷாரீதியிலும் ஒரு பொருள்படுவதற்கு ஔசித்யமிருந்தாலல்லது ஸம்ஸ்க்ருதப் படுத்தலாகாது என்பதுவே தேறுகின்றது.

இதற்குமேல் ஒரு விசேஷத்தை விளம்புகிறோம். திருக்கோவலூரில் பிநாகிநீநதி பெருகுகின்றது. பிநாகிநீ என்கிற வடசொல்லைத் தமிழர்கள் பெண்ணையென வழங்குகிறார்கள். திருமங்கையாழ்வாரும் திருக்கோவலூர்ப்பதிகத்தில் "பெண்ணைத்தென்பால் .............திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே" என்றருளிச்செய்கிறார். இந்த நதியை ஸம்ஸ்க்ருதத்தில் பேசவேணுமானால் பிநாகிநீ யென்றிட்டுப் பேசவேணுமேயொழிய வேறு விதமாகப் பேச ஔசித்யமில்லை. அந்தத்திருக்கோவலூரெம்பெருமானைப் பற்றி தேசிகனருளிச் செய்த தேஹளீசஸ்துதியில் 7, 15 ஆம் ச்லோகங்களில் பண்ணா என்று ஸம்ஸ்க்ருதபதமாக ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. இது எங்ஙனே பொருந்துமென்று விமர்சிக்க ப்ராப்தமாகிறது. முன்னடி ஒரு விஷயத்தைத் திடமாக நெஞ்சிற் கொள்ள வேணும். அதாவது, ஸம்ஸ்க்ருதத்தில் ஆகாராந்தமாக இருக்கிற பதம் தமிழில் "ஆவீறு

ஐயும்" என்கிற நன்னூற் சூத்திரத்தின்படி ஐகாராந்தமாகுமேயொழிய, தமிழில் ஐகாராந்தமான சொல் ஸம்ஸ்க்ருதத்தில் ஆகாராந்தமாகிறதென்பது அஸம்பாவிதம். ரமா, ஸரமா, பாமா இத்யாதிகளான ஆகாராந்த ஸம்ஸ்க்ருத பதங்களைத் தமிழில் ரமை, ஸரமை, பாமை என்று ஐகாராந்தமாக ப்ரயோகிக்கலாமே தவிர, நங்கை, மங்கை, தங்கை என்று ஐகாராந்தமான தமிழ்ச்சொற்களை நங்கா, மங்கா, தங்கா என்று ஸம்ஸ்க்ருதமாக்கி ப்ரயோகிப்பதென்பது இவ்வுலகில் நடையாடுவதன்று. புரோஹிதர்கள் விவாஹாதி காலங்களில் அநுக்ரஹம் சொல்லும்போது "அலமேலுமங்கா ஸமேத: ஸ்ரீ ஸ்ரீநிவாஸ:" என்று சொல்வர்கள்; அப்போது ஸதஸ்ஸில் வீற்றிருக்கும் வித்வான்கள் முகம் சுளிப்பர்களென்பது வித்வத்கோஷ்டியில் ப்ரஸித்தம். இப்படிப்பட்ட அஸம்பத்த ஸம்ஸ்க்ருதங்கள் கசடறக் கற்ற கலைவல்லபர்களிடத்தில் தலைகாட்டமாட்டா. பெண்ணை என்கிற பெயரை அப்படியே ஸம்ஸ்க்ருதத்தில் பிரயோகிக்க நினைத்தால் "பெண்ணை ஸமாக்ய" என்றோ, "பெண்ணை நாமக" என்றோ இவ்விதமாக ப்ரயோகிக்கலாமேயல்லது பண்ணு என்று பிரயோகிக்க சாஸ்த்ரஸரணியில் சிறிதும் ஔசித்யம் கிடையாது. அப்படியிருக்க, தேசிகன் (பண்ணு) என்று எங்ஙனம் ப்ரயோகித்தருளினரென்று ஆராய ப்ராப்தமாகிறது. குடந்தையை 'குடந்தா' என்றும், அழுந்தையை அழுந்தா என்றும், அயிந்தையை அயிந்தா என்றுமிப்படி சிலர் வ்யவஹரித்தால் இதை ஸாதுவென்று கொள்வாருண்டோ? அப்படியே இதுவும் அஸாதுவென்னவேண்டி வருகிறது.

திருக்கோவலூரில் ஜ்ஞாநசீல வயோவ்ருத்தராயெழுந்தருளியிருந்த ஒரு ஸ்வாமி ஸாதிக்கக் கேட்டதாவது, தேஹளீசஸ்துதியில் பண்ணு என்கிற பாடம் அச்சுக்கூடமுண்டானபின்பு கண்ணில் பட்டதேயொழிய, பெரியோர்களெல்லாரும் (புண்யா) என்றுதான் அநுஸந்தித்து வந்தார்கள் — என்று. இதைக் கேட்ட க்ஷணத்தில் நமக்குண்டான ஆனந்தத்திற்கு அளவேயில்லை. பிநாகிநீ என்ற *வடசொல்லை ஆழ்வார் தமிழ்நெறிக்குச்சேர பெண்ணையாக்கினர்; அச்சொல்லை ஆசார்யர் ஸம்ஸ்க்ருத ஸரணிக்குச் சேர புண்யா என்றாக்கினர் என்பது தத்துவம். வையாகரண கோஷ்டியில் "ஏகதேசவிக்ருதமநந்யவத்பவதி —ஏகதேசவிக்ருதம் அநந்யவத் பவதி" என்றொரு நியாயம் வழங்குவதுண்டு. அதன்படி பெண்ணை என்பதற்கும் புண்யா என்பதற்கும் ஒரு சேர்த்தியுண்டிறே. கோச்சி என்கிற நகரத்தை வடமொழியாளர் கோஸ்ரீ எனவும் பூணுபுரியை புண்யபுரீ எனவும் வழங்கிவருகிறார்கள். இங்ஙனே பலவுண்டு.

சென்னைமாநகரில் 'அர்பத்நட்' என்றொரு தனவான்கம்பெனியிருந்தது; அதனை வடமொழியாளர் அர்புதநாத: (அர்புதநாத:) என வழங்கிவந்தார்கள். இது வடமொழி ரீதியில் பொருத்தமான வொருபொருளைத் தருவதோடு மூலமான ஆங்கிலச் சொல்லுக்கு ப்ரத்யபிஜ்ஞாபகமு மாகிறது. 'கவர்னர்' என்கிற ஆங்கிலப்பெயரை ஒரு வித்வான் கௌரநர: (கௌரநர:) என்று ஸம்ஸ்க்ருதமாக்கினர்; இந்த ஸம்ஸ்க்ருத பதத்திற்கும் அந்த ஆங்கிலமொழிக்கும் தொடர்பு இல்லையாகிலும், ஸம்ஸ்க்ருதரீதிக்குச் சேர ஒரு அர்த்தம் தருவதும், கவர்னரை ப்ரத்யபிஜ்ஞாபனம் பண்ணுவதுமாயிருப்பதனால் இப்படிப்பட்ட அநுவாதங்களில் ஒரு சோத்யமும் ப்ராப்தமாகிறதில்லை. இவ்வண்ணமாக, பெண்ணையை புண்யா என்றது மிகப்பொருத்தம்.

இவ்விஷயத்தைக் கண்டவுடனே நிதிபெற்றோமென்று உகக்க பாக்யமற்றவர்கள் * வம்பவிழ்கோதை பொருட்டாப் பாசுரத்தின் ஸம்ஸ்க்ருதத்தில் நடந்த விபுல விசாரத்தில் அந்வயித்து பங்கப்பட்டவர்களுக்குத் தோள் தீண்டிகளாகவேண்டுமத்தனை. ... (54)

சாமர்த்தியத்தை உபயோகித்து ஊர் வம்புக்குப் பயந்த கதையின் அவலக்ஷணத்தைக் குறைத்துவிட்டான்" என்றெழுதியுள்ளார். இது அர்த்தமில்லாத வார்த்தை. இதிஹாஸ புராண கதைகளை நாடகங்களில் அமைக்கின்ற மஹாகவிகள் யாவருமே இடையிடையே தங்கள் கற்பனு சக்தியை உபயோகித்துக் கதையின் சில பாகங்களை மாற்றுவது வழக்கம். மஹாபாரதத்திலுள்ள சகுந்தலா—உபாக்கியானத்தைக் காளிதாஸர் சாகுந்தல நாடகமாக இயற்றுகையில் கதையின் போக்கை எவ்வளவு மாறுபடுத்தியிருக்கின்றாரென்று பார்க்க வேணும். முராரி கவி ஸ்ரீராமாயண கதையை அனர்க்கராகவ நாடகமாக இயற்றுகையில் கதையின் ரீதியை எவ்வளவு மாற்றியிருக்கிறாரென்று பார்க்கவேணும். உத்தரராம சரித மெழுதிய பவபூதியே மஹாவீர சரித நாடகமுமியற்றியுள்ளார். அதில் ஸ்ரீராமாயண கதையை எவ்வளவு மாற்றியிருக்கின்றாரென்று பார்க்கவேணும். இவ்வளவும் விமர்சித்தால் கதைப்போக்கை சிறிது மாற்றுவதென்பது நாடகங்களின் இயல்பு என்பது புலனாகும்.

மேலே குறித்த பெரியார் உத்தர ஸ்ரீராமாயணம் முழுவதையுமே கல்பிதமென்கிறாரா? அல்லது, லோகாபவாதத்தை ஆதரித்துப் பிராட்டியைக் காட்டுக்குப் போகவிட்ட கதையை மாத்திரம் கல்பித மென்கிறாரா? என்று தெரிந்துகொள்ளவேண்டியிருக்கிறது. அவர் "உத்தரகாண்டம் யாரோ எழுதி ராமாயணத்துடன் சேர்ந்தே போயிற்று" என்றெழுதியிருப்பதனால் உத்தர ஸ்ரீராமாயணம் முழுவதையுமே கல்பிதமென்கிறாரென்று நன்கு விளங்குகின்றது.

ஆழ்வார்களுள் ஸ்ரீராமாயண காலக்ஷேபமே வடிவெடுத்திருந்தவராகப் புகழ் பெற்ற ஸ்ரீ குலசேகராழ்வார் தமது பெருமாள் திருமொழியில் ஸ்ரீராமாயணஸாரமாக அருளிச் செய்துள்ள பத்தாம் பதிகத்தில் உத்தர ஸ்ரீ ராமாயண கதைகளையும் சேர்த்துப் பாடியிருக்கின்றாராதலால் "ஆழ்வார்களும் இதை யெடுத்துப் பாடாமல் நீக்கிவிட்டார்கள்" என்று அவர் எழுதியிருப்பது மறுக்கத்தக்கதாகும். ஸ்ரீமத் வேதாந்த தேசிகனும் ரகுவீரகத்யத்தில் உத்தரகாண்ட கதையுட்படவே உரைத்திருக்கின்றாரென்பதும் உணரத்தக்கது. அரசாணிபாலை வேங்கடாத்வரியின் ஸுப்ரஸித்தமான உத்தரசம்பூக்ரந்தமும் நோக்கத்தக்கது.

பிராட்டியை ஊராரின் வம்புப்பேச்சைக்கேட்டு இராமன் காட்டுக்கு அனுப்பிவிட்டானென்கிற கதை அஸம்பத்த மென்பது தவறு. ஆயிரத்து முந்நூறு வருஷங்களுக்கு முன்னே பவபூதியால் இந்த விருத்தாந்தம் கிரந்தமாக இயற்றப்பட்டிருக்கிறதென்பது நிர்விவாதம். கதையைச் சிறிது மாற்றியிருக்கிறானென்று இவர் எழுதினாலும், லோகாபவாதம் ஏற்பட்டது, அதை இராமன் ஆதரித்துப் பிராட்டியைக் காட்டுக்கனுப்பியது ஆகிய இக்கதை பவபூதியால் சிறிதும் மாற்றப்படவில்லை.

இராமன் பிராட்டியைக் காட்டுக்குப் போகவிட்டான் என்பதாகக் கதை யிருந்தாலும் உண்மை யுணர்ந்தவர்கள் பிராட்டி தானே, பிரிந்து எழுந்தருளினதாகவும், இங்ஙனே மூன்று தரம் பிராட்டி தானே பிரிந்ததாகவும், ஒவ்வொரு திருக்குணத்தை வெளியிடுதற்காக ஒவ்வொரு பிரிவு ஏற்றுக்கொள்ளப்பட்டதாகவும் நிரூபித்தருளுகிறார்கள்.

ஸ்ரீவசநபூஷண திவ்ய சாஸ்த்ரத்தில் "பிராட்டி முற்படப் பிரிந்தது தன்னுடைய க்ருபையை வெளியிடுகைக்காக; நடுவில் பிரிந்தது பாரதந்த்ரியத்தை வெளியிடுகைக்காக; அநந்தரம் பிரிந்தது அநந்யார்ஹத்வத்தை வெளியிடுகைக்காக" என்று ஆரம்பத்திலேயே அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. இங்கே வியாக்கியானத்தில்—"நடுவிற் பிரிவாவது—மீண்டு பெருமாளுடனே திருவயோத்யையிலே யெழுந்தருளித் திருவபிஷேகம் பண்ணி வாழ்ந்திருக்கிற காலத்திலே தனக்குண்டான வநவாஸ வாஞ்சையை விண்ணப்பஞ்செய்ய, அத்தைப்

பற்றப் போகவிடுவானைப்போலே லோகாபவாத பரிஹாரார்த்தமாகப் பெருமாள் காட்டிலே விட்டுப்போனது" என்று விவரணம் காட்டப்பட்டுள்ளது. உத்தர ஸ்ரீ ராமாயணச்லோகங்கள் பலவும் இங்கே உதாஹரிக்கப்பட்டிருக்கின்றன. முதலில் பஞ்சவடியில் இராவணன் பலாத்காரமாக அபஹரித்துக்கொண்டு போனானென்று கதைப்போக்கில் தெரியவந்தாலும் தத்துவம் அங்ஙனன்று. பிறகு பெருமாளே காட்டுக்குப் போகவிட்டாரென்றிருந்தாலும் தத்துவம் அதுவன்று—என்பதைப் பரமாசார்யர்கள் கண்டறிந்து வெளியிட்டருளுகிறார்கள்.

ஆக்ஷேபகர் இத்தகைய ஆசார்ய ஸ்ரீஸூக்திகளை ஒரு பொருளாக மதிப்பவரல்லர் என்பதை நாமறிவோம். எங்கெனவே கல்பிதமாகி ஏற்பட்டுக்கிடந்த கதையைக் கவிகளும் ஆசாரியர்களும் நம்பித் தழுவிவிட்டார்கள் என்று அவர் வாதிக்கவல்லவராதலால் கீழே நாம் காட்டிய பிரமாணங்கள் அவருடைய மனதைத் தெளிவிக்ககில்லா. நம்மைக்காட்டிலும் ஆயிரமடங்கு மேதாவிகளான பூருவர்கள் இக்கதையை அதிசங்கியாமல் ஆதரித்திருக்கிறார்கள் என்பதைப் பிராமாணிகவுலகுக்கு மூதலிக்கவே இவ்வளவும் நிரூபித்தோம்.

இனி அப்பெரியாருடைய வாதங்களை ஆராய்வோம். ஸ்ரீராமன் உலகத்துக்கு வழிகாட்ட அவதரித்த கடவுள் வண்ணானின் வம்புப்பேச்சைக் கேட்டுச் சீதையைக் காட்டுக்கு அனுப்பிவிடமாட்டான் என்பது ஒரு வாதம். இராமன் உலகத்துக்கு வழிகாட்ட அவதரித்தபடியினால்தான் இங்ஙனம் செய்ய நேர்ந்தது என்று திண்ணமாகத் தெரிந்துகொள்ள வேண்டும். எப்படிப்பட்டவரும் லோகாபவாதத்திற்கு அஞ்சியே வர்த்திக்கவேணுமென்று வழிகாட்டினபடி.

"சீதையை அரும்பாடுபட்டு இலங்கையிலிருந்து மீட்டுக்கொண்டு வந்தபின்" என்றதும் ஏலாது. இராமன் அரும்பாடு பட்டதாக நினைப்பது கேவலம் கதைப்போக்கில் மாத்திரமே கண்செலுத்துவார்க்கு உற்றது. "பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தானை" என்று அவலீலையாகப் பேசினாள் ஆண்டாள். "ஸேதுபந்த முகா: க்ரீடாஸ் தவாடம்பரம்" என்றார் கூரத்தாழ்வான்.

"ஸம்க்ஷேப ராமாயணத்தில் உத்தரராம சரிதை இல்லாமையால் இது கல்பிதம்" என்கிற வாதமும் பொருந்தாது. ஸம்க்ஷேப ராமாயணத்தில் பாலகாண்ட கதை சிறிதும் தொடப்படவில்லை என்பது நிர்விவாதம். யுவராஜ பட்டாபிஷேக முயற்சி முதலாகவே நாரத முனிவரால் வான்மீகிக்கு உபதேசிக்கப்பட்டிருக்கின்றதென்பது வ்யக்தம். இது கொண்டு பாலகாண்டமும் கல்பிதமென்ன வேண்டிவரும்.

"இராமன் அரசாண்டு வரும்போது அந்நகரில் அற்பகுணமுள்ளவன் நாஸ்திகன் துஷ்டன் மருந்துக்குக் கூட ஒருவன் அகப்படமாட்டான் என்று மிகமிகச் சொல்லியிருப்பதற்கு முரணாக சீதையைப் பழிக்கும் ஜனங்களிருந்ததாக ஒப்புக்கொள்ளவே முடியாது" என்றதும் யுக்தமன்று. க்ருதயுகத்தில் தருமதேவதையானது நான்கு கால்களோடும் குறைவின்றி வாழ்ந்ததாகச் சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட காலத்திலும் அதர்மச் செயல்கள் பல நடந்தனவாகப் புராணங்கள் கூறுகின்றன. பெரும்பான்மையாகச் சொல்லப்படும் விஷயம் சிறுபான்மையை அழிக்ககில்லாததென்று அறியவேணும். 'ராமராஜ்யத்தில் இரப்பாளன் ஒருவன் கூட இல்லை; அனைவரும் உதாரர்களாகவே வாழ்ந்து வந்தார்கள்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இரப்பாளன் ஒருவன் கூட இல்லையானால் அந்த உதாரர்கள் தானம் பண்ணினது யார்க்கு? என்று கேட்டால் இப்பெரியார் என்ன விடையிறுப்பர்?

"அப்படி யாராவது பேசினாலும் அதை அந்த ராமன் ஏன் காதில் போட்டுக்கொண்டான்?" என்கிறார். இராமனையே நேரில் கண்டுதான் கேட்கவேணும். ஸ்யமந்தகமணி விஷயமாகக் கண்ணனையும் இங்ஙனே கேள்வி கேட்கலாம்.

இராமனைக் கைகேயி காட்டுக்குப் போகச் சொன்னாலும் அவள் பேச்சுக்கு உடன்பட்ட தந்தைதான் போகச் சொன்னாலும் இராமன் ஏன் காட்டுக்குப் போகவேண்டும்? முடிசூடுதற்காகச் சடங்குகள் பலவும் அனுட்டித்து ஆய்விட்டபடியால் இனி வனம் போக முடியாதென்று இராமன் ஏன் மறுக்கக் கூடாது? என்று பலர் கேட்பதுண்டு. அக் கேள்வியோடு கூடவே இக் கேள்வியும் கேட்கவேண்டியதே.

யுத்த காண்டத்தின் முடிவிலுள்ள அக்நி ப்ரவேச கதையும் கல்பிதமேயென்று காட்டுவதற்கும் இப்பெரியார் இறங்கியிருக்கின்றார். இவர் தம் புத்திக்குப் பொருந்தாத கதைகளையெல்லாம் கல்பிதமென்று கழித்துவிடப் பார்க்கிறார். இவருடைய புத்திக்குப் பொருந்தும் கதைகள் மற்றொரு மேதாவியின் புத்திக்குப் பொருந்தாமலிருக்கலாம். அவ்வண்ணமாக ஒவ்வொருவருடைய நிரூபணங்களையும் கேட்டே இனி நாம் புராணங்களை ஆதரிக்க வேண்டும் போலும்.

"இத்தகைய அநீதியான காரியத்தை இராமன் செய்தால் அனுமான் வெறுமனிருப்பாரா? லக்ஷ்மணன் பரதன் இவர்கள் தாம் சகித்திருப்பார்களா? சீதைக்காக முன்பு உயிர்துறந்த ஜடாயு மீண்டும் உயிரெழுந்து வந்து தடுத்திருக்க மாட்டாரா?" என்றிப்படிப் பட்ட வார்த்தைகளும் எழுதப்பட்டிருக்கின்றன. இவை ஸ்ரீராமாயணம் நடையாடுந் தேசத்தில் விளையக் கூடியனவல்ல; பஞ்சவடியில் பிராட்டிக்குக் காவலாக அமைந்திருந்த ஜடாயு இராவணன் வருகிற காலத்தில் எங்குச் சென்றார்? மாரீசனது மாயக்குரலைக் கேட்டுக் கலங்கின சீதை லக்ஷ்மணனைக் கடுஞ் சொற்களால் பொடிந்து துரத்தினதற்காக அந்த லக்ஷ்மணன் பர்ணசாலையை விட்டு வெளியேறினாலும் விளைவதறியக் கூடியவனாகையாலே பிராட்டியின் கட்டளைப்படி இராமனிடம் போவதுபோல் காட்டிவிட்டு ஒரு மூலையில் பதுங்கியிருந்து இராவணன் பிராட்டியைக் கவர்ந்து செல்லாதபடி காத்திருக்கலாகாதா? என்கிற பல பல கேள்விகளைக் கேட்பார் மலிந்திருக்குமிவ்வுலகில் இப்பெரியாருடைய கேள்விகள் வியப்பை விளைப்பனவல்லவென்று நிற்கின்றோம். வாலியை நோக்கி விடைபிறுத்த பெருமாள் "ஸூக்ஷ்ம: பரமதுர்ஜ்ஞேய: ஸதாம் தர்ம: ப்லவங்கம" என்றார். "தர்மஸ்ய தத்வம் நிஹிதம் குஹாயாம்" என்றார் தர்மபுத்திரர். நம்போல்வாருடைய சிற்றறிவுக்கு எட்டுமதன்று தருமநுட்பம். இப்போது இவ்வளவோடு நிற்போமாக. .... (55)

---

## 56. "மண்ணுளென்னைப்பெற்றாலென் செய்யா."

---

நம்மாழ்வாருடைய திருவாய்மொழியில் (7—1—6) *விண்ணுளார் பெருமாற்கடிமைசெய்வாரையும் செறும் ஐம்புலனிவை மண்ணுளென்னைப் பெற்றால் என்செய்யா" என்றருளிச்செய்திருக்குமொரு பாசுரத்தை ஏகதேசம் அநுபவிப்போமிங்கு.

[விண்ணுளார் பெருமாற்கு.] நம்மிற் காட்டில் எவ்வளவோ மேம்பட்டவர்கள் என்று ப்ரஸித்திபெற்றவர்களையும் நலியக்கடவ இந்திரியங்கள் என்னை என்னபாடு படுத்தா? என்கிறார். விண்ணுளாருடைய பெருமானுக்கு அடிமைசெய்வாரையும் செறும் என்றும் பொருள்கொள்ளலாம்; விண்ணுளார்—விண்ணுலகத்திலே யிருப்பவர்களாய்க் கொண்டு,

பெருமானுக்கு அடிமை செய்வாரையும் செறும் என்றும் பொருள் கொள்ளலாம். அடிமை செய்வார் என்பதற்கு—அடிமை செய்ய ருசியுடையார் என்றும், அடிமைசெய்து கொண்டிருப்பவர்கள் என்றும் பொருள் கொள்ளலாம். ஸ்வர்க்கலோக வாஸிகளான இந்திராதி தேவர்களைக் கொள்ளவுமாம்; பரமபத வாஸிகளான கருத்மான் முதலிய நித்யஸூரிகளைக் கொள்ளவுமாம். இருவகுப்பினர் விஷயமாகவும் இரண்டு இதிஹாஸங்களை ஆசாரியர்கள் எடுத்துக்காட்டி இவ்வர்த்தத்தை மூதலிக்கின்றார்கள்.



நரகாஸுரனென்பவன் ப்ராக்ஜோதிஷமென்னும் பட்டணத்திலிருந்துகொண்டு ஸகல ப்ராணிகளையும் நலிந்து தேவஸித்த கந்தர்வாதிகளுடைய கன்னிகைகளையும் பற்பலரைப் பலாத்காரமாய் அபஹரித்துக் கொண்டுபோய்த் தான் மணம் புணர்வதாகக் கருதித் தன் மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும் மந்தரகிரி சிகரமான ரத்ன பருவதத்தையும் தேவமாதாவான அதிதி தேவியின் குண்டலங்களையும் கவர்ந்துபோனதுமன்றி இந்திரனுடைய ஐராவத யானையையும் அடித்துக் கொண்டுபோகச் சமயம் பார்த்திருக்க, அஞ்சி வந்து பணிந்து முறையிட்ட இந்திரன் வேண்டுகோளால் கண்ணபிரான் கருடனை வரவழைத்து ஸத்யபாமையுடனே தான் கருடன் மேலேறி அந்நகரத்தையடைந்து போர்செய்து நரகனைக்கொன்று, அவன் பல திசைகளிலிருந்து கொண்டுவந்து சிறைப்படுத்தியிருந்த பதினாயிரத்தொருநூறு கன்னிகைகளையும் ஆட்கொண்டு, நரகனால் முன்பு கவரப்பட்ட (இந்திரமாதாவான அதிதி தேவியின்) குண்டலங்களை அவளிடம் கொடுக்கும் பொருட்டு ஸத்யபாமையுடனே கருடன் தோள்மேல் ஏறிக்கொண்டு தேவலோகத்துக்குச் செல்ல, அங்கு இந்திராணி ஸத்யபாமைக்கு ஸகல உபசாரங்களைச் செய்தும் தேவர்க்கே உரிய பாரிஜாத புஷ்பம் மானிடப்பெண்ணாகிய இவளுக்குத் தகாதென்று ஸமர்ப்பிக்கவில்லையாதலின், அதனைக்கண்டு பாமை விருப்புற்றவளாய் நாதனை நோக்கி 'பிராணநாதனே! இந்தப் பாரிஜாத தருவை த்வாரகைக்குக் கொண்டுபோக வேண்டும்' என்றதைக் கண்ணபிரான் திருச்செவிசாத்தி உடனே அந்த வ்ருக்ஷத்தை வேரோடு பெயர்த்துக் கருடன் தோளின்மேல் வைத்தருளி த்வாரகைக்குக் கொண்டுபோக, அப்பொழுது இந்திராணி தூண்டிவிட்டதனால் இந்திரன் தேவஸைன்யங்களுடனே வந்து மறித்துப் போர்செய்தான்; கண்ணபிரான் அவனை ஸகலஸைன்யங்களுடன் பங்கப்படுத்திப் பின்பு அம்மரத்தைக் கொணர்ந்து ஸத்யபாமையின் வீட்டுப் புழைக்கடைத் தோட்டத்தில் நாட்டியருளினன் என்கிற மேல்கதையிருக்கட்டும்; தனக்கு மஹோபகாரம் செய்தருளின பகவான் திறத்திலே இந்திரன் த்ரோஹியானானென்பது இவ்வரலாற்றினின்று அறியத்தக்கது. "விண்ணுளாரையும் ஐம்புலன் செறார்" என்னக் கட்டுண்டோ?

ஈட்டில் மற்றொரு கதையை எடுத்தருளிச் செய்கிறார்—அதாவது; "ஸுமுகனென்கிற ஸர்ப்பவிசேஷம் திருவடிகளிலே சென்று கிட்ட, பெரிய திருவடி ஓடிச்சென்று 'எனக்கு ஆமிஷமாயிருக்கிற இத்தைக் கைக்கொண்டு நோக்குவதே!' என்று வெறுத்து 'தேவரீரையும் நாய்ச்சிமாரையும் நெடுங்காலம் வஹித்துக்கொண்டு திரிந்தேன், நான் என் பெற்றேன்' என்றானிறே. இதிறே ஸம்ஸாரஸ்வபாவமிருக்கும்படி."

இங்கு அறியவேண்டிய கதையாவது—தேவேந்திரனுக்கு நண்பனும் மந்திரியும் ஸாரதியுமான மாதலியானவன் அழகினும் குணத்திலும் மிகச் சிறந்த தன் புதல்வியான குணகேசியென்னும் கன்னிகைக்குத் தக்க வரனைத் தேடுபவனாய்ப் புறப்பட்டு வழியில் நாரத

முனிவரைச் சந்தித்துத் துணையாகக் கொண்டு பலவுலகங்களிற் சென்று பார்த்துத் தக்க வரனைக் காணுமல் பாதாள லோகத்தில் வாஸுகியிருல் ஆளப்படுகின்ற போகவதி யென்னுஞ் சிறந்த நகரத்தை யடைந்து அங்கேயிருக்கின்ற அனேக குமாரர்களைப் பார்க்கின்ற பொழுது ஸுமுகனென்னும் நாககுமாரனை நோக்கி அவனுடைய ரூபலாவண்யங்களிலீடுபட்டு அவனுக்குத் தன் மகளைக் கொடுக்கக் கருதி அவனது பாட்டனுரைக் கண்டுபேச, அவர் மகிழ்ச்சியோடு துயரமுங் கொண்டவராய் 'இவனது தந்தையைக் கருடன் பக்ஷித்து இந்த ஸுமுகனையும் ஒரு மாதத்திற்குள் பக்ஷிப்பேனென்று சொல்லியிருக்கின்ருனதலால் இவனுக்கு மணஞ்செய்தல் ஏற்றதன்று' என்று தெரிவித்தார். அதுகேட்ட மாதலி 'என்னுல் மருமகனுக வரிக்கப்பட்ட உனது பௌத்திரன் எங்களுடன் வந்து தேவேந்திரனைக் காண்பனுயின் அவனுக்கு ஆயுளைத் தந்து கருடனைத் தடுக்க முயல்வேன்' என்று சொல்லி ஸுமுகனை யழைத்துக்கொண்டு இந்திரனிடஞ் சென்றுசேர, அங்கு இந்திரனுடனே உபேந்திரமூர்த்தியான திருமாலும் வீற்றிருக்கையில், நிகழ்ந்த செய்திகளையெல்லாம் நாரதமுனிவர் சொல்லக்கேட்ட திருமால் இந்திரனை நோக்கி 'இவனுக்கு அமிருதத்தைக் கொடுக்கலாம்; அதனுல் இவர்கள் இஷ்டஸித்தி யடைந்தவராவர்' என்று சொல்லியருள, இந்திரன் கருடனது பராக்கிரமத்தை ஆலோசித்துத் திருமாலை நோக்கி 'தேவரீரே அவனுக்கு அமுதத்தையும் ஆயுளையும் தந்தருள்க' என்றதற்கு, திருமால் 'ஸகல லோகாதிபதியான நீ கொடுப்பதே போதும்; அதனை மாற்றுபவர் யார்?' என்று கூற, பிறகு இந்திரன் ஸுமுகனுக்கு அமுதமுண்பியாமல் நீண்ட ஆயுளை வரமளிக்க, உடனே மாதலி ஸுமுகனுக்குத் தன்மகளை மணம் புரிவித்தான். இச் செய்தியைக் கேள்வியுற்ற கருடன் கோபங்கொண்டு இந்திரனேடு மாறுபட்டு, தனது இரையை அவன் தடுத்து விட்டதற்காகப் பலபல நிஷ்டுர வார்த்தைகள் கூறுகையில், ஸுமுகன் தான் நீண்ட ஆயுளை வரம் பெற்றிருந்தாலும் கருடனுடைய கறுவுதலைக்கண்டு அஞ்சிப் பாம்புவடிவாய்த் திருமாலினருகிற் சேர்ந்து அப்பெருமானது கட்டிலின் காலைக்கட்டிக்கொண்டு சரண்புக, பின்பு கருடன் திருமாலை நோக்கி 'ஸகல தேவர்களினுள்ளும் மஹா பலசாலியான வுன்னைச் சிறிதும் சிரமமின்றி இறகு முனையாற் சுமக்கின்ற என்னினும் வலிமையுடையார் யார்? இதனைச் சற்று ஆலோசித்துப்பார்' என்று செருக்கிப் பேச, அக்கடுஞ் சொற் கேட்ட திருமால் கருடனை நோக்கி 'மிகவும் துர்ப்பலனுன நீ உன்னைத் தானே மஹா பலசாலியாக எண்ணி எமது முன்னிலையில் தற்புகழ்ச்சி செய்து கொண்டது போதும்; மூவுலகமும் எனது உடம்பை வஹிக்க முடியாவே; யானே எனது சக்தியால் என்னை வஹித்துக் கொண்டு உன்னையும் வஹிக்கின்றேன். எனது இந்த வலக்கை யொன்றை மாத்திரமாவது நீ தாங்கவல்லையாகில் உனது செருக்குமொழி பயன் பட்டதாகும்' என்று சொல்லிக் கருடனது தோளில் தனது வலக்கையை வைத்த மாத்திரத்தில் அவன் அதன் அதிபாரத்தைத் தாங்க மாட்டாமல் வருந்தி வலிமையொழிந்து மூர்ச்சித்துவிழுந்து, பின்னர் அரிதில் தெளிந்து திருமாலை வணங்கிப் பலவாறு பணிமொழி கூறி 'என் பிழையைப் பொறுத்தருள வேண்டும்' என்று பிரார்த்திக்க, திருமால் திருவுள்ளமிரங்கி அவனுக்கு ஸமாதானங்கூறித் தனது திருவடியின் பெருவிரலால் ஸுமுகனை யெடுத்துக் கருடன் தோளிலிட்டு 'இவனை நீ உனது அடைக்கலமாகக் கொண்டு பாதுகாக்கக் கடவை' என்று குறிப்பிக்க, அதுமுதல் கருடன் ஸுமுகனேடு நட்புக்கொண்டு அவனைத் தோளில் தரிக்க, அவனும் அச்சமின்றி 'கருடா! ஸுகமா?' என்று க்ஷேமம் விசாரிப்பவனுயினன்—என்பதாம்.

இன்னமும் ஸ்ரீஸூக்திகள் காண்மின் ;— அவன் தான் அவதரித்து சோகிப்பது மோஹிப்பதாகும் போலேயாயிற்று இவர்களும். அன்றிக்கே, * அயர்வறுமமரர்களதிபதியாயிருக்கிற ஸர்வேச்வரனுக்கு, ஸம்ஸாரத்திலே முமுக்ஷுக்களாய் கைங்கர்யத்திலே அந்வயித்திருக்கும் அடியாரானவர்களையும் நெருக்கக்கடவ இந்த்ரியங்களிவை. ஒரு விச்வாமித்ர ஸௌபர்யாதிகளைக் கண்டோமிறே. ஜ்ஞாநாதிகனான விச்வாமித்ரனகப்பட ஒரு விஷயத்தின் காற்கடையிலே நெடுங்காலம் கிடந்தானிறே. பெருமாளுக்குப் பரிவரான மஹாராஜர், பெருமாளை மின்னுக்கும் இடிக்கும் இரையாக விட்டுவைத்து நாலுமாஸம் இந்த்ரிய பரவசராய் அவ்வழியொன்றும் நினைத்திலரிறே." ... ... (56)

## 57. பிராட்டியின் புருஷகாரம் வேண்டியதே

எம்பெருமானுக்கு உபாயத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டானாப்போலே பிராட்டிக்கும் புருஷகாரத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டு. எம்பெருமானுடைய நாராயணத்வ ப்ரயுக்தமான ஸ்வாபாவிக ஸம்பந்தத்தைத் தெரிந்துகொண்டு அவனை ஆச்ரயிக்கும்போது இவளைப் புருஷகாரமாக முன்னிடவேண்டிய அவசியம் என்ன? என்னில்; குளிர்ந்த ஜலத்திலுங்கூடக் கொடிதான நெருப்பு கிளருமாபோலே ஸர்வபூத ஸுஹ்ருத்தான அவன் திருவுள்ளத்திலே, சேதநன் அளவுகடந்து பண்ணும் அபராதமடியாகச் சீற்றம் பிறப்பதுமுண்டே; அங்ஙனே சீற்றம் பிறந்தால் அவ்வபராதத்தைப் பொறுப்பது இப்பிராட்டிக்காக வென்க. தன்னுடைய உபதேசாதிகளாலே அச்சீற்றத்தை யாற்றி" தயையை ஜனிப்பிக்குமவள் பிராட்டி. ஆகையாலே ஸம்பந்தவுணர்ச்சியுள்ளவனுக்கும் அபராத பயத்தாலே புருஷகார புரஸ்கரணம் அவசியமேயாகும்.

பிராட்டியின் புருஷகாரம் அவ்வளவு காரியம் செய்யுமோவென்னில், *அகில ஜகந்மாதரம் * என்கிறபடியே சேதநர்க்கு இவள் மாதாவாய் அந்த ஸம்பந்தமடியாக இவர்களது வருத்தங் கண்டு பொறுத்திருக்கமாட்டாதேயிருக்கிற வொரு தன்மையும், எம்பெருமானுக்குப் பத்னியாய் * பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு * என்கிறபடியே அவன் தன் வைலக்ஷண்யத்தைக் கண்டு பிச்சேறித் தன் சொற்படி நடக்கும்படி அபிமத விஷயமாயிருக்கிற வொரு தன்மையும் உடையளாகையாலே இவளுடைய புருஷகாரம் ஒருவகையாலும் விபலமாகமாட்டாது.

உலகில் புருஷகாரம் செய்பவர்களுக்கு இரண்டு தன்மைகள் வேண்டும்; எவர் விஷயத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவர் விஷயத்தில் நெஞ்சார்ந்த அன்பு இருக்கவேண்டியது ஒன்று; யாரிடத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவரிடத்தில் தம் வாக்கு வெற்றிபெற்றே தீரும்படியான வால்லப்யமிருக்கவேண்டியது மற்றொன்று. இவ்விரண்டும் பிராட்டியிடத்தே புஷ்கலமென்பது நிர்விவாதமான விஷயம்.

இவையெல்லாம் உண்மையே; ஈச்வரனோ கேட்பாரற்ற ஸ்வதந்திரன்; அன்னவன் சேதநருடைய குற்றங்களை நிறுத்து அவற்றுக்குத்தக்கபடி தண்டனை செலுத்தியே தீர்வேன் என்று நிற்குமளவில் பிராட்டி தான் என்ன செய்யமுடியும்? என்னில்; இது இவளுடைய செய்தியறியாதார் செய்யும் ஆக்ஷேபமாகும். இவள் ஸீதையாகப்பிறந்து சிறையிருந்த காலத்தில் இவளைப் பத்து மாஸம் இடைவிடாது படாத பாடுகளும் படுத்தின ராக்ஷஸிகளின் கொடுமையை முன்னம் மரத்தின்மேல் மறைந்திருந்து கண்ட அநுமான் 'பெருமாள் வெற்றி பெற்ற பின்பு இவர்களைப் பார்த்துக்கொள்வோம்' என்று ஆறியிருந்து ராவண வதமான பின்பு ஓடிவந்து 'இவ்வரக்கிகளின் அபராதங்களைக் கணக்கிட்டு சித்திர

வதம் பண்ண நினைத்திருக்கு மெனக்கு இடமளிக்க வேணும்' என்று (பிராட்டியை நோக்கிக்) கேட்டவளவிலே, சொல்லிறங்கனை அவ்வனுமானையுமுட்பட இவள் உபதேசத்தாலே பொறுப்பித்தாளென்பது ஸ்ரீ ராமாயண ப்ரஸித்தம். அப்படிப்பட்ட விவள் * அல்லி மலர் மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான் * என்கிறபடியே தன் போக்யதையிலே மிகவும் ஈடுபட்டிருப்பவனாய் * நின்னன்பின் வழிநின்று சிலைபிடித்தெம் பிரானேக * என்கிறபடியே 'மாயா மிருகத்தின் பின்னே போ' என்றாலும் விளைவதறியாதே அதின் பின்னே தொடர்ந்து போமவனாய் இப்படி தனக்கு விதேயனாய் ரஸிகனாயிருக்குமவனைப் பொறுப்பிக்கவல்லளென்பது பற்றிக் கேட்கவேணுமோ?

த்வயத்திலுள்ள ஸ்ரீமச்சப்தத்தினால், புருஷகார பூதையான பிராட்டியும் ஈச்வரனுமான இருவருடையவும் சேர்த்தியானது எப்போதுமுண்டென்று காட்டப்பட்டதாகும். ஜ்ஞானம் ஆனந்தம் முதலியவை எப்படி எம்பெருமானுக்கு ஸ்வரூப நிரூபகங்களோ அப்படி ஸ்ரீபதித்வமும் நிரூபகமாகையாலே இவளோடே கூடியே ஈச்வர ஸத்பாவமென்று கொள்க. சேதனர்களின் அபராதங்களைக் கணக்கிட்டு தண்டிக்கவல்லவனான எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியத்தையும், சேதநர் செய்யும் குற்றங்களின் மிகுதியையுங் கண்டு 'ஐயோ! என்னாகுமோ!' என்கிற பயத்தாலே எம்பெருமானை விட்டு ஒரு நொடிப்பொழுதும் அகலமாட்டாள். இப்படி இவளிருந்து நோக்குகையாலே ஈச்வரனுடைய ஸ்வாதந்திரியத்தைக் கண்டோ தன்னுடைய அபராதங்களை நினைத்தோ சேதநன் அஞ்சவேண்டிய ப்ரஸக்தியில்லை.

அன்றியும், பிராட்டியானவள் எப்போதும் எம்பெருமானோடு கூடியே யிருக்கின்றாளென்று தெரிந்துகொள்ளுமளவில் எந்த ஸமயத்திலும் எம்பெருமானை ஆச்ரயிக்கலாமென்பது தேறி நிற்கும். 'புருஷகாரம் செய்பவள் அருகே யிருக்குங்காலம் பார்த்து ஆச்ரயிக்கவேணும்' என்று ஸமயப்ரதீக்ஷை வேண்டியதில்லை; ஆச்ரயிக்கவேணுமென்கிற ருசி பிறக்கவேண்டுவதத்தனையே.

பிராட்டியின் புருஷகாரம் அவசியம் வேண்டியதென்பதை [illegible] செய்தியாலும் தெரிந்துகொள்ளலாம். ராமாவதாரத்தில் அளவு கடந்த அபராதத்தைச் செய்து ப்ரஹ்மாஸ்த்ரத்திற்கு இலக்காய் தலையறுப்புண்ண வேண்டிய காகம் க்ருபைக்கு இலக்காய்த் தலைபெற்றுப்போனது பிராட்டி அருகிருந்ததனாலேயாம். அவ்வளவு அபராதியல்லாத ராவணன் ராமசரத்துக்கு இலக்காய் முடிந்துபோனது இவளுடைய ஸந்நிதியில்லாமையினாலேயாம். .... .... .... .... (57)

## 58. மஹாபலி வாமந ஸம்வாதம்.

தேவேந்திரனுக்காக மஹாபலியிடம் யாசகனாய்ச் சென்ற வாமனமூர்த்தியை நோக்கி மஹாபலி கேள்விகள் கேட்பதும், அதற்கு வாமனன் விடை கூறுவதுமான அதிசயங்களைத் தெரிவிக்கும் ஒரு ச்லோகம்—

* கஸ்த்வம் ப்ரஹ்மசாரீ குத: தவ வஸதி: ? யாஸிநீ ப்ரஹ்மஸ்ருஷ்டி:
கஸ்தே த்ராதா? ஹ்ருதநாயக: குத: தவ ஜநக: ? நைவ தாதம் ஸ்மராமி
கிம் தேபீஷ்டம் ததாமி? த்ரிபதபரிமிதா பூமிரல்பம் ததைதத்
த்ரைலோக்யம் ஸர்வமஹம் பலிதி திமதநு வாமநோ வஸ்த்வாயாத்:*

மாவலி கேட்கிறான்—கஸ் த்வம் ப்ரஹ்மந்!—அந்தணு! நீ யாவன்?

வாமனன்—[அபூர்வ:] நான் இதற்குமுன்பு ஒருநாளும் யாசிக்கவந்தவனல்லேன் என்று மேலெழுந்த பொருள்; என்னில் முற்பட்டவன் எவனும் இல்லை; நானே யாவர்க்கும் முற்பட்டவன் என்பது ஹார்த்தமான பொருள். ஸகல ஜகத்காரண பூதனென்கை.

மாவலி—[க்வ ச தவ வஸதி:?] உன் இருப்பிடம் யாது?

வாமனன்—[யா அகிலா ப்ரஹ்மஸ்ருஷ்டி:] யாசகனுக்கு இருப்பிடம் என்று ஒன்றுண்டோ? பிரமன் படைத்தவிடமெங்கும் தட்டித்திரிபவனே நான் என்பது மேலெழுந்த பொருள். * பரந்ததண்பரவையுள் நீர்தொறும் பரந்துளன் * ஆக்கையுள்ளுமாவியுள்ளு மல்லபுறத்தினுள்ளும் நீக்கமின்றியெங்கும் நின்றாய் * என்கிறபடியே நானில்லாத இடமில்லை என்பது ஹார்த்தமான பொருள்.

மாவலி—[கஸ் தே த்ராதா?] நீ யாருடைய ஸம்ரக்ஷணையிலிருக்கிறாய்?

வாமனன்—[அநாத:] இந்தப் பிச்சைக்காரனுக்கு ஸம்ரக்ஷகருண்டோ? காப்பார் கேட்பாரற்றுத் திரிந்துகொண்டிருக்கிறேன் என்பது மேலெழுந்த பொருள். உலகுக்கெல்லாம் நானே நாதனாதலால் எனக்கொரு நாதனுண்டோ? என்பது உள்ளுறை பொருள்.

மாவலி—[க்வ ச தவ ஜநக:] உன் தகப்பனார் எங்கே?

வாமனன்—[நைவ தாதம் ஸ்மராமி] சிசுப்பிராயத்திலேயே தாய் தகப்பன்மார்களை இழந்த அநாதனாகையால் தகப்பனுருடைய ஞாபகமே எனக்கில்லை யென்பது மேலெழுந்த பொருள். உண்மையில் * மகனொருவர்க்கல்லாத மாமேனிமாயன் * என்கிறபடியே தான் ஒருவர்க்கும் புத்திரனன்றிக்கே ஸர்வலோக பிதாவாதலால் தகப்பனே கிடையாதென்கை உள்ளுறை.

மாவலி—[கிம் தே அபீஷ்டம் ததாமி?] உனக்கு என்ன தேவை? உனக்கு நான் தர வேண்டியது என்ன?

வாமனன்—[த்ரிபத பரிமிதா பூமி:] மூவடி நிலம் வேண்டுமத்தனை. மூவுலகமும் வேண்டும் என்பது உள்ளுறை.

மாவலி—[அத்யல்பம் ஏதத்] கல்ப வ்ருக்ஷத்தினிடத்துச்சென்று கௌபீநதானம் கேட்குமாபோலே என்னிடத்தில் வந்து இந்த அல்பதானம் விரும்புகின்றாயே! என்றானும்.

இங்ஙனே சாதுரியமாகப் பேசி மூவடி நீரேற்றுப்பெற்று மூவுலகத்தையும் அளக்கப் புக்கவாறே 'மிக்க பெரும்புகழ் மாவலி வேள்வியில் தக்கதிதன்றென்று தானம் விலக்கிய சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய" என்றும், "என்னிதுமாயம் என்னப்பனறிந் திலன் முன்னைய வண்ணமே கொண்டளவாயென்ற மன்னு நமுசியை வானில் சுழற்றிய" என்றும் சொல்லுகிறபடியே விநோதி விலாஸமும் செய்து வெற்றி பெற்றனன் பகவான்.

## 59. தவறான ஐதிஹ்யமொன்று.

திருவாய்மொழியில் (9-10-5) "சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம், மரணமானால் வைகுந்தங் கொடுக்கும்பிரான்" என்கிற பாசுரத்தில் மூலாதாரம் சிறிதுமில்லாத வோர் ஐதிஹ்யம் ஆங்காங்குள்ளவர்கள் சொல்லி வருகிறார்கள். அதாவது, "மரணமாக்கி வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்று ஆழ்வார் திருவாக்கில் பாடம் வெளிவந்திருந்ததாம். ஸ்ரீமந்நாதமுனிகள் போல்வார் அதைக்கண்டு "இப்படியிருந்தால் எம்பெருமான் திருவடிகளில் யாரும் பணியமாட்டார்கள்; வந்து சேர்ந்தவர்களையெல்லாம் மரணமாக்கி வைகுந்தம் கொடுக்குமவனென்று தேறினால் யாரும் அணுகமாட்டார்களன்றோ; ஆகவே இப்பாடத்தை மாற்றிவிடவேண்டும்" என்று துணிந்து "மரணமானால்" என்று திருத்திப் பாடம் வழங்கினார் என்பதாக ஐதிஹ்யம் சொல்லக் கேட்கிறோம். இது ஸம்ப்ரதாய நெறியிற் படிந்த பெரியார்களுக்கு உடன்பாடன்று. மரணமாக்கி யென்று பாடமிருந்தால் அதை மாற்றவேண்டிய அவசியமில்லை. அப்படி மாற்றுவதானால் மற்றும்பல பாசுரங்களையும் மாற்றவேண்டிவரும். இத்திருவாய்மொழியிலேயே இரண்டாம் பத்தின் முடிவு பாசுரம் "அருளுடையவன்தாள் அணைவிக்கும் முடித்தே" என்பது. இதில் 'முடித்து' என்பதற்கு மரணமாக்கி யென்பதன்றோ பொருள். அதை மாற்றாமல் இதை மாத்திரம் மாற்றுவானேன்?.

அன்றியும் ஆழ்வார் திருவாக்கில் 'மரணமானால்' என்கிறபாடமே வெளிவந்ததாக ஸகல பூர்வாசாரியர்களும் நன்குகாட்டி வியாக்கியானஞ் செய்துள்ளார்கள். * மாலை நண்ணி * என்கிற திருக்கண்ணபுரப் பதிகத்திலன்றோ *மரணமானாலென்கிறவிந்தச் சந்தையுள்ளது. அப்பதிகத்திற்கு இந்தச்சொல்லே உயிரானதென்று கொண்டு வியாக்கியானம் செய்தருளியுள்ளார்கள். "சரீராவஸானத்திலே உம்முடைய விருப்பம் நிறைவேற்றக்கடவோம்" என்று ஆழ்வார்க்கு எம்பெருமான் ஸமாதானம் பண்ணினதாகவும், அதை ஆழ்வார் "மரணமானால் வைகுந்தங் கொடுக்கும்பிரான்" என்று தம்முடைய வனுஸந்தானத்தாலே வெளியிட்டதாகவும் பதிகத்திற்கு ப்ரவேசம் அருளிச் செய்துள்ளார்கள். பாசுர வியாக்கியானத்திலும் "இப்பாட்டில் மரணமானாலென்றத்தைக் கொண்டிறே கீழ்சொன்ன நிரூபணமெல்லாம்" என்று இருபத்திநாலாயிரத்திலும் முப்பத்தாறாயிரத்திலுமுள்ளது. மணவாளமாமுனிகளும் திருவாய்மொழி நூற்றந்தாதியில் இப்பதிகத்தின் ஸாரமாக இட்டருளின பாசுரத்தில் "மால் உமது வாஞ்சை முற்றும் மன்னுமுடம்பின் முடிவில், சால நண்ணிச் செய்வனெனத் தானுகந்து" என்றருளிச் செய்துள்ளார். ஆசார்ய ஹ்ருதயத்திலும் (4-9.) "இனிப்பத்திலொன்று தசமதசையிலே பேறென்று......நாளிடப் பெற்றவர்" என்றுள்ளது. ஆழ்வார்க்கு எம்பெருமான் நாளிட்டுக் கொடுத்ததாகவும் அதை ஆழ்வார் தம் திருவாக்கால் அறுவதிப்பதாகவுமன்றோ வஸ்துஸ்திதியில் ப்ரமேயமுள்ளது. ஆகவே "மரணமாக்கி வைகுந்தங் கொடுக்கும்பிரான்" என்று பாடமிருந்ததாக ப்ராமாணிகர்கள் நெஞ்சாலும் கொள்ளவும் வியாமில்லையென்று சுருக்கமாகத் தெரிவித்தோமானோம். ... (59)

## 60. தெய்வச் செயலின் சிறப்பு

ஒரு மஹாநகரத்தில் ஒரு குடும்பம். அக்குடும்பத்தில் அருமையாகப் பிறந்துவளரும் புதல்வனுக்கு ஒருநாள் இரவில் மஹத்தான ஜ்வரயாதை உண்டாயிற்று. இரண்டு மைல் தூரத்தில் வைத்யசாலை இருந்தது. நோயின் தன்மையைச் சொல்லியனுப்பி மருந்து வரவழைக்கலாமென்று கருதிய பெரியார், தமது பன்னிரண்டு வயதுள்ள சிறுவன்கையில்

ஒரு ஸீஸாவும் ஒரு ரூபாயும் மருந்து விவரம் குறிக்கும் சீட்டும் கொடுத்து டாக்டரிடம் மருந்து வாங்கிவரும்படி சொல்லி அச்சிறுவனை யனுப்பினர்.

அவன் கனவேகமாகச்சென்று டாக்டரிடம் சேர்ந்தான். அப்போது இரவு சுமார் ஒன்பதுமணி. மின்னலும் காற்றும் இடியுமாயிருந்தது. டாக்டர் மருந்துசாலையின் முன் னிலையில் உட்கார்ந்து சில ஆப்தரான பெரியமனிதர்களோடு பேசிக்கொண்டிருந்தார். அச்சமயம் இச்சிறுவன் சென்று செய்தியைத் தெரிவித்தும் அவர் அன்பர்களோடு வார்த்தை யாடுதலில் மிக்க குதூகலமாயிருந்ததனால் இச்சிறுவனது வேண்டுகோளைக் கவனியாமலே யிருந்திட்டார்.

இவனும் சிறிது நிர்ப்பந்தித்துக் கூறவே, டாக்டர் 'இப்போது முடியாது, காலை வா' என்று அலக்ஷியமாகப் பேசினர். அதுகேட்ட சிறுவன், ஐயா! நான் இரண்டுமைல் தூரத்தி லிருந்து வந்திருக்கிறேன்; வீட்டில் அண்ணனுக்கு நோய் மிகக் கடினமானது; இப்போது வேறெங்கும் மருந்துகிடைப்பதும் அரிதாயிருக்கின்றது. இப்போதே தாங்கள் மருந்து தராவிடில் நாளை காலைவரையில் அண்ணன் ஜீவித்திருப்பானென்பதும் ஸந்தேஹமே; அன்றி யும், நான் மருந்து வாங்கிக்கொண்டு போகாமல் வெறுங்கையோடு சென்றால் என் உயிர் தக்குவதும் கஷ்டமாகும். தாய்தந்தையர் என்னைப் புடைத்துவிடுவார்கள்; ஆதலால் மிகவும் தயவுசெய்து பணம் பெற்றுக்கொண்டு மருந்து தரவேணுமென்று சொல்லி, மருந்தின் விவரங்காட்டும் சீட்டையும் ஸீஸாவையும் ரூபாயையும் மேஜையின்மேல் வைத்துக் கும்பிட்டான்.

இவ்வாறு கெஞ்சி வணங்கிக் கேட்டதைக் கண்ட அங்குள்ள பெரியார்கள் மிகவும் மனமிரங்கி டாக்டருக்குச் சாலவும் சிபார்சு செய்தார்கள். மருந்து சீட்டைக்கண்ட டாக்டர் அது இரண்டு மூன்று திரவகங்கள் சேர்த்துக் கலந்து கொடுக்கவேண்டிய மருந்தாக இருந்தபடியால் ஸ்வாரஸ்யமான வார்த்தையை விட்டு எழுந்திருந்து இது செய்துகொடுக்க மனங்கொள்ளாமலேயிருந்தார். ஆனாலும் சிறுவனுடைய கெஞ்சுதலுக்கு மிக இரங்கிய அன்பர்கள் அதிகமாகத் தூண்டவே வருந்தியெழுந்து அதில் ஊக்கமில்லாமலே மருந்து சீட்டை நன்றாகக்கவனியாமல் வேறு சிலமருந்துகளைக்கூட்டி ஸீஸாவில் கொட்டிக் கொடுத் தனுப்பிவிட்டார். சிறுவனும் மிக்க ஆனந்தத்தோடு அதைவாங்கிக் கொண்டு கனவேக மாகத் திரும்பினன்.

ஐந்துநிமிஷம் பொறுத்தபின் டாக்டருடைய கையில் வலிதான எரிச்சல் எடுத்தது. உடனே, எந்தமருந்துகளைக் கலந்து கொடுத்தோமென்று கவனிக்கத்தொடங்கினர். ஞாபகப் பிசகினால் அக்கித்திராவகமும் பாய்ஸனான மருந்து மற்றொன்றும் கலந்து கொடுக்கப்பட்ட தாகத் தெளிவாய்த் தெரிந்துகொண்டார். கொடுத்த அந்தமருந்து உட்கொள்ளப்படு மாகில் உடனே குடல் வெந்துபோய் பிராணபாயம் நேருவது நிச்சயம். அந்தோ! இப்படிப் பட்ட உயிர்க்கொலையான மருந்தைக் கொடுத்துவிட்டோமே! சிறுவனோ கனவேகமாகச் சென்று விட்டானே! இதுவரையில் மருந்து உபயோகப் படுத்தப்பட்டிருக்குமானால் உயிர்ச் சேதம் நேராமலிருக்கமுடியாதே, ஐயோ! கொலைபாதகனை ஆய்விட்டேனே! அந்தச்சிறுவன் இன்னான் இன்னவிடத்தான் என்றாவது தெரிந்தால் இப்போதே ஓடிப்போய் மருந்தை உட்கொள்ளாதபடி நிறுத்தலாம். இன்னதிக்கிலிருந்து அச்சிறுவன் வந்தானென்பதும் தெரிந்துகொள்ளாமற் போய்விட்டோமே. இரண்டுமைல் தூரத்திலிருந்து வந்ததாகச் சொன்னானேயல்லது இன்னவிடத்திலிருந்து வந்ததாக அவன் தெரிவிக்கவில்லையே! ஐயோ

இந்த நள்ளிருளில் மின்னலும் இடியும் மழையுமான இச்சமயத்தில் எந்தப்பக்கம் ஓடி எந்த விதமாக அச்சிறுவனைக் கண்டுபிடிக்க முடியும்? தெய்வமே! என்னை இப்படியும் கொடிய கொலைப்பாதகனாக ஆக்கிவிடலாமோ! என்று டாக்டர் துடிக்கிறார், தவிக்கிறார், துள்ளுகிறார், கதறுகிறார், அழுகிறார்; அன்பர்கள் தேற்றவில்லாது தணறுகிறார்கள். இவருடைய நிலைமை இதுவாயிருக்க;

மருந்து வாங்கிக்கொண்டு களிப்புடன் வேகமாகச்சென்றசிறுவனோ வென்றால் இருளில் மழையில் சென்றதனால் வழியில் கால்வழுக்கிக் கீழேவிழுந்து மருந்து சீசாவும் கீழே நழுவி உடைந்துபோக, மிகுந்த வருத்தத்துடன் அந்த டாக்டரிடமே திரும்பி வந்து 'ஐயா! என்கதி இப்படியாய்விட்டது; இந்தச்செய்தியைச் சொல்லிக்கொண்டு நான் வீட்டிற்குச் சென்றால் என் உயிரை வாங்கிவிடுவர்கள்; மறுபடியும் மருந்து வாங்கிக்கொள்ள என்கையில் ரூபாயுமில்லை; எப்படியாவது என்னைக்காப்பாற்ற வேண்டியது உங்கள் கருமம்; தயவுசெய்து அந்தமருந்தை மறுபடியும் கொடுத்தீர்களானால் எனது அண்ணனுடைய உயிர் பிழைப்பதற்கு முன் என்னுயிர் பிழைக்கும்' என்றுசொல்லி மன்றாடினான்.

இச்செய்தி கேட்டவுடனே டாக்டருக்குண்டான ஆனந்தத்திற்கு அளவுதான் இருக்குமோ? அச்சிறுவனைத் தலைமேல் தூக்கிக்கொண்டு கூத்தாடினார், குலாவினார், தெய்வத்தைப் போற்றினார், புகழ்ந்தார். இன்னு மென்னென்னவோ செய்தார். தெய்வபக்தி அதிகரிக்கப்பெற்றார். உடனிருந்த அன்பர்களைத்தழுவி எழுந்தும் பறந்தும் துள்ளிக்குதித்தார். உடனே அந்தச்சிறுவனைத் தமது மோட்டார்காரில் உட்காரவைத்துக்கொண்டு தாமே நோயாளியின் வீட்டுக்கு நேரில்சென்று போதுமான சிகித்ஸையை இனமாகச் செய்து விரைவில் குணப்படுத்தினார்.



---

## 61 "தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப்பூண்டவன்பாளனிராமானுசன்"

★

ப்ரமாதாக்களில் தலைவரான எம்பெருமானார் ப்ரமாணங்களையெல்லாம் பரிஷ்கரித்தருளினது போலவே ப்ரமேயச்ரேஷ்டனை எம்பெருமானுடைய திவ்ய தேசங்களையும் மிகமிகப் பரிஷ்கரித்தருளினவர். அனதுபற்றியே ஸ்வாமியின் திருநாள் பாட்டில் *மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்று முவந்திடுநாள்* என்று மணவாளமாமுனிகளாலருளிச் செய்யப்பட்டது. கோயில் திருமலை பெருமாள்கோயில் திருநாராயணபுரம் முதலான ஸகல திவ்ய தேசங்களையும் பரிஷ்கரித்தருளினவர் ஸ்வாமி யெம்பெருமானாரேயாவர். ஸகல திவ்ய தேசத்தெம்பெருமான்களிடத்திலும் ஸ்வாமி அன்பு பூண்டிருந்தவராயினும் ஸ்ரீகாஞ்சீ தேவப்பெருமாள் திருவடியிணையில் அஸாதாரணமான அன்பு கொண்டிருந்தாரென்பது இராமானுச நூற்றந்தாதியில் * ஆண்டுகள் நாள் திங்களாய்......காண்டுதோளண்ணல் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப் பூண்டவன்பாளனிராமானுசன் * என்ற பாசுரத்தினால் நன்கு புலனாகும். ஸ்ரீ ஹஸ்திசைலசிகரோஜ்ஜ்வல பாரிஜாதமான தேவப்பெருமாளுடைய திருநாமமே 'தென்னத்தியூரர்' என்பது. *உலகேத்துமாழியானத்தியூரான்* என்றும் * அத்தியூரான் புள்ளையூர்வான் * என்றும் பூதத்தாழ்வாரருளிச் செய்ததையடியொற்றி அமுதனாரும் அத்தியூரர் என்று பணித்தார்.

ஸ்வாமிக்குத் தேவப்பெருமாள் திருவடியிணையில் அன்புமிகுந்திருப்பதற்கு உரிய காரணங்களுள் சிலவற்றை இங்கெடுத்துரைப்போம்; திருவரங்கம் பெரியகோயிலில் ஸ்ரீ வைஷ்ணவ தர்சன ப்ரவர்த்தகராக வாழ்ந்துவந்த ஆளவந்தார் காஞ்சீபுரியில் வாழும் ஸ்ரீ ராமாநுஜருடைய ப்ரபாவங்களைக் கேட்டு இவரைக் காணவேணு மென்னுமாவலுடனே காஞ்சிக் கெழுந்தருளி ஸ்ரீ ஹஸ்திகிரியிலே மங்களாசாஸனஞ் செய்து கீழே திருப்புற்றி னருகே திருவனந்தாழ்வானையும் கரியமாணிக்கப் பெருமாளையும் ஸேவியாநிற்க. அங்கே யாதவப்ரகாசர் தம் வித்யார்த்தி ஸமூஹத்துடனே பெருமாளை ஸேவித்து அவ்விடத்தே ப்ரதக்ஷிணமாக வாராநிற்க, ஆளவந்தார் தம் அருகேயிருந்த திருக்கச்சிநம்பியை நோக்கி 'இத்திரளிலே இளையாழ்வார் யாவர்?' என்று கேட்க, அவரும் 'அதோ சிவந்து நெடுகி ஆஜாநுபாஹுவாய் வருகிறவர்' என்று காட்ட, ஆளவந்தாரும் திருவுள்ளம் பூரிப்பக் குளிரநோக்கியருளி "ஆம் முதல்வனிவன்" என்று விசேஷகடாக்ஷம் செய்தருளியும், தேவப்பெருமாளை நோக்கி * யஸ்ய ப்ரஸாதகலயா பதிர: ச்ருணோதி பங்கு: ப்ரதாவதி ஜவேந ச வக்தி மூக:; அந்த: ப்ரபச்யதி ஸுதம் லபதே ச வந்த்யா தம் தேவமேவ வரதம் சரணம் கதோஸ்மி * என்றொரு ச்லோகத்தால் இளையாழ்வார் நம் தர்சந ஸ்தாபகராம்படி அருள் புரிகைக்காகச் சரணாகதி செய்தும் எழுந்தருளினாரென்று இதிஹாஸம். ஆக, தேவப்பெருமாளுடைய திருவருளடியாகவே ஸ்வாமி விசேஷ அபிவிருத்தியை யடைந்தது.

யாதவப்ரகாசருடைய கங்காயாத்திரையிலே ஸ்வாமியும் அந்வயித்து எழுந்தருளுகையில், விந்த்யாடவியில் நிர்ஜலமும் நிர்ஜனமுமான நீள் காட்டிலே பிரிந்து திரும்பவேண்டியதானபோது * ஆவாரார்துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய் போல் * துளங்கி நின்று வழிதிகைத்து நிற்கையிலே, தேவப்பெருமாள் ஒரு வில்லியாகவும் பெருந்தேவித் தாயார் அவனது மனைவியாகவும் வேடம்பூண்டு ஸ்வாமிக்குத் துணையாக வந்து சேர்ந்து வழி நடத்தி ஓரிரவிலேயே கச்சிப்பதியில் கொணர்ந்து சேர்த்துச் சாலக்கிணற்றில் ஸ்வாமி திருக்கையால் தீர்த்தம் வாங்கிப் பருகி விடாய் தீர்ந்ததற்கு அறிகுறியாக அன்று முதல் ஸ்வாமி நாடோறும் சாலக்கிணற்றில் நின்றும் தீர்த்தம் கொணர்ந்து ஸமர்ப்பித்து வந்தார். இவ்வைதிஹ்யத்தை வேதாந்ததேசிகனும் யதிராஜஸப்ததியில் * வந்தே தம் யமிநாம் துரந்தரமஹம் * என்கிற ச்லோகத்தில் * தத்தம் யேந தயாஸுதாம்புநிதிநா பீத்வா விசுத்தம் பய: காலே ந: கரிசைலக்ருஷ்ணஜலத: காங்க்ஷாதிகம் வர்ஷதி * என்ற உத்தரார்த்தத்தில் பொதித்தருளினார்:

திருக்கச்சிநம்பி மூலமாக ஸ்வாமி ஆறுவார்த்தைகள் கேட்டருளித் தெளிவு பெற்றதும் தேவப்பெருமான் ஸந்நிதியிலே.

யஜ்ஞமூர்த்தி யென்னுமொரு மாயாவாதிஸந்யாஸியின் கேள்விகளுக்கெல்லாம் ஸ்வாமி விடையளித்து வருகையில், முடிவாக வொரு விஷயத்திற்கு விடையிறுக்கமுடியாமல் 'நாளைக்கு ஆகிறது' என்று சொல்லி வந்து மிகவும் வியாகுலராய் அமுது செய்யாமலே திருக்கண் வளர்ந்தருளாநிற்க, அன்றிரவு தேவப்பெருமான் கனவிலே யெழுந்தருளிக் காட்சிதந்து மாயாவாதியின் வாயடங்கும்படியான சில அர்த்த விசேஷங்களை ஸ்புரிக்கச் செய்து மறைய, ஸ்வாமி உள்ளந்தேறி அந்த யஜ்ஞமூர்த்தியைத் திருத்திப் பணி கொண்டு, தேவப்பெருமாளுடைய ப்ரஸாதமடியாகவே இவர் ஆட்பட்டாரென்கிற உபகார ஸ்ம்ருதி ப்ரகாசிக்கும்படி அருளாளப் பெருமாளெம்பெருமானார் என்று அவர்க்குத் திருநாமம் சாத்தியருளினார்.

இங்ஙனேயுள்ள இதிஹாஸங்களினால் ஸ்வாமி யெம்பெருமார் தேவப்பெருமாள் திருவடிகளில் மிக்க அன்பு பூண்டு விளங்கினரென்று அறியலாகும். ... .... (61.)

## 62. எந்தவடிவு சிறந்தது?

அசோகவனத்திலிருந்த பிராட்டி திருவடிமூலமாகப் பெருமாளுக்குச் செய்தி சொல்லியனுப்பினாள். அதைப்பெருமாளிடம் விண்ணப்பம் செய்யாநின்ற திருவடி, *ஜீவிதம் தாரயிஷ்யாமி மாஸம் தசரதாத்மஜ* *ஊர்த்வம் மாஸாந்ந ஜீவேயம்* என்று சொன்ன வார்த்தை விண்ணப்பஞ் செய்தான். 'இனி ஒருமாத மளவுந்தான் ஜீவித்திருப்பேன், அதற்கு மேல் ஜீவித்திருக்கமுடியாது' என்று பிராட்டிசொன்ன வார்த்தை. இப்படி சொல்லக் கேட்ட பெருமாள் "அப்படியா? என்னைப்பிரிந்த பிராட்டி இன்னமும் ஒரு மாதம் வரை ஜீவித்திருப்பளா? அப்படி ஒரு மாதம் ஜீவித்திருந்தாளாகில் நீடூழிகாலமும் ஜீவித்திருக்க வல்லவளே. என்னால் அப்படி ஜீவித்திருக்க முடியாது; [*ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம்*] குவளையங்கண்ணியான அப்பிராட்டியை விட்டு ஒரு நொடிப் பொழுதும் ஜீவிக்கில்லேன் நான்" என்று கூறியிருக்கிறார். இவ்விரண்டு வார்த்தைகளையும் சேர்த்து ஆராய்ந்திடுத்து விச்லேஷத்தில்தரியாமையென்னும் விஷயத்தில் பிராட்டிக்குத் தாழ்வும் பெருமாளுக்கு ஏற்றமும் ஏற்படுகிறதல்லவா? இது கூடுமோ? *அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா* என்று ஆழ்வாரருளிச் செய்தபடி ஒரு நொடிப்பொழுதும் அகலகில்லேனென்று சொல்லுமவள் பிராட்டியல்லவா? அப்படிப்பட்டவளன்றோ 'ந ஜீவேயம் க்ஷணமபி' என்று சொல்லவேண்டும். அவள் ஊர்த்வம் மாஸாத் ந ஜீவேயம்' என்று ஒரு மாதம் விச்லேஷத்தை ஆற்றியிருக்கமுடியுமென்பதும் 'ந ஜீவேயம் க்ஷணமபி' என்று க்ஷணகாலமும் பிரிவாற்றகில்லேனென்று பெருமாள் சொல்லுவதுமாக வான்மீகி முனிவர் வசன விந்யாஸம் செய்திருப்பது நன்றாயில்லையே யென்று முற்காலத்தில் சிலர் பேசிக்கொண்டார்களாம்; அப்பேச்சு நம்பிள்ளை திருச்செவியில் விழுந்து வெகு அற்புதமான பரமார்த்தம் வெளியிடலாயிற்று.

மேலே யெடுத்துக்காட்டிய திவ்ய தம்பதிகளின் வசனங்களை ஆழ்ந்து நோக்குமிடத்துப் பிராட்டிக்கே பெருமை விளங்கும். எங்ஙனே யென்னில்; பிராட்டியின் திருமேனி யழகைக் காட்டிலும் பெருமாள் திருமேனியழகு மிகவும் குறைந்ததென்பது இங்குத் தெரியவருகிறது. பிராட்டியின் திருமேனியழகெல்லாம் ஒரு தட்டாய், கண்ணழகு மாத்திரமே ஒரு தட்டாயிருக்கையினாலும், அதுதானும் *பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரி யென்று பேர் பெற்ற இராமபிரானது ஸௌந்தரியத்திற்காட்டிலும் விஞ்சி பெற்றிருக்கையாலும் அப்படிப்பட்ட பிராட்டியின் க்ஷணகாலவிச்லேஷமும் அஸஹ்யமென்பது பெருமாளுடைய திருமுகப் பாசுரத்தினால் [விநா தாம் அஸிதேக்ஷணாம் என்பதனால்] வெளிவந்து பிராட்டியின் பெருமையை நிலைநாட்டி நின்றது. ஒரு மாஸம் பிரிவாற்றியிருப்பேனென்ற பிராட்டியின் வார்த்தை இதற்குப் பிரதிகோடியாய் பெருமானைப் பிரிந்து ஒரு மாதம் ஜீவித்திருக்கமுடியுமென்று சொன்ன முகத்தால் பெருமாளுடைய வடிவழகு அவ்வளவு சிறந்ததன்றென்பது காட்டுகிறது.

இவ்வர்த்தம் [illegible] வெளியிடப்பட்டிருக்கிறதென்னில்; திருவாய்மொழியில் [illegible] கொடி தோற்றத்து மெய்யே* என்றவிடத்து காட்டில்.

இங்ஙனே யுள்ள இதிஹாஸங்களினால் ஸ்வாமி யெம்பெருமார் தேவப்பெருமாள் திருவடிகளில் மிக்க அன்பு பூண்டு விளங்கினரென்று அறியலாகும். ... .... (61.)



## 62. எந்தவடிவு சிறந்தது?

அசோகவனத்திலிருந்த பிராட்டி திருவடிமூலமாகப் பெருமாளுக்குச் செய்தி சொல்லியனுப்பினள். அதைப்பெருமாளிடம் விண்ணப்பம் செய்யாநின்ற திருவடி, *ஜீவிதம் தாரயிஷ்யாமி மாஸம் தசரதாத்மஜ* *ஊர்த்வம் மாஸாந்ந ஜீவேயம்* என்று சொன்னதையும் விண்ணப்பஞ் செய்தான். 'இனி ஒருமாத மளவுந்தான் ஜீவித்திருப்பேன், அதற்கு மேல் ஜீவித்திருக்கமுடியாது' என்று பிராட்டிசொன்ன வார்த்தை. இப்படி சொல்லக் கேட்ட பெருமாள் "அப்படியா? என்னைப்பிரிந்த பிராட்டி இன்னமும் ஒரு மாதம் வரை ஜீவித்திருப்பளா? அப்படி ஒரு மாதம் ஜீவித்திருந்தாளாகில் நீடூழிகாலமும் ஜீவித்திருக்க வல்லவளே. என்னால் அப்படி ஜீவித்திருக்க முடியாது; [*ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம்*] குவளையங்கண்ணியான அப்பிராட்டியை விட்டு ஒரு நொடிப் பொழுதும் ஜீவிக்ககில்லேன் நான்" என்று கூறியிருக்கிறார். இவ்விரண்டு வார்த்தைகளையும் சேர்த்து ஆராயுமிடத்து விச்லேஷத்தில்தரியாமையென்னும் விஷயத்தில் பிராட்டிக்குத் தாழ்வும் பெருமாளுக்கு ஏற்றமும் ஏற்படுகிறதல்லவா? இது கூடுமோ? *அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா* என்றுஆழ்வாரருளிச் செய்தபடி ஒரு நொடிப்பொழுதும் அகலகில்லேனென்று சொல்லுமவள் பிராட்டியல்லவா? அப்படிப்பட்டவளன்றோ 'ந ஜீவேயம் க்ஷணமபி' என்று சொல்லவேண்டும். அவள் ஊர்த்வம் மாஸாத் ந ஜீவேயம்' என்று ஒரு மாதம் விச்லேஷத்தை ஆற்றியிருக்கமுடியுமென்பதும் 'ந ஜீவேயம் க்ஷணமபி' என்று க்ஷணகாலமும் பிரிவாற்றகில்லேனென்று பெருமாள் சொல்லுவதுமாக வான்மீகி முனிவர் வசநவிந்யாஸம் செய்திருப்பது நன்றாயில்லையே யென்று முற்காலத்தில் சிலர் பேசிக்கொண்டார்களாம்; அப்பேச்சு நம்பிள்ளை திருச்செவியில் விழுந்து வெகு அற்புதமான பரமார்த்தம் வெளியிடலாயிற்று. 

மேலே யெடுத்துக்காட்டிய திவ்ய தம்பதிகளின் வசனங்களை ஆழ்ந்து நோக்குமிடத்துப் பிராட்டிக்கே பெருமை விளங்கும். எங்ஙனே யென்னில்; பிராட்டியின் திருமேனி யழகைக் காட்டிலும் பெருமாள் திருமேனியழகு மிகவும் குறைந்ததென்பது இங்குத் தெரியவருகிறது. பிராட்டியின் திருமேனியழகெல்லாம் ஒரு தட்டாய், கண்ணழகு மாத்திரமே ஒரு தட்டாயிருக்கையினாலும், அதுதானும் *பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரி யென்று பேர் பெற்ற இராமபிரானது ஸௌந்தரியத்திற்காட்டிலும் விஞ்சு பெற்றிருக்கையாலும் அப்படிப்பட்ட பிராட்டியின் க்ஷணகாலவிச்லேஷமும் அஸஹ்யமென்பது பெருமாளுடைய திருமுகப் பாசுரத்தினால் [விநா தாம் அஸிதேக்ஷணாம் என்பதனால்] வெளிவந்து பிராட்டியின் பெருமையை நிலைநாட்டி நின்றது. ஒரு மாஸம் பிரிவாற்றியிருப்பேனென்ற பிராட்டியின் வார்த்தை இதற்குப் பிரதிகோடியாய் பெருமாளைப் பிரிந்து ஒரு மாதம் ஜீவித்திருக்கமுடியுமென்று சொன்ன முகத்தால் பெருமாளுடைய வடிவழகு அவ்வளவு சிறந்த தன்றென்பது காட்டிற்றாகிறது.

இவ்வர்த்தம் எவ்விடத்தில் வெளியிடப்பட்டிருக்கிற தென்னில்; திருவாய்மொழி (6—6—6.) *என் விற்புருவக்கொடி தோற்றது மெய்யே* என்றவிடத்து ஈட்டில்.

"ஊர்த்வம் மாஸாந் ந ஜீவிஷ்யே என்னப்பண்ணும் வடிவைக்காட்டி *ந ஜீவேயம் க்ஷணமபி* என்னப்பண்ணும் வடிவைக்கொள்ளை கொண்டது"

என்றுள்ள ஸ்ரீஸூக்தியின் சுவைமிகுதி காண்க. 'அழகில் குறைந்த வடிவைக் காட்டி அழகில் நிறைந்த வடிவைக் கொள்ளைகொண்டானே'! என்பதுதான் இங்குப் பரமதாத்பர்யம். .... .... ... .... ... (62)

## 63. திருப்பாவையும் திருக்கோயிலும்.

மதுரகவியாழ்வாரும் ஆண்டாளும் உட்பட ஆழ்வார்கள் பன்னிருவருமருளிச்செய்த திவ்யப்பிரபந்தங்களை நாலாயிர திவ்யப்பிரபந்தமென்று வழங்கப்பெறுகின்றன. இவற்றுள் இராமாநுச நூற்றந்தாதியும் அடங்குகின்றது. திருப்பல்லாண்டு, திருப்பாவை, கண்ணிநுண் சிறுத்தாம்பு, இராமாநுச நூற்றந்தாதி ஆகிய இந்நான்கும் திவ்யப்பிரபந்தங்களுக்குள்ள அஸாதாரணமானவொரு பெருமையைப் பெறுவதற்கு உரிமையற்றவைபோல் காணப்படுகின்றன. திவ்யப்பிரபந்தங்களுக்கு அஸாதாரணமான பெருமை ஏதென்னில், உகந்தருளின நிலங்களாகிய திவ்யதேசங்களை விசேஷமாகப் பேசுகையேயாம். எம்பெருமானுடைய பரவ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரமென்னும் ஐந்துநிலைகளும் திவ்யப்பிரபந்தங்களில் பேசப்பட்டிருந்தாலும் அர்ச்சாவதாரப் பெருமைகளைப் பேசுவதிலேயே இவற்றுக்கு விசேஷநோக்கு என்பது நம் ஆசாரியர்கள் நிலையிட்ட விஷயம். வேதத்திற்குப் பரத்வத்திலே நோக்கு; பாஞ்சராத்ரங்களுக்கு வ்யூஹத்திலே நோக்கு; இதிஹாஸபுராணங்களுக்கு விபவத்திலே நோக்கு; தர்ம சாஸ்த்ரங்களென்கிற ஸ்ம்ருதிகளுக்கு அந்தர்யாமியிலே நோக்கு; திவ்யப்பிரபந்தங்களுக்கு அர்ச்சையிலே நோக்கு—என்னும் விஷயமானது ஆசார்யஹ்ருதயத்தில் "அதவா, வேத வேத்ய ந்யாயத்தாலே பரத்வபர முதுவேதம்" என்று தொடங்கியுள்ள (70) சூர்ணையின் வியாக்யானத்திலே விசதமாகக் காணலாகும். நாம் திவ்யதேசங்களின் பெருமைகளை யநுபவிக்கவேணுமானால் திவ்யப்பிரபந்தங்களிலல்லது வேறு எதிலும் அநுபவிக்க முடியாதன்றே. ஆகவே திவ்யதேசப் பெருமையைப் பகர்வதே திவ்யப்ரபந்தங்களுக்கு அஸாதாரணமான பெருமையென்பது நிர்விவாதமாகும்.

இப்படிப்பட்ட பெருமை திருப்பல்லாண்டு முதலிய மேலேகுறித்த நான்கு திவ்யப்பிரபந்தங்களுக்கு ஸம்பவிக்க ப்ரஸக்தியில்லாமலிருக்கிறது. ஏனென்னில்; 1. பெரியாழ்வார் பாண்டியராஜனுடைய ஸபையிலே பரதத்வநிர்ணயம்பண்ணி விரைந்து இழியுறுத்து யானை மிசைமீது ஊர்வலம் வருகையில் அந்த மஹோத்ஸவத்தைக் காணவந்த பரமபதநாதனை நோக்கியே பல்லாண்டுபாடித் திருப்பல்லாண்டென்கிற திவ்யப்பிரபந்தத்தை யருளிச்செய்தாராதலால் அப்போது திவ்யதேசப்புகழ்ச்சி எதுவும் செய்ய ப்ரஸக்தியில்லையாயிற்று. 2. திருப்பாவை, கண்ணபிரானுடைய விபவகாலத்திலேயே நேராக ஆய்ச்சிகள் ஆசரித்தபடியை அநுகரித்துப் பேசப்பிறந்த பிரபந்தமாதலால் இதிலும் திவ்யதேசப்புகழ்ச்சி எதுவும் செய்ய ப்ரஸக்தியில்லையாயிற்று. 3. கண்ணிநுண் சிறுத்தாம்பு, நம்மாழ்வாரையே தெய்வமாகக் கொண்டு அவரைத் துதிப்பதற்கென்றே தோன்றின பிரபந்தமாகையாலும் 4. இராமாநுச நூற்றந்தாதி, எம்பெருமானாரையே தெய்வமாகக்கொண்டு அவரைத் துதிப்பதற்கென்றே தோன்றின பிரபந்தமாகையாலும் இவற்றிலும் திவ்யதேசப்புகழ்ச்சிக்கு இடமில்லையாயிற்று.

$ நஜீவிஷ்யே, நஜீவேயம் என்பன பாட பேதங்கள்.

ஆயினும் திவ்யதேசப்ரஸ்தாவமில்லாத பிரபந்தம் திவ்யப்பிரபந்தமாக மாட்டா தென்று கருதியே மேற்சொன்ன நான்கு பிரபந்தங்களிலும் அந்தந்த ப்ரபந்த கர்த்தாக்கள் திவ்யதேச ப்ரசம்ஸையை ஒருவாறு புகுத்தியுள்ளார்கள். திருப்பல்லாண்டில் அதனைப் புகுத்தியிருக்கிறபடி எங்ஙனேயென்னில், *அல்வழக்கொன்றுமில்லா* என்கிற பாட்டில் செல்வ நம்பியென்னும் ஒரு மஹாநுபாவரை ப்ரஸ்தாவஞ்செய்து அப்பெரியார் திருக்கோட்டியூரில் வாழ்ந்தவர் என்று கூறி இவ்வழியாலே திருக்கோட்டியூரென்னுமொரு திவ்யதேசத்தைப் பேசினாராயினர். *அணிகோட்டியர்கோன்* என்றது காண்க. அணிகோட்டியென்றது திருக்கோட்டியூரேயாம். திருப்பல்லாண்டில் திவ்யதேசப்ரசம்ஸை ஒருவாறு வருவதற்காகவே 'அணிகோட்டியர்கோன்' என்கிற ஸ்ரீஸூக்தி புகுவிக்கப்பட்டது. மேலுள்ளதான பலச்ருதிபாசுரத்தில் 'வில்லிபுத்தூர் விட்டுசித்தன் விரும்பிய சொல்' என்றவிடத்து ஒரு திவ்யதேச ப்ரஸ்தாவமிருந்தாலும் அதனால் த்ருப்தியுண்டாக வழியில்லை.

கண்ணிநுண் சிறுத்தாம்பில் பாசுரந்தோறும் குருகூர் என்று வருவதால் அதிலும் திவ்யதேச ப்ரசம்ஸை ஒருவாறு நிகழ்ந்ததாயிற்று. இராமாநுச நூற்றந்தாதியில் "கோவலுள் மாமலராள் தன்னொடு மாயனை" என்றும் "தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்" என்றும் "பொன்னரங்கமென்னில் மயலேபெருகு மிராமாநுசன்" என்றும் "இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலையென்னும் பொருப்பிடம்" என்றும் ப் [illegible] ங்கிகமாக திவ்யதேசப்ரசம்ஸை செய்திருக்கையாலே அதுதன்னிலும் திவ்யதேசப்ரதிபாதகக் குறையற்றதாயிற்று.

இனி, திருப்பாவையில் இக்குறையில்லாமை விவரிக்கப்படுகிறது. உண்மையில் திருப்பாவையில் ஒரு திவ்யதேசத்தின் ப்ரசம்ஸையும் ப்ராப்தமாகவில்லை. *திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி அங்கு அப்பறைகொண்ட வாற்றை* என்று அக்காலத்தில் கோபிகள் செய்தபடியை அப்படியே அநுகாரஞ்செய்தும் அநுவாதஞ்செய்தும் அருளிச்செய்த பிரபந்தமாதலால் அவ்வாய்ச்சிகள் செய்யாத திவ்யதேச ப்ரசம்ஸையை ஆண்டாள் செய்ய ப்ரஸக்தி யில்லையன்றோ. ஆனால், யசோதைப்பிராட்டி கண்ணனைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டினபடியை அவளுடைய பாவனையினாலே கூறுகின்ற பெரியாழ்வார் *குடந்தைக் கிடந்தானே தாலேலோ* என்றதுபோலவும், ஆய்ச்சிகள் கண்ணபிரான் செய்த தீமைகளை யசோதைப்பிராட்டியிடம் வந்து முறையிட்டபடியைச் சொல்லுமிடத்து *சாளக்கிராமமுடைய நம்பி சாய்த்துப் பருகிட்டுப்போந்து நின்றான்* என்றதுபோலவும். *மன்னு குறுங்குடியாய் வெள்ளறையாய்! மதிள்சூழ் சோலைமலைக்கரசே கண்ணபுரத்தமுதே! ......ஆடுக செங்கீரை* என்று, யசோதைசெய்யாத திவ்யதேச ப்ரசம்ஸைகளை ஆழ்வார் தாம் செய்திருப்பதுபோலவும், திருவாய்மொழியில் *சூழ்விசும்பணிமுகிலில் பரமபதாநுபவங்களைப் பேசுகின்ற நம்மாழ்வார் திவ்யதேசப்ரஸக்தி செய்யவேண்டிய அவசியமில்லாதிருக்கவும் *குடந்தையென் கோவலன் குடியடியார்க்கே* என்று திருக்குடந்தைப்பதியின் ப்ரசம்ஸையைச் செய்திருப்பது போலவும் ஆண்டாளும் திருப்பாவையில் திவ்யதேசப்ரசம்ஸை செய்யக்கருதினால் பலபடியாக அதைப் புகுத்தமுடியாமற்போகாது; *வல்லானை கொன்றானை* என்றும் *மல்லரை மாட்டிய தேவாதிதேவனை* என்றும் திருவாய்ப்பாடியிலுள்ளார் பேசமுடியாதவைகளையிட்டுப் பேசியிருப்பதுபோல* அரங்கத் தரவணைமேல்மர்ந்தானைப்பாட எழுந்திராய்* வேங்கடத்தெம் வித்தகனை யேத்தவாராய்* என்று பேசியிருக்கலாம்; *அன்றிவ்வுலகமளந்தாயடிபோற்றி, சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்போற்றி* என்று வேறவதாரசேஷ்டிதங்களைச் சொல்லி மங்களாசாஸனம் செய்ததுபோல* அரங்கத்தரவணைமேல்மர்ந்

தாயடி போற்றி* மாலிருஞ்சோலையாயனேயடி போற்றி* என்றிங்ஙனே திவ்யதேசப்ரசம்மை பண்ணி மங்களாசாஸனம் செய்திருக்கலாம். கோயிலைப்பற்றின பேச்சு அடியோடில்லாமல் திருப்பாவையை முடித்தது ஏன்? என்று ஆராய்ச்சிசெய்ய ப்ராப்தமாகும். இதற்குத் தெரிவிக்கிறோம்.

கோவில் பேச்சு அடியோடில்லாதிருந்தால் இத்திருப்பாவையைப் பெரியோர்கள் திவ்யப்ரபந்தமாகக்கொண்டு ஆதரித்திருப்பார்களோ? இதில் நான்கிடங்களில் கோவில் பேச்சு அழகாகவுள்ளது. 6. புள்ளரையன் கோயில் வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ? 14. தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார். 16. நாயகனாய் நின்ற நந்தகோப னுடைய கோயில் காப்பானே. 23. உன் கோயில் நின்றிங்ஙனே போந்தருளி. என்னுமிப் பாசுரங்களில் கோயில் ப்ரஸ்தாவம் வந்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது. பொதுவாகக் கோயிலென்று உள்ளதேயன்றி ஒரு திவ்யதேச விசேஷம் சொல்லிற்றில்லையேயென்று குறை யுறவேண்டா; திருவரங்கத்திற்குக் கோயிலென்பதே அஸாதாரணமான வ்யபதேசம். பெரியாழ்வார் தமது திருமொழியில் (2-9-4.) *கொண்டல்வண்ணாவிங்கே போதராயே கோயிற்பிள்ளாயிங்கே போதராயே* என்கிறார். இங்குக் கோயிலென்றது ஸமாநீய வாசக மன்றே; தென்னாடும் வடநாடும் தொழநின்ற திருவரங்கத் திருப்பதியையே யன்றோ விசேஷித்துச் சொல்லுகிறது.

ஆனால் திருப்பாவையில் கோயிலென்றுவந்துள்ள நான்கிடங்களிலும் ஸ்ரீரங்கந்தான் விவக்ஷிதமோவென்று கேட்டுவிடவேண்டா. அர்த்த சக்தியென்பது வேறு, சப்தசக்தி யென்பது வேறு! சப்த சக்தியைப்பற்றின நிர்வாஹமிது. திருவெழுகூற்றிருக்கையில் இரண்டென்கிற லக்கம் வரவேண்டுமிடத்து 'இருமலர்த்தவிசில்' என்றும், நான்கென்கிற லக்கம் வரவேண்டுமிடத்து 'நால்வாய்...வேழம்' என்று மருளிச்செய்தவற்றை இங்கு நினைப்பது. அங்கு, விசாலமான மலர் என்றும், தொங்குகின்றவாயென்றுந்தானே பொருள். சப்த சக்தியன்றோ அங்கு கார்யகரமாவது. அதுபோலக் கொள்க. ஆக, திருப்பாவை யிலும் திவ்யதேசப்ரசம்மை பரிபூர்த்தியாக வுள்ளதென்று நிரூபிக்கப்பட்டதாயிற்று. (63)

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசார்ய ஸ்வாமியின்**

அறுபத்துமூன்று உபந்யாஸமாலை

முற்றிற்று.

# ஆஸ்திகர்களுக்கு அறிவிப்பு.

Released by Maaran's Dog , Toronto , Canada

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கு வேண்டிய ஸகலவிதமான புத்தகங்களும் தமிழ் தெலுங்கு ஸம்ஸ்க்ருத பாஷைகளில் சின்னகாஞ்சீபுரம் க்ரந்தமாலையாபீசில் கிடைக்கும். விரிவான கியாட்லாக் வாங்கிப்பார்க்க. அந்த கியாட்லாக்கில் காணாத புத்தகங்களும் பலவுண்டு; அவற்றில் முக்கியமானவை இதன்கீழ்காண்க. இவையும் காஞ்சீபுரம் க்ரந்தமாலையாபீஸில் கிடைக்கும்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| 1. ஞானஸாரம்-ப்ரமேயஸாரம் ஸப்த காதை இவை உரையுடன் | 1 | 0 |
| 2. எம்பெருமானாரறுபத்திரண்டு, சாரீரகமீமாம்ஸை யறுபத்திரண்டு பகவத்கீதை யறுபத்திரண்டு | 1 | 4 |
| 3. நித்யாநுஸந்தான மூலம் | 1 | 0 |
| 4. ரஹஸ்யார்த்த ஸர்வஸ்வம் (ஸம்ஸ்) | 1 | 0 |
| 5. மாமுனிவனருள்விளக்கு | 0 | 8 |
| 6. தத்வஹிதோபதேசம் | 0 | 4 |
| 7. ஐதிஹ்யநிர்வாஹரத்னமாலை | 1 | 8 |
| 8. சேஷாவதாரச்சிறப்பு | 0 | 8 |
| 9. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம் மூலமும்-உரையும் தமிழ் | 1 | 0 |
| 10. த்ரமிடோபநிஷத் ப்ரபாவஸர்வஸ்வம் | 1 | 8 |
| 11. புரட்டாசித் திருவோணமலரும் ஐப்பசித்திருமூல மலரும் | 1 | 4 |
| 12. கலிவைரிகுரு தசகம், ஸ்ரீவரவரமுனிவைபவ ஸ்தோத்ரம், ஸ்ரீலோகாசார்யஸ்துதி-உரையுடன் | 0 | 6 |
| 13. ஸஹ்ருதய ஹ்ருதயோல்லாஸம் | 0 | 4 |
| 14. முமுக்ஷுப்படி ஸாரார்த்ததீபிகை | 1 | 8 |
| 15. வைராக்யபஞ்சகம் உரை, குசேலோபாக்கியானம் (ஸம்க்ருதகத்யம்) | 0 | 8 |
| 16. ஸ்ரீ. ப்ர. அ. ஸ்வாமியின் திவ்ய வைபவ ஸங்க்ரஹம் முதலியவை | 1 | 2 |
| 17. ஸ்ரீ. ப்ர. அ. ஸ்வாமி ஷஷ்டியப்தபூர்த்தி நினைவுமலர் அபூர்வமான பல வியாஸங்கள் கொண்டது | 2 | 8 |
| 18. பிள்ளையந்தாதி உரை | 0 | 4 |
| 19. அடைக்கலப்பத்து உரை | 0 | 2 |
| 20. தேசிக பக்தி தத்வம் | 0 | 6 |
| 21. ராமாநுஜதயாபாத்ரபத்ய சரிதம் (இது தமிழ், ஸம்ஸ்க்ருதம் ஆங்கிலம் மூன்று பாஷையிலும்) | 1 | 0 |
| 22. பாத்ரபத்யசரித்ரப்ரதிஷ்டா (த) | 0 | 8 |
| ஷை ஸம்ஸ்க்ருதம் | 0 | 8 |
| 23. தேசிகப்ரபந்தவுரையாராய்ச்சி | 0 | 8 |
| 24. நற்போதுபோக்கு | 0 | 6 |
| 25. ஜகமத்யரஸம் | 0 | 6 |
| 26. ஆசார்யவைபவத்விசதி உரையுடன் | 0 | 8 |
| 27. வான்மீகிராமாயணவசனம் (புதிய பதிப்பு) முதல் 4 காண்டங்கள் | )2 | 8 |
| 28. ஷை ஸுந்தரகாண்டம் | 1 | 0 |
| 29. பெருமாள் திருமொழி ஸம்ஸ்க்ருத மொழிபெயர்ப்பு | 1 | 0 |
| 30. பெரியதிருமொழி முதல்பத்து ஸம்ஸ்க்ருதம் | 1 | 0 |
| 31. பெரியவாச்சான்பிள்ளைஸ்தோத்ரம் உரையுடன் | 0 | 2 |
| 32. ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதி (தென்னாசார்ய ஸம்ப்ரதாயார்த்த விசேஷங்கள் யாவும் இதில் மிகவிரிவாக விளங்கும்) | 1 | 8 |
| 33. ஸ்தோத்ரவ்யாக்யாந சோதநம் | 0 | 8 |
| 34. பாதுகாஸஹஸ்ராவதாரதத்வம் | 0 | 8 |
| 35. பேரருளாளன் 14 | 1 | 0 |
| 36. பெரியாழ்வார் திருமொழி ஸம்ஸ்க்ருதம் தெலுங்குலிபி | 1 | 8 |
| 37. ஷை நாகரிலிபி | 3 | 0 |
| 38. தேசிகஸ்தோத்ரங்கள் மூலம் (தெ) | 2 | 0 |
| 39. நாச்சியார்திருமொழி மொழிபெயர்ப்பு ஸம்ஸ்க்ருதம் | 1 | 0 |
| 40. திருமடல்கள், இராமாநுசநூற்றந்தாதி ஸம்ஸ்க்ருதம் | 1 | 0 |
| 41. ஔத்தரதிவ்யதேச திவ்யப்ரபந்த மாலிகை (ஸம்ஸ்க்ருதம்) | 2 | 0 |
| 42. ஷை (தெலுங்கு) | 1 | 0 |
| 43. அழகியமணவாளன் (1-4) | 1 | 0 |
| 44. பாதுகாஸஹஸ்ரம் (தெலு) | 1 | 4 |
| 45. ஸ்ரீராமாநுஜன் (ஆங்கில பத்) 1-4 | 2 | 0 |
| 46. அறுபத்துமூன்று உபந்யாஸமாலை | 1 | 8 |
| 47. வேதாந்தவாரியரும் அண்ணங்கராரியரும் | 0 | 8 |
| 48. வித்வத்வைதிகபூஷணம் | 0 | 4 |
| 49. பஞ்சஸ்தவம் உரையுடன் | 7 | 0 |
| 50. பட்டர் ஸ்ரீஸூக்திகள் யாவும் ஒரே ஸம்புடம் (உரையுடன்) | 7 | 0 |

ஸ்ரீ வேங்கடேச்வரா பிரஸ், காஞ்சீபுரம்.